# அச்சம் தவிர்த்த அண்ணல்

ஜவாஹர்லால் நேரு

தொகுத்தவர் :

டி. கே. மகாதேவன்

மொழி பெயர்ப்பு :

அ. இராமசாமி



தமிழ்நாடு காந்தி நினைவு நிதி,

மதுரை

தமிழ் நாடு காந்தி நினைவு நிதி வெளியீடு – 12
ஆங்கிலத்தில் முதல் பதிப்பு: டிசம்பர் 1960
தமிழில் முதல் பதிப்பு: செப்டம்பர் 1962
,, இரண்டாம் பதிப்பு: ஜுலை 1963

விலை ரூ. 1-25

மாணிக்கம் பிரஸ் சென்னை - 29

# வெளியீட்டாளர் முன்னுரை

மகாத்மா காந்தியின் பண்பு, போதனைகளைப் பற்றித் தலைமை அமைச்சர் ஜவாஹர்லால் நேருவின் சிந்தனைகள் சிலவற்றைத் தொகுத்துக் கூறும் முயற்சியே இச் சிறுநூல். கடந்த கால் நூற்றாண்டுக்கு மேலாக, காந்திஜியைப் பற்றி நேரு பேசியவற்றிலும் எழுதியவற்றிலும் உள்ள எல்லா முக்கியப் பகுதிகளையும் கொண்டு சுருக்கமாய் முதன் முதலாக வெளிவரும் நூல் இது.

ஒரு தொடர்ச்சியான கட்டுரையைப்போல் இந்நூல் அமைக்கப்பட்டுள்ளது. நேருவின் பேச்சிலும் எழுத்திலும் உள்ள நடை—தங்கு தடையில்லாத, ஓட்டமுள்ள, இயற்கையான நடை, வற்புறுத்துவதற்காகக் 'கூறியதைக் கூறுவது' உள்பட—அப்படியே கையாளப்பட்டுள்ளது.

காந்தி நினைவு நிதியின் ஆதரவில் வெளிவரும் "காந்தி மார்க்" என்னும் மும்மாத இதழின் பதிப்பாளர் திரு டி. கே. மகாதேவன் அவர்களின் சீரிய முயற்சியால் இந்நூல் உருவாகியுள்ளது. ஆங்கில மூலத்தை யாவரும் புரிந்துகொள்ளக்கூடிய எளிய, ஆனால் அழகிய நடையில் தமிழாக்கம் செய்துகொடுத்து உதவியவர் திரு. அ. இராமசாமி அவர்கள். இவர் இதற்கு முன்னும் காந்தியடிகள் எழுதிய சில நூல்களைத் தமிழில் வடித்துத் தந்துள்ளார். இவருடைய மொழி பெயர்ப்பு, மொழி பெயர்ப்பாக இல்லாமல் ஒரு மூல நூல் போன்றே இருப்பதை வாசகர்கள் பலர் பாராட்டியுள்ளனர். இந்நூலும் அதேபோன்று அமைந்துள்ளது. இவரின் நன்முயற்சிக்கு எங்கள் நன்றி.

காந்தி நினைவு நிதியின் சார்பில் வெளிவந்துள்ள பல நூல்களை வாங்கி ஆதரித்த தமிழர் உலகம், காந்தியடிகளையும் அவரைப் பற்றி எழுதியுள்ள ஜவாஹர்லால் நேரு அவர்களையும் அறிந்துகொள்ள உதவும் இந்த நூலையும் அவ்வாறே ஆதரிக்குமென்பதில் எங்களுக்கு ஐயமில்லை.

—**தமிழ்நாடு காந்தி நினைவு நிதியார்.**

## மூல நூல்கள்

(கால வரிசைக் கிரமப்படி)

1. உலக வரலாற்றில் சில காட்சிகள்.
2. சுய சரிதம்.
3. இந்தியாவும் உலகமும்: கட்டுரைகள்
4. நான் கண்ட இந்தியா
5. சுதந்திரமும் அதற்குப் பின்பும்: சொற்பொழிவுகள்.
6. 'ஹரிஜன்', 2 பிப்ரவரி 1948
7. ஜவாஹர்லால் நேருவின் பேச்சுக்கள் : 1949-1953.
8. ஜவாஹர்லால் நேருவின் பேச்சுக்கள் : 1953 மார்ச்சிலிருந்து 1957 ஆகஸ்ட் வரை.
9. 'காந்தி மார்க்', ஜூலை 1959.
10. 1960 சுதந்திர தினத்தன்று செங்கோட்டையில் தலைமை அமைச்சர் நிகழ்த்திய சொற்பொழிவின் நாடாப் பதிவு.

# பொருளடக்கம்

"இந்தியாவை நான் நேசிக்கிறேன். அதற்குச் சேவை செய்ய விரும்புகிறேன். பூகோள ரீதியாக அது பெரிய நாடு என்பதனுல் அல்ல. கடந்த காலத்தில் பெருமை மிக்க நாடாக இருந்தது என்பதனுலும் அல்ல. இன்று அதன் மீது நான் வைத்துள்ள நம்பிக்கையினுல்தான். சத்தியம், சுதந்திரம் மற்றும் வாழ்க்கைக்கு வேண்டிய உயர்ந்த பொருள்கள்...... காந்திஜி நம்முன் வைத்த பெரிய லட்சியங்கள், குறிக்கோள்கள்...ஆகியவற்றின் சின்னமாக அது விளங்கும் என்று நான் உறுதியான நம்பிக்கை வைத்திருப்பதனுல்தான்."

—ஜவாஹர்லால் நேரு.

# 1. காந்திய சகாப்தம்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்துப் பதினாறு. அப்போது தான் முதன் முதலாக நான் பாபுவைப் பார்த்தேன். அதன்பின் முப்பத்திரண்டு ஆண்டுகள் பறந்து சென்றுவிட்டன; *ஒரு சகாப்தமே கடந்துவிட்டது. இப்போது திரும்பிப் பார்த்தால், எத்தனையோ நினைவுகள் அலை அலையாக மனதில் தோன்றுகின்றன.

**முதல் சந்திப்பு**

இந்தியாவின் வரலாற்றில் எவ்வளவு விந்தையான காலம் இது! இக்காலத்தில் எத்தனையோ உயர்வுகளும் தாழ்வுகளும், வெற்றிகளும் தோல்விகளும் ஏற்பட்டுள்ளன. எனினும் இதைப்பற்றிய கதை, ஒரு வீர காவியமாகவே திகழ்கிறது. இக்காலத்தில் நாம் வாழ்வதால், இந்தியாவின் இம் மாபெரும் நாடகத்தில் சிறிதளவோ, பெருமளவோ நாமும் பங்கெடுத்துக் கொண்டதால், நம்முடைய அற்ப வாழ்க்கைகள் கூட வீர ஒளி வீசிப் பிரகாசிக்கின்றன.

**வீர காவியம்**

இக்காலத்தில், போர்களும் கொந்தளிப்புகளும் நிறைய ஏற்பட்டிருக்கின்றன. உலகெங்கிலும் அதிர்ச்சியூட்டத்தக்க நிகழ்ச்சிகள் நடந்திருக்கின்றன. அவைகளில், இந்தியாவில் நடைபெற்றுள்ள நிகழ்ச்சிகள் மட்டும் தனித்தன்மை வாய்ந்தவை. ஏனெனில், இங்கு அவை முற்றிலும் வேறுபட்ட முறையில் நடைபெற்றுள்ளன. பாபுவைப்பற்றிச் சரிவரத் தெரியாமல் ஒருவன்

---

* 1948-இல் எழுதப் பெற்றது.

இக்காலத்தைப்பற்றிப் படிப்பானாயின், இவைகளெல்லாம் எப்படி இந்தியாவில் நிகழ்ந்தன, ஏன் தான் நிகழ்ந்தன என்றெல்லாம் ஆச்சரிய மடைவான். இவைகளையெல்லாம் நாம் விளக்குவ தென்பது மிகவும் கடினமாகும். ஒவ்வொருவரும் ஏன் அம்மாதிரி நடந்துகொண்டார்கள் என்பதைப் பகுத்தறிவால் மட்டும் புரிந்து கொள்வதோ இன்னும் அதிகக் கடினமானதாகும். உணர்ச்சிப் பிரவாகத்தில் தனிப்பட்ட ஒரு மனிதரோ அல்லது தேசமோ ஒரு குறிப்பிட்ட செயலில் இறங்குகிறார்கள். சில சந்தர்ப்பங்களில் அது கண்ணியமான நடவடிக்கையாக இருக்கிறது; பல தடவைகளில் அது கௌரவக் குறைவான செயலாகவும் அமைந்துவிடுகிறது. எனினும் அந்த ஆத்திரமும் உணர்வும் விரைவில் நீங்கிய பின் மனிதன் தனது வழக்க நிலைக்குத் திரும்பிவிடுகிறான்.

**உணர்வும் நடவடிக்கையும்**

இக்கால இந்தியாவைப்பற்றிய,வியப்பளிக்கக்கூடிய ஒன்று என்னவென்றால், நாடு முழுவதுமே மிக உயர்ந்த முறையில் செயல்பட்டது என்பதாகும். இவ்வாறு உயர்ந்த நிலையில் நாடு மிகநீண்டகாலம் தொடர்ச்சியாகச் செயல் பட்டதென்பது மிகவும் வியப்பளிக்கக் கூடியதே. இது ஒரு மகத்தான சாதனை என்பதிலும் சிறிதும் ஐயமில்லை. இக்காலத்தை உருவாக்கிய அம் மாபெரும் மனிதரை ஒருவர் அறிந்தாலொழிய, இதை எளிதாகப் பிறருக்கு விளக்கவோ அல்லது தாமே புரிந்துகொள்ளவோ முடியாது. ஒரு மாமனிதராக இவர் இந்திய வரலாற்றில் சுமார் அரை நூற்றாண்டுக் காலம் வியாபித்திருக்கிறார். உடலில் இவர் பலசாலி அல்ல; மனதில், ஆன்மாவில் இவர் மாபெரும் மனிதராவார்.

**காந்தியைப் புரிந்தால் காலம் புரியும்**

பாபுவை இழந்ததற்காக நாம் துக்கப்படுகிறோம். அவரை இழந்ததால், நாம் அனாதையாகிவிட்டதாக உணர்கிறோம். ஆனால், அவருடைய மகத்தான வாழ்க்கையைத் திரும்பிப் பார்த்தால், நாம் அழுவதற்கு என்ன இருக்கிறது? தங்களுடைய வாழ்நாளிலேயே இவ்வளவு காரியங்களைச் சாதிக்கக்கூடிய வாய்ப்பு, வரலாற்றில் ஒரு சிலருக்குத்தான் கிடைத்திருக்கும் என்பதில் ஐயமில்லை. நம்முடைய குறைகளைக் கண்டு அவர் மனம் வருந்தினார். இன்னும் உயர்ந்த நிலைக்கு இந்தியாவை உயர்த்த முடியவில்லையே என்று கவலைப்பட்டார். அந்தக் கவலையும் வருத்தமும் நாம் எளிதாக அறியக்

**வெற்றி வாழ்க்கை**

கூடியனவே. ஆயினும் அவர் வாழ்க்கையை, ஒரு தோல்வியென்று யாரால் சொல்ல முடியும்? அவர் தொட்டதையெல்லாம் "பொன்னாக்கினார்". அவர், செய்த காரியங்களெல்லாம் - அவர் எதிர்பார்த்த அளவு இல்லையென்றாலும் - உருப்படியான பலன்களை அளித்தன. அவர், எந்த முயற்சியில் ஈடுபட்டாலும் அதில் தோல்வியடைய மாட்டார் என்ற கருத்துத்தான் நமக்கு ஏற்பட்டது. கீதையின் போதனைகளுக்கு ஏற்ப, பலன்களை எதிர்பாராது, பற்றின்றி அவர் உழைத்தார். அதனால் பலன்கள் அவரை நாடி வந்தன.

அவருடைய நீண்ட வாழ்க்கை, கடினமான உழைப்பும் நிறைந்த செயல்களும் கொண்டது. குப்பையிலிருந்து மாணிக்கத்தைப் பொறுக்கி எடுப்பது போன்று, சாதாரண மக்களைக்கொண்டு பல புதுமையான, புரட்சிகரமான முயற்சிகளில் அவர் ஈடுபட்டார். ஆயினும், இவ்வளவு செயல்களையும் கொண்ட அவரது நீண்ட வாழ்க்கையில் எந்தக் கட்டத்திலும் அபஸ்வரம் என்பதே இல்லை. அவருடைய பல்வேறு செயல்களும் இனிமையான நாதம் அளிக்கும் கீதமாக அமைந்தன. அவர்

பேசிய ஒவ்வொரு சொல்லும், அவருடைய ஒவ்வொரு தலையசைப்புங்கூட, இந்த இசைக்கு இயைந்தே நடைபெற்றன. ஆகையால், தாம் அறியாமலே அவர் ஒரு பூரண கலைஞராக விளங்கினார். இதற்குக் காரணம் என்ன? உலகத்தின் போக்கிலிருந்து அவர் வாழ்க்கை வேறுபட்டதாக இருந்தது என்றாலும், வாழ்க்கைக் கலையை அவர் நன்றாக அறிந்திருந்தார் என்பதேயாகும். வாழ்க்கை இவ்வாறு கலையுடன் அமைய அவருக்கு உதவியவைகளில் தலைமையானவை, அவர் கடைப்பிடித்த சத்தியமும் நற்பண்புமேயாகும்.

**"அபஸ்வரம்" இல்லாத வாழ்க்கை**

அவர் வயது முதிர முதிர, உள்ளேயிருந்த மாபெரும் ஆன்மாவைத் தாங்கும் சாதனமாக மட்டும்தான் அவருடைய உடல் இருந்தது. அவர் பேசுவதைக் கவனித்தவர்களுக்கோ அல்லது அவரைப் பார்த்தவர்களுக்கோ அவருடைய உடலைப்பற்றிய எண்ணமே வராது. ஆகையால் அவர் அமர்ந்த இடம் ஒரு ஆலயமாயிற்று; பாதங்கள் பட்ட இடம் புனிதமடைந்தது.

**அவர் இருந்த இடம் ஆலயம்**

அவருடைய சாவில்கூட கம்பீரமும் கலையழகும் நிறைந்திருந்தன. எந்த வகையில் பார்த்தாலும் அவருக்கும், அவர் வாழ்ந்த வாழ்க்கைக்கும் அந்தச்சாவு பொருத்தமானதாகும். உண்மையைக் கூறப்போனால், அவருடைய வாழ்க்கை கற்பித்த பாடத்தை மேலும் அது வலியுறுத்தியது. தம்முடைய சக்தி நிறைந்திருந்த ஒரு காலத்தில் அவர் இறந்தார். அவர் விரும்பிய நேரத்திலும் (பிரார்த்தனை வேளையில்) அவர் இறந்தார் என்பதில் ஐயமில்லை. இந்தியாவின் ஐக்கியத்திற்காகத் தமது

**ஏன் கவலை**

உயிரையே அவர் பலி கொடுத்தார். இந்த ஐக்கியத்தை ஏற்படுத்தியே ஆக வேண்டுமென்று அவர் எப்போதும் பாடுபட்டார்; ஓயாது ஒழியாது இதற்காகவே உழைத்து வந்தார். அதிலும் குறிப்பாக, தம்முடைய வாழ்நாளின் கடைசி நாட்களில் அவர் மிக அதிகமாக உழைத்தார். அவர் திடீரென இறந்தார்; எல்லா மனிதர்களும் இவ்வாறு திடீரென இறக்கத்தான் விரும்பவேண்டும். வயதின் காரணத்தால் அவருக்கு மனம் தெளிவற்றுப் போகவில்லை; நீண்ட கால உடல் நோய் பீடிக்கவில்லை, அல்லது மறதி ஏற்பட்டு விடவில்லை. ஆகவே ஏன்தான் நாம் அவருக்காக வருந்த வேண்டும்?

நம்முடைய குருவாக அவர் விளங்கினார். அவருடைய ஒவ்வொரு அடிச் சுவடும் நமக்கு ஒளியைத் தந்தது. அவருடைய புன்முறுவல் நமக்கு உற்சாகத்தை அளித்தது. அவருடைய கண்களில் மகிழ்ச்சி நிறைந்த ஒளி வீசியது. அவரைப் பற்றி நாம் நினைக்கும் போதெல்லாம் இவ்வித காட்சிகள்தான் நம் முன்னால் தோன்றும். சக்தி இழந்த உடல் அல்லது மனம் உள்ளவராக அவர் நம் மனக்கண் முன் தோன்ற மாட்டார். அவர் வாழ்ந்த போதும் சரி, அவர் மறைந்த போதும் சரி, அவருடைய பலமும் சக்தியும் உச்ச நிலையிலேயே இருந்தன. ஆகவே, நமக்கும் நமது சகாப்தத்துக்கும் அவர் விட்டுச் சென்ற குறிக்கோள் ஒருகாலும் மறைந்துவிட முடியாது.

**ஒவ்வொரு அடிச் சுவட்டிலும் ஒளி**

அந்தக் குறிக்கோள் மங்காது. இவையெல்லாம் காட்டிலும் நமக்கு அவர் மகத்தான காரியம் ஒன்றைச் செய்துள்ளார். அவர் நம்முடைய மனதிலும் உயிரிலும் புகுந்து அவைகளை மாற்றி, நன்கு உருவாக்கியிருக்கிறார். காந்தி தலைமுறை மறைந்து போகலாம். ஆனால், அவர் செய்த

செயல் நிலேத்து நிற்கும். அது இந்தியாவின் பண்பாட்டில் ஒரு பகுதியாகிவிட்டதால், பின்னல் வரப்போகும் ஒவ்வொரு தலேமுறைக்கும் பயனளிக்கும். இந்த நாட்டில் நாமெல்லோரும் ஊக்கம் குன்றிப்போயிருந்த காலத்தில், பாபு வந்தார். நம்மை ஊக்குவித்தார்; வலுவூட்டினர். அவர் அளித்த பலம் ஒரு க்ஷண நேரத்திலோ அல்லது ஒரு நாளிலோ அல்லது ஒரு ஆண்டிலோ மறைந்துவிடக் கூடியதல்ல. நம்முடைய தேசீய பரம்பரையின் நிலேயான சொத்தாக அது நங்கூரம் பாய்ச்சிவிட்டது.

**காந்திஜியின் அரும் செயல்**

இந்தியாவுக்கும் உலகத்துக்கும், ஏன், தனிப்பட்ட நமக்குக்கூட, பாபு மகத்தான பணி புரிந்திருக்கிருர். யாரும் பார்த்து வியப்படையக் கூடியவாறு சிறந்த முறையிலும் இதை ஆற்றியிருக்கிருர். ஆகவே, இனிச் செய்ய வேண்டிய வேலேயெல்லாம் நம்முடையதுதான். அவருக்கோ அவருடைய நினேவுக்கோ தகுதியற்ற முறையில் நம் வேலே இருக்கக் கூடாது. அவர் செய்த பணியை நம்முடைய முழுத் திறமையுடன் தொடர்ந்து மேற்கொள்வோம். நாம் அடிக்கடி எடுத்துக் கொண்டுள்ள உறுதி மொழிகளே முற்றிலும் நிறைவேற்றுவோம்.

**தொடர்ந்து மேற்கொள்வோம்**

## 2. மனிதர் காந்தி

உடல் வலிமை இல்லாத இந்தச் சிறிய மனிதர், உள்ளத்தில் எஃகுப் போன்றவராய் இருந்தார். பலம் பொருந்திய சக்தியையும், அசைக்க முடியாத மலை போன்ற திண்மையையும் பெற்று விளங்கினர். (முழங்கால் அளவுக்கு ஒரு துண்டைக் கட்டியிருந்த கோலமும், மேலே துணி போடாதிருந்த தோற்றமும் பிறரைக் கவராது இருந்திருக்கலாம். ஆயினும் பிறரை மனமுவந்து சிரந் தாழ்த்த வைக்கும் மன்னருக்குரிய கம்பீரமும் ஆற்றலும் அவரிடம் குடி கொண்டிருந்தன. அவர் தாமாக முன்வந்து அமரிக்கையாகவும் பணிவாகவும் நடந்து கொண்டாராயினும் அவரிடம் பிறரைப் பணிய வைக்கும் சக்தி நிறைந்திருந்தது. அதை அவரும் அறிவார். சில சமயம், நாம் பணிந்தே தீரவேண்டிய கட்டளைகளை மன்னர் போன்று அவர் பிறப்பிப்பார். அவருடைய அமைதியான, ஆழ்ந்த கண்கள் யாரையும் கட்டுப்படுத்திவிடும். சிறிது சிறிதாகப் பிறர் உள்ளத்தில் அவர் பார்வை பாயும். தெளிவான அவருடைய குரலோ, நம்முடைய இதயத்தில் பாய்ந்து, அவர் கூறுவதை மனப்பூர்வமாக ஏற்குமாறு செய்து விடும். கூட்டத்திலிருப்பவர்கள் ஒருவராக இருந்தாலும் சரி, ஆயிரம்பேராக இருந்தாலும் சரி, அவருடைய கவர்ச்

**அவருடைய கவர்ச்சி**

சியும் ஈர்க்கும் சக்தியும் அவர்களை அவர்பால் இழுத்துவிடும். ஒவ்வொருவரும், தமக்கே அவர் பேசுவது போல் உணருவார்கள். இந்த உணர்வுக்கும் மனதுக்கும் சம்பந்தமேயில்லை. இதனல் மனதை அவர் கவரவில்லை என்று நான் கூறுவதாகக் கொள்ள வேண்டாம். இங்கு மனதிற்கும் பகுத்தறிவுக்கும்

இரண்டாம் இடம் தான். சொற்பொழிவுத் திறனாலோ அல்லது அழகான சொற்றொடர்களைக் கூறி மயக்கியோ அவர் இவ்வாறு நம்மை "மெய் மறக்க"ச் செய்யவில்லை. அவர் பேசிய சொற்கள் எளிதானவை; விஷயத்தை விட்டுக் கொஞ்சமும் அவர் அப்பால் செல்லமாட்டார்; அனாவசியமான வார்த்தை ஒன்றுகூட அவரிடமிருந்து வராது. அவர் முற்றிலும் மனமாரப் பேசுகிறார் என்பதும், அவருடைய மனிதப் பண்பும்தான் நம்மைக் கவர்ந்து கொள்கின்றன. பிரமிக்கத்தகும் அளவு சக்தி அவருக்குள் மறைந்திருக்கிறது என்றுதான் யாரும் உணருவார்கள். அவரைச் சுற்றி வளர்ந்த ஒரு மரபு இதற்கான சூழ்நிலையை உருவாக்க உதவியிருக்கலாம். இந்த மரபை அறியாத ஒரு அந்நியன், இந்தச் சூழ்நிலையுடன் ஒத்துப் போக முடியாதவன், ஒரு வேளை அவரால் கவர்ச்சி செய்யப் படாமல் இருக்கலாம்; அல்லது, மற்றவர்கள் அளவு கவர்ச்சி செய்யப்படாமல் இருக்கலாம். ஆயினும் காந்திஜிக்கு, அவருடைய எதிர்ப்பாளர்களைப் பணிய வைக்கும் திறன் இருந்தது. குறைந்தது அவர்களை, தம்மை எதிர்க்கும் சக்தியற்றவர்களாக ஆக்கிவிடுவார். காந்திஜியிடமிருந்த குறிப்பிடத்தக்க சக்திகளில் இதுவும் ஒன்று.

அவர் பணிவுள்ளவராக இருந்தார்; அதே சமயத்தில் "வெட்டு ஒன்று; துண்டு இரண்டு" என்ற தெளிவுள்ளவராகவும் இருந்தார். இனிமையானவர், இன்சொல் பேசக் கூடியவர். அதே சமயம் அவர் வைரத்தைப்போன்று உறுதியானவர்; வளைந்து கொடுக்கமாட்டார். நாம் பிரமிக்கத்தக்கவாறு காரியத்தில் கண்ணாயிருப்பார். அவருடைய கண்கள், மென்மையான—ஆனால் ஆழமான — பார்வையுடையவை. அவைகளில் சக்தியும் உறுதியும் கொழுந்துவிட்டெரிந்தன.

**வைரம் போன்ற உறுதி**

அவருடைய குரல் அடக்கமானது, அமைதியானது. ஆயினும், பெருங் கூட்டத்தின் இரைச்சலுக்கிடையி லும் அதை நாம் கேட்டுவிடலாம். அக்குரல் மென்மை யானது, பண்புள்ளது. ஆனால், அதே சமயம் அதில் எங்கோ எஃகுப் போன்ற உறுதி மறைந்துகிடந்தது. அது இணக்கமானது; நம்மைக் கவரும் சக்தி நிறைந் தது. இருப்பினும் அதில் கடுமையும், பிறரைப் பய மடையவைக்கும் தன்மையும்கூடக் கலந்திருந்தன. அவர் பயன்படுத்திய ஒவ்வொரு சொல்லிலும் பொருள் நிறைந் திருந்தது; ஆழ்ந்த அக்கறை இருந்தது. அமைதியும் நல் லுறவும் கொண்ட அப்பேச்சிலே வலிமை இருந்தது;

**பேச்சின் வலிமை**

துடிப்புள்ள செயல் திறன் இருந்தது; தவ றுக்குப் பணியாத உறுதி இருந்தது. இப் போது நமக்கு அந்தக் குரல் பழக்கமாகி விட்டது. கடந்த பதினைன்கு ஆண்டுகளில் நாம் அதைப் பன்முறை கேட்டிருக்கிறோம்* ஆனால் 1919-ஆம் ஆண்டு பிப்ரவரியிலும் மார்ச்சிலும் அது நமக்குப் புதிதாக இருந்தது. அதிலிருந்து நாம் என்ன பயன் பெற முடியும் என்பது அப்போது நமக்குச் சரிவரத் தெரியவில்லை. என்றாலும் நம்மை அது மயிர் சிலிர்க்கச் செய்தது. ஒருவரையொருவர் தாக்கிப் பேசும் கூச்சல் நிறைந்த அரசியலில் நாம் ஈடுபட்டுக்கொண்டிருந்தோம். நீண்ட பேச்சுகள், வீணை, பயனற்ற எதிர்ப்புத் தீர்மா னங்கள் - ஆகியவைதான் நாம் கையாண்ட அரசியல். இந்தத் தீர்மானங்களையும் நாம் அவ்வளவு அக்கறையுடன் எடுத்துக் கொண்டதில்லை. ஆனால், காந்திஜி கூறிவந்த அரசியல் இதிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக இருந்தது.

பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு மட்டுமல்லாமல், அவ ருடைய சொந்த நாட்டு மக்களுக்கும், ஏன், அவருடன்

* 1934-ஆம் ஆண்டு எழுதப்பெற்றது.

நெருங்கிப் பழகியவர்களுக்கும்கூட அவர் எவ்வளவு பெரிய புதிராக இருந்திருக்கிறார்! ஒரு வேளை வேறு எந்த நாட்டிலும் இன்று அவர் காலத்திற்கு ஒவ்வாதவராக இருப்பார்.* ஆனால், இன்றுகூட சமயச்சார்புள்ள தீர்க்க தரிசனம் வாய்ந்த மகான்களையும், பாபத்தைப் பற்றியும், மோட்சம், அஹிம்சையைப் பற்றியும் பேசுபவர்களையும் இந்தியா புரிந்துகொள்ளுகிறது; புரியாவிடினும் பாராட்டுகிறது. தங்களுடைய வேள்வி

**அபூர்வ சக்தி**

யாலும் தவ வலிவாலும் புண்ணியத்தைப் பெருக்கிக் கொண்டு, பின்னர் சிறு தெய்வங்களின் சாம்ராஜ்யங்களைக் கவிழ்த்து, தர்மத்தைச் சீர்குலைத்த பெரிய ரிஷிகளைப் பற்றிய கதைகள் இந்தியப் புராணங்களில் இருக்கின்றன. வற்றாத ஆன்மிகக் கடலிலிருந்து வருவது போன்று காந்திஜியின் சக்தி வெளிவந்ததை நான் கண்டபோது, இந்த இந்தியப் புராணக் கதைகள் எனது நினைவுக்கு வந்ததுண்டு. நிச்சயமாக, அவர் உலகின் சாதாரண மக்கள் இனத்தைச் சேர்ந்தவரல்லர், வேறு அபூர்வ வகையைச் சேர்ந்தவர் ஆவார். பல முறைகளில் காந்திஜி கண்களின்மூலம் இறைவனே நம்மைப் பார்த்தான்.

எண்ணிப் பார்த்தால், காந்திஜி எவ்வளவு ஆச்சரியமான மனிதர்! மக்கள் மீது அவர் செலுத்திய கவர்ச்சியும் நுண்ணிய ஆதிக்கமும்தான் என்னே! அவருடைய சொல்லும் எழுத்தும் அந்த உயர்ந்த மனிதரைப் பூரணமாக எடுத்துக் காட்டவில்லை. அவைகளைக்கொண்டு ஒருவர் அவரை மதிப்பிடுவதைக் காட்டிலும் அவர் எவ்வளவோ உயர்ந்தவராக விளங்கினார். இந்தியாவுக்கு அவர் செய்த சேவைகள் எவ்வளவு மகத்தானவை! இந்திய மக்களுக்குத் தைரியத்தையும் ஆண்மையையும் கொடுத்தார்; ஓர் உயர்ந்த இலட்சியத்திற்காகப் பணிவுடனும்

* 1936-இல் எழுதியது.

**தைரியம், கட்டுப்பாடு**

பெருமையுடனும் மகிழ்ச்சியுடனும் தியாகம் செய்யும் சக்தியை ஊட்டினார்; கட்டுப்பாட்டையும் சகிப்புத் தன்மையையும் போதித்தார். நல்லொழுக்கத்துக்குத் தைரியமே அஸ்திவாரம் என்று அவர் கூறியிருக்கிறார். தைரியமில்லாமல் தார்மிகம் இல்லை, சமயம் இல்லை, அன்பில்லை. ஒருவனுக்குப் பயம் இருக்கும்வரை அவன் சத்தியத்தையோ அன்புவழியையோ கடைப்பிடிக்க முடியாது. இம்சையை அவர் எவ்வளவோ வெறுத்து ஒதுக்கியுள்ளார். என்றாலும், "இம்சையைக் காட்டிலும் கோழைத்தனம் வெறுக்கத் தக்கது" என்று கூறியுள்ளார். மேலும், "ஒரு மனிதன் காரியத்தில் கண்ணாயிருக்கிறான் என்றால் அவன் எடுத்துக்கொள்ள வேண்டிய பிரதிக்ஞை கட்டுப்பாடு ஆகும். தியாகம், கட்டுப்பாடு, தன்னடக்கம் இல்லாமல் விமோசனமோ நம்பிக்கையோ இல்லை. கட்டுப்பாடு இல்லாத தியாகம் பயன் அளிக்காது" என்று அறிவுரை கூறியிருக்கிறார். இவைகள் எல்லாம் சொற்கள்தான்; அழகான சொற்றொடர்கள் தான்; மேலும் கூறினால் 'வேதாந்த'ப் பேச்சுக்கள் தான். ஆயினும், இச்சொற்களில் சக்தி இருந்தது. இந்தச் சிறு மனிதர் சொன்னதைச் செய்வார் என்பதை இந்தியா அறிந்திருந்தது.

நாமெல்லாம் வியப்படையக் கூடிய அளவில் அவர் இந்தியாவின் பிரதிநிதியாக விளங்கினார். சித்திரவதைக்குள்ளான இந்தப் புராதன பூமியின் ஆன்மாவை அப்படியே அவர் பிரதிபலித்தார். ஏறத்தாழ அவரே இந்தியாவாகக் காட்சியளித்தார். அவருடைய தோல்விகள் இந்தியாவின் தோல்விகளாக இருந்தன. அவரை யாரும் அவமதித்தால் அது தனிப்பட்ட அம்மனிதரை அவமதித்ததல்ல. இந்த தேசத்தையே அவமதித்ததாகும். இவ்வாறு அவமதிக்கும் செயல்

களில் ஈடுபட்ட வைசிராய்களும் மற்றவர்களும், தாங்கள் எவ்வித நச்சுவிதைகளை விதைத்துவந்தார்கள் என்பதை உணரவில்லை. 1931 டிசம்பரில் காந்திஜி வட்டமேசை மகாநாட்டிலிருந்து திரும்பியபோது, அவருக்குப் பேட்டியளிக்கப் போப்பாண்டவர் மறுத்துவிட்டார். இதை அறிந்தவுடன் நான் எவ்வளவு துன்பப்பட்டேன் என்பது இன்னும் எனக்கு நன்ருக நினைவிருக்கிறது. இவ்வாறு போப்பாண்டவர் பேட்டி தர மறுத்தது இந்தியாவுக்குச் செய்யப்பட்ட அவமரியாதை என்று நான் நினைத்தேன். வேண்டுமென்றே போப்பாண்டவர் இவ்வாறு மறுத்திருக்கிருர். ஒரு வேளை இதனுல் ஏற்படக் கூடிய அவமதிப்பை அவர் எண்ணு திருந்திருக்கலாம். கத்தோலிக்க மதத்தினர், தங்களுடைய சமயப் பிரிவுக்கு வெளியே உள்ள முனிவர்கள் அல்லது மகாத்மாக்களை ஒப்புக்கொள்வது கிடையாது. மேலும், சில பிராட்டஸ்டண்ட் கிறிஸ்தவர்கள், காந்திஜியை சமயப் பெரியார் என்றும் உண்மையான கிறிஸ்தவர் என்றும் கூறிவிட்டதால், சமயக் கோட்பாட்டுக்கு முரணை இக் கருத்திலிருந்து தன்னை ரோம் விலக்கிக் கொள்ள வேண்டியது இன்னும் அவசியமாக இருந்தது.

**அவர்தான் தேசம்**

காந்திஜியை நேரடியாக அறியாதவர்கள் – அவர் எழுதியவைகளை மட்டும் படித்தவர்கள் – அவர் ஒரு வரட்டுச் சாமியார், கடும் ஆசாரமுள்ளவர், சுடுமூஞ்சி, விதியில் நம்பிக்கையுள்ளவர், அழுது வழியும் மனிதர், மொத்தமாகச் சொன்னுல் காவியுடை அணிந்த சாமியார்களைப் போன்று நடமாடித் திரிபவர் என்று எண்ணுவார்கள்.

**அவர் எழுத்து**

அவர் எழுதியவை அவருக்கு அநீதி இழைத்து விட்டன என்றே சொல்ல வேண்டும். அவர் எழுதியவற்றைக் காட்டிலும் மிகமிக உயர்ந்த மனிதர் அவர்.

அவர் எழுதியவைகளை மட்டும் வைத்துக்கொண்டு அவரைக் குறை கூறுவது அவ்வளவு நியாயமாகாது. விதியில் நம்பிக்கையுள்ள வரட்டுச் சாமியாருக்கு நேர் எதிரானவர் அவர். அவருடைய புன்சிரிப்பு புளகாங்கிதமளிக்கும். அவருடைய சிரிப்போ நம்மையே ஊடுருவிப் பாய்ந்துவிடும். மகிழ்ச்சி அவரிடமிருந்து ஒளிவீசிப் பிரகாசிக்கும். அவரிடமிருந்த குழந்தைத் தன்மை இன்பம் நிறைந்தது. அவர் ஒரு அறைக்குள் புகுந்து விட்டால், அங்கு அவருடன் வரும் புத்துணர்ச்சி, பிறருடைய கவலையை யெல்லாம் போக்கிவிடும்.

**செயலில் கலையழகு**

காந்திஜி இயற்கை அழகைப் புகழ்ந்தாராயினும் மனிதனால் செய்யப்பட்ட பொருள்களின் அழகு அவரைக் கவரவில்லை. அதேசமயம், அவருடைய தனிவழியில் வாழ்க்கைக் கலையை அவர் கண்டு பிடித்துவிட்டார். தமது வாழ்க்கையைக் கலையழகு நிறைந்த ஒன்றாகச் செய்தார். அவருடைய ஒவ்வொரு அசைப்பிலும் பொருள் இருக்கும். தீமையின் சாயலே யில்லாத கண்ணியம் இருக்கும். அவரிடம் முரட்டுத்தனமோ, கொடுஞ்சொல்லோ இல்லை. தீவினைப் பயனை, நம்முடைய மத்தியதர வர்க்கத்தினர் அசகாயசூரர்களாய் இருக்கிறார்களே! அந்த நாகரிக மற்ற போக்கோ அல்லது தனிச் சிறப்பற்ற தன்மையோ அவரிடம் இல்லை. உள்ளத்தின் அமைதியைத் தாம் கண்டதால், அவர் அதைப் பிறருக்கும் அளித்தார். துன்பங்கள் மிகுந்த வாழ்க்கைப் பாதையில் அஞ்சா நெஞ்சத்துடன், உறுதியான அடி வைத்து அவர் நடந்து சென்றார்.

தேசிய இயக்கத்தின் சமய, ஆன்மீக அம்சங்களைக் காந்திஜி தொடர்ந்து வலியுறுத்தி வந்தார். அவருடைய

சமயம் வெறும் வாய் வேதாந்த மல்ல. அதில் வாழ்க்கையைப் பற்றிய திட்டவட்டமான

**சமயக் கண்ணோட்டம்**

அடிப்படை இருந்தது. தேசிய இயக்கம் முழுவதிலுமே இதன் சாயல் நிறைந்திருந்தது. பொதுமக்களைப் பொறுத்த வரை இது ஒரு மறுமலர்ச்சி இயக்கமாக இருந்தது.

இந்துக்கள், முஸ்லிம்கள் ஆகிய இரு தரப்பினரும் அரசியலில் சமயத்தை மேலும் மேலும் புகுத்தி வருவதைக் கண்டு நான் சில சமயம் கவலை அடைந்திருக்கிறேன். இதை நான் கொஞ்சங்கூட விரும்பவில்லை. மௌல்விகளும் மௌலானுக்களும் சுவாமிகளும் பொதுச் சொற்பொழிவுகளில் கூறியவற்றில் பல, மிகவும் துரதிருஷ்டவசமானவை. அவர்கள் கூறிய வரலாறு, சமூக சாஸ்திரம், பொருளாதாரம் ஆகிய எல்லாமே எனக்குத் தவருகப்பட்டன. ஒவ்வொரு விஷயத்தையும் மத அடிப்படையில் திரித்துக் கூறியதால் தெளிவான சிந்தனை முற்றிலும் தடைப்பட்டது.

**அரசியலில் மதம்**

காந்திஜி சொன்னவற்றில் சிலவற்றைக்கூட நான் விரும்பவில்லை. அவை என் காதில் கடூரமாக ஒலித்தன. உதாரணமாக, (மீண்டும் நாம் அடைய வேண்டிய பொற்காலமென) இராமராஜ்யத்தைப்பற்றி அவர் அடிக்கடி குறிப்பிட்டதை இங்கே கூறலாம். ஆனால், அதைத் தடுப்பதற்கு நான் சக்தி யற்றவனுக இருந்தேன். இந்தச் சொற்ருெடர்கள் நன்கு பழக்கப்பட்டவைகளாக இருந்ததாலும், இவைகளைப் பொதுமக்கள் நன்கு புரிந்திருந்ததாலும் காந்திஜி பயன்படுத்துகிருர் என்று எண்ணி என்னையே நான் சமாதானம் செய்துகொண்டேன். மக்களின் உள்ளத்தைத் தொடுவதற்கான அற்புத சக்தி அவரிடம் இருந்தது.

அவரைப் புரிந்து கொள்வது மிகவும் கடினம். ஒரு சாதாரண, நவநாகரிக மனிதன், அவரைப் புரிந்துகொள்

வது சில சமயம் இயலாததாகவும் இருந்தது. எனினும் அவர் ஒரு மாபெரும் மனிதர், ஈடு இணையற்ற மனிதர், மகத்தான தலைவர் என்பதை உணரும் அளவுக்கு நாம் அவரை அறிந்திருந்தோம். அவரிடம் நமது முழு நம்பிக்கையையும் வைத்திருந்தோம். அவர் கூறுவதைப்பற்றி விமர்சனம் செய்து கொண்டிருக்கவில்லை. அவர் ஆணைகளை ஏற்றுக் கொண்டோம்; தற்காலிகமாகவாகிலும் நாம் அவற்றை ஒப்புக்கொண்டோம்.*

**அவர் மீது முழு நம்பிக்கை**

நம்மில் பலர், அரசியலிலும் மற்ற விஷயங்களிலும் அவரோடு மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தோம். ஆதலால் மதத்துறையில்கூடப் பூரணமாக-அவருடைய செல்வாக்கிலிருந்து விடுபட்டிருக்க முடியவில்லை. நேரடியான தாக்குதல் வெற்றி யடையாதபோது, மறைமுகமாக அணுகுவது, எதிர்தரப்பினர் பலத்தைக் குறைப்பதற்கு அதிகமாக உதவியிருக்கிறது. சமயத்தின் மேற்போக்கான அம்சங்கள் என்னைக் கவரவில்லை. இவைகளுக்கெல்லாம் மேலாக, சமயவாதிகள் என்று கூறித் திரிபவர்கள் மக்களைச் சுரண்டுவதை நான் வெறுத்தேன். ஆயினும் நான் என்னுடைய எதிர்ப்பு உணர்ச்சியைப் படிப்படியாகக் குறைத்துக்கொண்டேன்.

**சமயமும் விட்டதா ?**

நம்முடைய இயக்கத்திலும் சத்தியாக்கிரகத்திலும் இருந்த தார்மிக, அறநெறி அம்சங்கள் என்னைக் கவர்ந்தன. அஹிம்சைத் தத்துவத்தை நான் பூர்ணமாகவோ, நிரந்தரமாகவோ ஏற்றுக்கொள்ளவில்லை. ஆயினும், அது என்னை மேலும் மேலும் கவர்ந்தது. இந்தியாவில் நாமிருக்கும் சூழ்நிலையில், நம்முடைய பின்னணியையும்

* 1936-இல் எழுதியது.

பரம்பரையையும் எண்ணும்போது, இதுதான் சரியான கொள்கை என்ற ஒரு நம்பிக்கை எனக்கு ஏற்பட்டது. குறுகிய சமயக் கண்ணோட்டத்துடன் அல்லாமல், அரசியலை ஆன்மிக மயமாக்குவது, ஒரு நல்ல கருத்தாகவே எனக்குப்பட்டது. ஓர் உயர்ந்த இலட்சியத்துக்கு ஓர் உயர்ந்த மார்க்கம் வேண்டும். இது ஒரு நல்ல அறநெறித் தத்துவம். அது மட்டுமல்லாது குறையில்லாத நடைமுறை அரசியலுமாகும். ஏனெனில், தவறான மார்க்கம் பல முறைகளில் இலட்சியத்தைக் கெடுத்துவிடுவதுடன், பல புதுப் பிரச்னைகளையும் கஷ்டங்களையும் ஏற்படுத்திவிடுகிறது. ஆகவே ஒரு தனிப்பட்ட மனிதரோ அல்லது தேசமோ இப்படிப் பட்ட மார்க்கத்தைக் கடைப்பிடித்துச் சேற்றில் வீழ்வ தானது, அவர்களுடைய சுயமரியாதைக்கு இழுக்கை யும், தாழ்வையும் தேடிக்கொடுப்பதாகும். அதனால் மாசுபடாது ஒருவன் எவ்வாறு தப்பிக்க முடியும்? நாம் குனிந்து, மண்டியிட்டு நடப்போமானால் எவ்வாறு வேக மாக அணிவகுத்துச் செல்ல முடியும்?

**மார்க்கமும் இலட்சியமும்**

காந்திஜி அடிப்படையில் ஒரு சமயவாதி, முழுக்க முழுக்க ஒரு இந்து. ஆனால், அவருடைய சமயத்துக்கும் வேறு எந்தத் தத்துவத்துக்குமோ, சமயாசாரம் அல்லது சடங்குக்குமோ எவ்வித சம்பந்தமுமில்லை. அவருடைய சமயத்தின் அடிப்படை அறநெறியில் அவர் கொண்டிருந்த உறுதியான நம்பிக்கைதான். இதை அவர், சத்தியம் அல்லது அன்புநெறி என்று கூறினார். "சத்தியமும் அஹிம்சையும் ஒன்றே, அல்லது அவை ஒன்றின் இரு வேறு அம்சங்களே" என்று அவர் கூறியுள்ளார். இந்த இரண்டு சொற்களையும் அதிக

**சத்தியமும் அஹிம்சையும்**

வேற்றுமையின்றி ஒன்றுக்குப்பதில் மற்றொன்றாக அவர் மாற்றி மாற்றி உபயோகித்தார்.

இந்து மதத்தின் சாரத்தைத் தாம் புரிந்து கொண்டிருப்பதாக அவர் உரிமை கொண்டாடினார். தம்முடைய இலட்சிய வியாக்கியானத்திலிருந்து மாறுபடும் எந்த அற நூல் வாசகத்தையும், அல்லது நடைமுறைக் கருத்தையும் 'இடைச் செருகல்கள், பின்னால் வந்தவை' என்று கூறி மறுத்து விடுவார். "தார்மிக அடிப்படையில் நான் புரிந்து கொண்டு ஆதரிக்க முடியாத பண்டைக் கருத்துக்கள் அல்லது அனுஷ்டானங்களுக்கு நான் அடிமையாக மாட்டேன்" என்று அவர் கூறியிருக்கிறார். ஆகவே, தாம் விரும்பிய மார்க்கத்தைத் தேர்ந்தெடுக்கவும், அதற்கு ஏற்றவாறு தம்மை மாற்றிக்கொள்ளவும், தம்முடைய வாழ்க்கைத் தத்துவத்தையும் நடவடிக்கையையும் உருவாக்கிக் கொள்ளவும் அவருக்கு முழு உரிமை இருந்தது. ஆனால், இவைகளுக்கெல்லாம் ஒரு நிபந்தனை உண்டு. இவையெல்லாம், அவர் கருத்தின்படி தார்மிக நெறிக்குப் புறம்பாகப் போகக் கூடாது. அந்தத் தத்துவம் சரியா, தவறா என்ற வாக்குவாதம் எழலாம். ஆனால்,

**அவர் "அளவுகோல்"**

ஒவ்வொன்றையும், குறிப்பாகத் தாம் கூறுபவற்றை இந்த அறநெறி அடிப்படையிலேயே "அளந்து" முடிவு செய்யவேண்டுமென வற்புறுத்தினார். வாழ்க்கையின் மற்ற அம்சங்களைப் போலவே அரசியலில் இது சாதாரண மனிதனுக்குக் கஷ்டத்தை ஏற்படுத்தியது; பல சந்தர்ப்பங்களில் குழப்பத்தையும் விளைவித்தது. ஆனால், எந்தக் கஷ்டத்துக்காகவும் தாம் வகுத்திருந்த நேரான பாதையிலிருந்து அவர் விலகிச் செல்லவில்லை. நிலைமையின் மாறுதலுக்கு ஏற்ப ஒரு குறிப்பிட்ட எல்லைவரையறைக்குள், அவர் அவ்வப்போது

அனுசரித்து நடந்துகொண்டார் என்பது உண்மையே. பிறருக்காக அவர் கூறிய ஒவ்வொரு சீர்திருத்தத்தையும், ஒவ்வொரு அறிவுரையையும் அவர் அப்படியே தாமும் அனுஷ்டித்தார். எப்பொழுதும், தாம் முதலில் ஒன்றைச் செய்த பிறகே, பிறரையும் அதைச் செய்யுமாறு அவர் கூறுவார். கைக்கு உறை எவ்வளவு பொருத்தமாக அமைகிறதோ அதைப்போன்று அவருடைய சொற்களும் செயல்களும் அமைந்தன. ஆகவே என்ன நடந்தாலும் சரி அவருடைய நேர்மையிலிருந்து அவர் தவறவில்லை. அவருடைய வாழ்க்கையிலும் சேவையிலும் ஒரு முழுமைத் தன்மை இருந்தது. அவருடைய தோல்விகள் போன்று தோன்றியவற்றிலும், அவருடைய பெருமை உயர்ந்தது.

தமது சொந்த அபிலாஷைகளின்படியும் இலட்சியங்களின்படியும் அவர் உருவாக்க விரும்பினுரே அந்த நவ இந்தியா எவ்வாறு விளங்க வேண்டும்? "நான் உருவாக்க விரும்பும் இந்தியாவில், பாமர ஏழைகளும் இது தங்கள் நாடு என உணருவார்கள். அதன் முன்னேற்றத்தில் தங்களுக்கும் ஒரு பங்கு இருக்கிறதென்பதை அறிவார்கள். அங்கு மக்களிடையே உயர்ந்த சாதியினர், தாழ்ந்தவர் என்ற பாகுபாடு இருக்காது. எல்லா வகுப்பினரும் பரிபூரண ஒற்றுமையுடன் வாழ்வார்கள்... அந்த இந்தியாவில் தீண்டாமை, போதையூட்டும் குடிவகைகள் என்ற சாபக்கேடுகள் இருக்கமாட்டா... பெண்களும் ஆண்களுக்குச் சமமான உரிமைகளை அனுபவிப்பார்கள்... என் மனக்கண்ணில் உருவாகும் இந்தியா இதுதான்" என்று அவர் கூறியிருக்கிருர்.

**அவர் லட்சிய இந்தியா**

இந்து மதத்தில் தாம் பிறந்ததற்காக அவர் பெருமையடைந்தார். ஆகையால் உலகமெல்லாம் அதை ஏற்

றுக்கொள்ளுமாறு செய்வதற்காக அதற்குஓர் உருவத்தை அளிக்க அவர் முயன்றார். (எல்லா மதங்களையும் சத்தியம் என்னும் பிணைப்புக்குள் ஒன்று சேர்த்தார். "இந்தியக் கலாசாரம் என்பது முற்றிலும் இந்துக் கலாசாரமோ அல்லது முஸ்லிம் கலாசாரமோ அல்லது வேறெந்தக் கலாசாரமுமோ அல்ல" என்று அவர் எழுதினார், மேலும் அவர் சொன்னார்: "எல்லா

**கலாசார அடிப்படை**

நாட்டுக் கலாசாரங்களும் எனது இல்லத்துக்குள் வரவேண்டும். ஆனால் எனது சொந்தக் கலாச்சாரத்தை அவை அடித்துக் கொண்டு போவதை நான் ஏற்கமாட்டேன். நான் மற்றவர்களுடைய வீடுகளில் ஒரு ஒண்டிக் குடியாகவோ, பிச்சைக்காரனாகவோ அல்லது அடிமையாகவோ வாழ விரும்பவில்லை" என்று கூறியிருக்கிறார். அவர் வாழ்க்கையில் தற்கால சிந்தனை ஓட்டங்கள் எவ்வளவோ இருந்தும்கூட, அவர் தமது கலாசார அடிப்படையை உறுதியாகக் காப்பாற்றி வந்தார்.)

ஆகவே, மக்களின் ஆன்மிக ஐக்கியத்தை மீண்டும் ஏற்படுத்த அவர் முயன்றார். மேலைநாட்டு மனோபாவம் பொருந்திய ஒரு சிலருக்கும் பாமர மக்களுக்கும் இடையே யுள்ள பெரிய இடைவெளியைப் போக்கப் பாடுபட்டார். பழைய கலாசாரத்தில் மடிந்து போகாத அம்சங்களைக் கண்டு பிடித்து மீண்டும் அவைகளைப் பெருக்கி வளர்ப்பதற்கு முற்பட்டார். பொதுமக்களை அவர்களுடைய தூக்கத்திலிருந்தும் தேக்க நிலையிலிருந்தும் எழுப்பி அவர்களைச் செயல் வீரர்களாக்கினார். ஒரே பாதையில் அவர் சென்றபோதிலும், அவர் சேவையில் பல்வேறு வகைப்பட்ட அம்சங்கள் இருந்தன. அவைகளிலெல்லாம் ஒருவருக்கு அழுத்தமாகப் படக்கூடியது, பாமர மக்களுடன் அவர் தன்னை ஒன்றுபடுத்திக் கொண்ட முறைதான். அவர்களுடன் அவர் ஆன்மிக ரீதியாக ஒன்றுபட்டார்.

இந்தியாவில் மட்டுமல்ல, உலகெங்கிலும் இருந்த ஏழை களுடன் அவர் ஒன்றுபட்ட முறை நம்மைப் பிரமிக்க வைப்பதாகும். எல்லா விஷயங்களுமே, ஏன் சமயம்கூட, ஏழை மக்களைக் காப்பாற்ற வேண்டுமென அவர் கொண் டிருந்த பேராவலுக்கு அடுத்தபடி யாகத்தான் அவர் வாழ்க்கையில் இடம் பெற்றிருந்தன. "அரைப் பட்டினியால் வாடும் ஒரு நாட்டு மக்களுக்கு மதமோ, கலையோ, கட்சியோ இருக்க முடியாது. பட்டினியால் வாடும் கோடிக்கணக்கான மக் களுக்கு எது நன்மை அளிக்குமோ அதுதான் எனக்கு அழகானதாகத் தோன்றுகிறது. முதலில் வாழ்க்கைக்கு அத்தியாவசியமாக வேண்டிய வசதிகளைக் கொடுப் போம். அதன் பின்பு அழகுப் பொருள்களும், கலைப் பொருள்களும் தாமே பின்தொடரும்......கோடிக்கணக் கான மக்களுடைய உள்ளங்களைத் தொடும் இலக்கியங் களும் கலைகளும்தான் எனக்கு வேண்டும்" என்று அவர் கூறினர். துன்பம் நிறைந்த கோடிக்கணக்கான இந்த ஏழை மக்கள் எப்போதும் அவருடைய சிந்தனையில் இருந்தார்கள்; இவர்களை அடிப்படையாக வைத்துத் தான் மற்றவைகளைப் பற்றி அவர் எண்ணி வந்தார். "கோடிக்கணக்கான மக்களுக்கு இது ஒரு நிரந்தர எழுச்சியாகவோ அல்லது நிரந்தரத் தூக்கமாகவோ இருக்கிறது." "ஒவ்வொருவர் கண்ணிலிருந்து வரும் கண்ணீரையும் துடைக்க வேண்டுமென்பதே எனது விருப்பம்" என்று அவர் கூறினர்.

**பாமர மக்களுடன் ஒன்றுபட்டார்**

பேராச்சரியம் அடையக்கூடிய அளவு ஜீவசக்தி நிறைந்த இந்த மனிதர், முழுக்க முழுக்கத் தன்னம்பிக்கை உடையவராக இருந்தார். அசாதாரண சக்தி உடையவ ராக இருந்தார். எல்லோருக்கும் சமத்துவமும் சுதந்திர மும் இருக்கவேண்டும் எனப் பாடுபட்டார். (கீழ்க்கோடி

யிலுள்ள ஏழை மக்களை அடிப்படையாகக் கொண்டே இந்தக் காரியங்களையெல்லாம் செய்தார்.) ஆகவே, இந்தியாவிலுள்ள பாமர மக்களையெல்லாம், காந்தம் இரும்பைக் கவருவதுபோல், அவர் கவர்ந்ததில் வியப்பொன்றும் இல்லை. கடந்த காலத்தையும் இனிவரும் காலத்தையும் இணைப்பவராக அவர் ஏழை மக்களுக்குத் தோன்றினார். இருள் சூழ்ந்த இக்காலத்தை ஒரு படியாக்கி, வாழ்வும் நம்பிக்கையும் உள்ள எதிர்காலத்துக்கு மக்களை அழைத்துச் செல்பவராகவும் அவர் விளங்கினார். பாமர மக்கள் மட்டுமல்லாமல், படித்தவர்களும் அவரால் கவரப்பட்டார்கள்.

**மனோநிலையில் பெரும் மாறுதல்**

படித்தவர்களுடைய மனம் பல சமயங்களில் தொல்லைக்குள்ளாகியிருந்தது. அவர்கள் வாழ்நாள் முழுதும் கடைப்பிடித்த பழக்க வழக்கங்களை மாற்றிக் கொள்ளுவது கடினமாக இருந்தது. எனினும், அவர்களும் அவரால் கவரப்பட்டனர். இவ்வாறாக இந்திய மக்களின் மனோநிலையில் அவர் ஒரு பெரிய மாற்றத்தை ஏற்படுத்தினார். தம்முடைய தலைமையை ஆதரித்தவர்களிடம் மட்டுமல்லாது, தம்முடைய எதிர்தரப்பினரிடமும், தீர்க்கமான ஒரு முடிவுக்கோ செயலுக்கோ வர இயலாது, எதிலும் சாராது இருந்தவர்களின் மனோநிலையிலும்கூட அவர் மாறுதலை ஏற்படுத்தினார்.

# 3. காந்திஜி விரும்பிய சமுதாயம்

காந்திஜி கருத்தில் கொண்ட ஜனநாயகத்தில் எண்ணிக்கைக்கு முக்கியத்துவம் இல்லை. சாதாரணமாக நாம் வழங்கும் பெரும்பான்மை, பிரதிநிதித்துவம் என்பவற்றுக்கெல்லாம் அதில் இடமில்லை. காந்திஜியின் ஜனநாயகம் சேவையையும் தியாகத்தையும் அடிப்படையாகக் கொண்டது; தார்மிக பலத்தையே அது செலுத்தும். "நான் ஒரு பிறவி ஜனநாயகவாதி" என்று அவர் உரிமை பாராட்டிப் பேசியுள்ளார். "மனித வர்க்கத்தில் மிக மிகக் கீழான கட்டத்தில் உள்ள பாமர ஏழைகளுடன் ஒன்றுபட்டவன் என்ற முறையிலேயே நான் இந்த உரிமை பாராட்டுகிறேன். அவர்களைக் காட்டிலும் நன்றாக வாழ நான் விரும்பவில்லை. தன்னுடைய திறமையை எல்லாம் பயன்படுத்தி அந்த நிலையை அடைய மனப்பூர்வமாக ஒருவன் முயன்றால் இந்த உரிமை பாராட்டலாம். அதையே நான் செய்கிறேன்" என்று அவர் கூறினர். ஜனநாயகத்தைப் பற்றி அவருடைய வியாக்கியானம் இதுதான்.

**காந்திஜியின் ஜனநாயகம்**

அவர் மேலும் கூறினர்: "காங்கிரசில் உள்ள ஜனநாயக அம்சமும் செல்வாக்கும், அதன் வருடாந்தர மகாநாடுகளுக்கு வரும் பிரதிநிதிகள், பார்வையாளர்கள் ஆகியோருடைய எண்ணிக்கையைப் பொறுத்ததல்ல; அது மேலும் மேலும் அதிகமாகச் செய்துவரும் சேவையைப் பொறுத்ததே என்பதை நாம் உணர வேண்டும். மேல்நாட்டு ஜனநாயக முறை இப்போது சோதனைக் கட்டத்தில் இருக்கிறது. அது தோல்வி

**மேல்நாட்டு ஜனநாயகம்**

யடைந்து விட்டது என்றுங் கூறலாம். ஆகவே, உண்மையான ஜனநாயகத்தை நடைமுறையில் வெற்றி யடையச் செய்து, ஜனநாயகத்தின் உண்மை இலக்கணம் இதுதான் என்பதை நாம் உலகிற்கு எடுத்துக் காட்ட வேண்டும்.

"லஞ்சமும் பாசாங்கும்தான் இன்று ஜனநாயகத் தின் விளைவுகளாய் இருக்கின்றன என்பதில் ஐயமில்லை. ஆனால், அவை தவிர்க்க முடியாதவையல்ல. அதே சமயம், மக்கள் எண்ணிக்கையைப் பெரிதாகக் காட்டுவதும் உண் மையான ஜனநாயகத்தின் அடையாளமாகாது. மக் களின் உணர்வு, நம்பிக்கை, அபிலாஷை ஆகியவைகளை ஒரு சிலர் பிரதிபலித் தால் அது ஜனநாயகத்திற்கு முரணா னது அல்ல. கட்டாய முறைகளின் மூலம் ஜனநாயகத்தை உருவாக்க முடியாது என்பது எனது கருத்து. வெளியிலிருந்து ஜனநாயகத்தைப் புகுத்த முடியாது. உள்ளேயிருந்து அது வளரவேண்டும்" என்றும் காந்திஜி ஜனநாயகத்தை விளக்கியுள்ளார்.

**ஜனநாயகமும் ஊழல்களும்**

அவர் கூறுவது போன்று, இது நிச்சயமாக மேற்கு நாட்டு ஜனநாயகமல்ல. ஆனால், பொதுவுடைமையர் ஜனநாயகத்தைப் பற்றிக் கொண்டுள்ள கருத்துடன் இதற்குச் சில ஒற்றுமைகள் இருக்கின்றன. பொதுமக் கள் தங்களுடைய தேவைகளை அறியமாட்டார்களென்ரு லும் தாங்கள் அவர்களுடைய தேவைகளையும் விருப்பங்களை யும் பிரதிபலிப்பதாகச் சில பொதுவுடைமையர் உரிமை கொண்டாடுவார்கள். ஆனால், இந்த ஒற்றுமை மிகவும் குறைவு; அது வெகு தூரம் செல்லாது. அணுகும் முறை யிலும் கண்ணோட்டத்திலும், குறிப்பாக, வழி துறைகளி

**பொதுவுடைமையருடன் சில ஒற்றுமைகள்**

லும் இம்சையா அஹிம்சையா என்பதிலும் எவ்வளவோ வேறுபாடுகள் இருக்கின்றன.

**அவர் ஒரு "விவசாயி"**

காந்திஜி ஒரு ஜனநாயக வாதியோ இல்லையோ, அவர் இந்திய விவசாய மக்களின் பிரதிநிதியாக விளங்கினார். கோடிக்கணக்கான மக்கள் உள்ளத்தின் உருவமாக அவர் விளங்கினார். மக்களின் பிரதிநிதி என்பதைக் காட்டிலும் மிக உயர்ந்த நிலையிலேயே இருந்தார். கோடிக் கணக்கான மக்களின் "இலட்சிய புருஷர்" அவரே. நிச்சயமாக அவர் ஒரு சாதாரண விவசாயி அல்ல. கூர்மையான புத்தியும், நுண்மையான உணர்ச்சியும், அருஞ்சுவை உணர்வும், பரந்த திருஷ்டியும் கொண்ட மனிதர் அவர்; மனிதத் தன்மை நிறைந்தவர். ஆனால், அதே சமயம், தனது ஆசைகளையும் உணர்ச்சிகளையும் அடக்கி, அவைகளை ஆன்மிக வழிகளில் செலுத்தி உயர்த்திய துறவி அவர். மக்களைக் காந்தம் போன்று இழுத்து அவர்களை ஆழ்ந்த விசுவாசமும் பற்றுதலும் கொள்ளச் செய்த மிகப் பெரிய மனிதர். இவைகளெல்லாம் ஒரு சாதாரண விவசாயியினுடைய சக்திக்கு அப்பாற்பட்ட, அவனுடைய குணாம்சங்களுக்கு மாறுபட்ட பண்புகள். ஆயினும், இவைகளெல்லாம் இருந்துங்கூட, காந்திஜி ஒரு மிகப் பெரிய விவசாயி. உலக விவகாரங்களில் அவருக்கு ஒரு விவசாயியின் கண்ணோட்டம் இருந்தது. வாழ்க்கையின் சில அம்சங்களில் விவசாயிகளைப்போன்ற "குருட்டு நம்பிக்கை"யும் கொண்டிருந்தார். ஆனால், இந்தியாவே விவசாய இந்தியா தான். ஆகவே அவருடைய இந்தியாவை அவர் நன்றாக அறிந்திருந்தார். அதனுடைய மிகச் சிறிய துன்பங்களை அவர் உணர்ந்து அதற்கு ஏற்றபடி நடந்தார். ஒவ்வொரு நிலைமையும் சரியாகவும், இயற்கையாகவும் அவரால் அறிய முடிந்தது. (சரியான

தருணத்தில் செயலில் இறங்கும் தனித் திறமையும் அவருக்கு இருந்தது.

**செயலில் புரட்சி வீரர்**

கொள்கை அடிப்படையில் பார்த்தால், சில சமயம் அவர் மிகப் பெரிய பிற்போக்கு வாதியாக இருந்தார். ஆனால், செயலை எடுத்துக் கொண்டால், அண்மைக் காலத்தில் இந்தியாவில் பிறந்தவர்களில் அவரே மிகப் பெரிய புரட்சிவாதி. அவர் ஒரு ஈடு இணையற்ற மனிதர். சாதாரணமாக மனிதரை அளக்கும் அளவு கோல்களை அவருடைய விஷயத்தில் பயன் படுத்த முடியாது. சாதாரண தர்க்கவாத உண்மைகளையும் அனுஷ்டிக்க இயலாது. அவர் அடிப்படையிலேயே ஒரு புரட்சி வாதியாக இருந்தாலும், இந்தியாவின் விடுதலைக்காகப் பாடுபட உறுதி பூண்டிருந்ததாலும், சுதந்திரம் அடைந்த வரை தமது இலட்சியத்தைத் தளர்த்துவதென்ற பேச்சிற்கே அவர் இடமளிக்கவில்லை. இந்த இலட்சியப் போராட்டத்தில் மக்கள் சக்தியை அவர் மகத்தான அளவில் உருவாக்கினார். அவரும் சோசலிச இலட்சியத்தை நோக்கிப் படிப்படியாக முன்னேறிச் செல்வார் என்று நான் ஓரளவு நம்பியிருந்தேன்.

**"திண்ணை வேதாந்தி"கள் குற்றச்சாட்டு**

சோசலிச திண்ணை வேதாந்திகள் காந்திஜியை மிகவும் கண்டிப்பார்கள். அவர், "அப்பட்டமான பிற்போக்குவாதி" என்பார்கள். தர்க்க அடிப்படையில் நல்ல வாதங்களைக் கூறுவார்கள்; அதை மறுத்துக் கூறுவதும் கடினமாக இருக்கும். ஆனால், ஓர் உண்மை என்னவென்றால், இந்தப் "பிற்போக்குவாதி" இந்தியாவை அறிந்திருந்தார்; நன்கு புரிந்திருந்தார்; கிட்டத்தட்ட அவரே "விவசாயிகள் இந்தியா"வாக விளங்கினார் எந்தப்

புரட்சிவாதியும் செய்திராத அளவில் இந்தியாவை ஆட்டிப் படைத்தார்.

அவர் புரட்சிவாதியோ — பிற்போக்குவாதியோ — இந்தியாவின் தோற்றத்தையே மாற்றியமைத்துவிட்டார். நெஞ்சில் உரமின்றிச் சீர்குலைந்து போயிருந்த மக்கள், பெருமை உணர்வும், ஒழுக்க உணர்வும் கொள்ளுமாறு செய்தார். மக்கள் மத்தியில் பலத்தையும் விழிப்புணர்ச்சியையும் ஏற்படுத்தினர். இந்தியப் பிரச்னையை உலகப் பிரச்னையாக்கினர். இலட்சியமும் அதன் நுண்மையான விளைவுகளும் ஒருபுறம் இருக்க, அவர் வகுத்துக்கொடுத்த அஹிம்சா பூர்வமான ஒத்துழையாமை இயக்கமும், சட்ட மறுப்புப் போராட்டமும், இந்தியாவுக்கும் உலகிற்கும் அவர் அளித்த ஈடு இணையற்ற ஆயுதங்களாகும். அவை இந்தியாவின் சூழ்நிலைகளுக்கு மிகப் பொருத்தம் வாய்ந்தவையாக இருந்தன என்பதில் ஐயமே யிருக்க முடியாது.

**அவர் அளித்த ஆயுதங்கள்**

பொதுவாக, அவருடைய வாழ்க்கைக் கண்ணேட்டத்துக்கும், நவீன வாழ்க்கைக் கண்ணேட்டம் என்று கூறப்படுவதற்கும் இடையே அடிப்படையான வேறுபாடு இருக்கிறது என்பது உண்மை. ஆன்மிக, தார்மிகக் கோட்பாடுகளைப் பலி கொடுத்து வாழ்க்கைத் தரத்தையும் ஆடம்பரத்தையும் மேலும் மேலும் சில நாடுகளில் உயர்த்திக் கொண்டு போவதைக் கண்டு அவர் பொருமைப்படவில்லை. பஞ்சணை மெத்தை போன்ற வாழ்க்கையையும் அவர் விரும்பவில்லை. 'நேரான வாழ்க்கை என்பது கஷ்டம் உள்ள வாழ்க்கை; ஆடம்பரத்தின் மீது ஆசை கொள்வது குறுகிய புத்திக்கும் தார்மிகம் சீர்கெடுவதற்கும்தான் இடம் அளிக்கிறது' என்பது அவர்

கருத்து. வாழ்க்கை வசதிகளிலும், வளம் பெறுவதற்கான வாய்ப்புகளிலும் ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கும் இடையே உள்ள பெரிய ஏற்றத்தாழ்வைக் கண்டு அவர் அதிர்ச்சி யடைந்தார். தமது சொந்த மனத்திருப்திக் காக, அவர் இந்த இடைவெளியைத் தாண்டி, ஏழைகளின் பக்கம் சேர்ந் தார். ஏழைகளுக்கு மட்டுமே கட்டுபடி யாகக் கூடிய வாழ்க்கை வசதிகளை அவர் ஏற்றுக்கொண்டார். அவர்களுடைய வாழ்க்கை வழிகளைக் கடைப்பிடித்தார்; எளிய ஆடைகளை அணிந் தார். ஒரு சில பணக்காரர்களுக்கும், ஏராளமான ஏழை களுக்கும் இடையே உள்ள இந்தப் பெரிய வேறுபாட் டுக்கு இரண்டு முக்கியமான காரணங்கள் இருக்கின்றன என்று அவர் கருதினர். வெளிநாட்டு ஆட்சியும் அதனல் ஏற்பட்ட சுரண்டலும் இக்காரணங்களில் ஒன்று, பெரிய யந்திரங்களைப் பிரதானமாகக் கொண்ட மேற்கு நாட்டு முதலாளித்துவ இயந்திர நாகரிகம் மற்றொன்று. இந்த இரண்டையும் அவர் எதிர்த்தார். (பழைய சுயாட்சி பொருந்தியதும், தன்னிறைவு பொருந்தியதுமான கிராம சமுதாயம்—உற்பத்தி, விநியோகம், நுகர்வு ஆகிய மூன் றிலும் இயற்கையாகவே சமநிலை இருந்த சமுதாயம்-தற் போது உள்ளதைப் போல் குவியலாக இல்லாமல் அர சியல், பொருளாதார பலம் பரவலாக இருந்த சமுதாயம் —ஒரு வகையான எளிய ஜனநாயகம் அமலில் இருந்த சமுதாயம்—பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்குமிடையே உள்ள வேறுபாடு இவ்வளவு குறிப்பிடத்தக்க அளவில் இல்லாதிருந்த சமுதாயம்—பெரிய நகரங்கள் உருவாவ தால் ஏற்படக் கூடிய தீமைகள் அற்றிருந்த சமுதாயம்— உணவு கொடுக்கும் பூமியை உழுது, திறந்த வெளிகளில் சுத்தமான காற்றில் மக்கள் வாழ்ந்த சமுதாயம்-மீண்டும் மலராதா என்று அவர் ஆவலுடன் எதிர்பார்த்தார்.)

**அவர் விரும்பிய சமுதாயம்**

வாழ்க்கையைப் பற்றிய கண்ணோட்டத்திலும் அவருக்கும் மற்றும் பலருக்கும் இந்த அடிப்படையான கருத்து வேறுபாடுகள் இருந்தன. அவருடைய பேச்சிலும் செயலிலும் இந்த வேறுபாடு தெரிந்தது. அவர் பேச்சு தெளிவாகவும் சக்தி நிறைந்ததாகவும் இருந்தது. இந்தியாவிலும் மற்ற நாடுகளிலும் உள்ள மத, நீதி, நெறி போதனைகளின் அருள் அவர் பேச்சில் நிறைந்திருந்தது. "தர்மம் நிச்சயமாக வெற்றி பெற்றே தீரும்; இலட்சியத்திற்கு உகந்த மார்க்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். இல்லையேல் தனிப்பட்ட மனிதருக்கு மட்டுமல்லாது மனித இனத்திற்கே அழிவு ஏற்பட்டுவிடும்" என அவர் எச்சரித்தார்.

**அருள் நிறைந்த வாக்கு**

ஆயினும் அவர் வெறும் கற்பனை வாதியல்ல. வாழ்க்கையிலிருந்தும் வாழ்க்கைப் பிரச்னைகளிலிருந்தும் துண்டித்துக்கொண்டு, தமது சொந்தக் கற்பனையான ஏதோ ஒரு உலகத்தில் அவர் வாழவில்லை. உலக ஞானத்தில் ஊறிப்போயுள்ள வணிகர்கள் நிறைந்த குஜராத்தில் பிறந்தவர் அவர். இந்தியாவிலுள்ள கிராமங்களைப்பற்றியும் அங்குள்ள வாழ்க்கை நிலையைப்பற்றியும் வேறு எவருக்கும் இல்லாத ஞானம் அவருக்கு இருந்தது. அந்தச் சொந்த அனுபவத்தினால்தான் இராட்டையையும் கிராமக் கைத்தொழில் திட்டங்களையும் அவர் கண்டுபிடித்தார். வேலையில்லாத் திண்டாட்டத்தில் இருப்பவர்களுக்கும், போதுமான வேலையில்லாது இருப்பவர்களுக்கும் உடனடியாக நிவாரணம் அளிக்கவேண்டும். இந்தியா முழுவதிலும் பரவி, மக்களைச் செயலற்றுப் போகும் நிலைக்குள்ளாக்கும் இந்த நோயைத் தடுத்து நிறுத்த முயலவேண்டும். கிராமங்களில் உள்ள எல்லா மக்களின் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்த வேண்டும். அகதிகளைப்போன்று பிறரிட

மிருந்து உதவியை எதிர்பார்த்துக் காத்துக் கிடக்கும் நிலைமையைப் போக்கி, அவர்களுக்குத் தன்னம்பிக்கை உணர்வை ஏற்படுத்த வேண்டும். இவைகளையெல்லாம் அதிக மூலதனமின்றிச் செய்ய வேண்டும். அப்படியானல், அவர் வழியைத் தவிர வேறு வழியே இல்லை. வெளிநாட்டு ஆட்சியில் ஏற்பட்ட தீமைகளும், சுரண்டலும், பெரிய திட்டங்கள் சீர்திருத்தங்கள் ஆகியவற்றைத் தொடங்கி நிறைவேற்ற முடியாத நிலைமையும் ஒருபுறம் இருக்க, இந்தியாவினுடைய முக்கியப் பிரச்னை, மூலதனம் இல்லாததும், தொழிலாளர்கள் அளவுக்குமீறி அதிகமாக இருப்பதும் ஆகும். ஆகவே தற்போது, உற்பத்தியில் ஈடுபடாது வீணுகப் போகும் மனித சக்தியை—உழைப்பாளிகளை எவ்வாறு பயன்படுத்துவது என்பதே பிரச்னை.

**அவர் வழியே சாத்தியம்**

மனித சக்தியையும் யந்திர சக்தியையும் ஒப்பிட்டுக் கூறுவது அறிவீனம். ஒரு பெரிய யந்திரம் ஆயிரம் அல்லது பத்தாயிரம் பேர்களின் வேலையைச் செய்ய முடியும் என்பது உண்மையே. ஆனல் அந்தப் பத்தாயிரம் பேரும் வேலையில்லாமல் உட்கார்ந்து பட்டினி கிடக்குமாறு செய்து அந்த யந்திரத்தைப் புகுத்துவதானது, (நீண்டகால அடிப்படையில் பார்த்தால் மட்டும் சமுதாய நிலையை மாற்றுவதற்குப் பயன்படலாமாயினும்) சமுதாயத்துக்கு நன்மையாகாது. இந்தப் பெரிய யந்திரமே இல்லாதபோது ஒப்பிட்டுக் கூறுவது என்ற பேச்சுக்கே இடமில்லை. அப்போது மனித சக்தியை உற்பத்திக்காகப் பயன்படுத்துவதானது தனிப்பட்ட அடிப்படையில் பார்த்தாலும் தேசிய அடிப்படையில் பார்த்தாலும் மொத்தத்தில் நன்மையான காரியமாகும். இதற்கும்,

**பெரிய இயந்திரங்களின் இடம்**

பெரும் அளவில் இயந்திரத்தைப் புகுத்துவதற்கும் முரண்பாடு இருக்க வேண்டுமென்பதில்லை. ஆனால், (இயந்திரமானது புதிதாக வேலையில்லாத் திண்டாட்டத்தை ஏற்படுத்துவதாக இருக்கக்கூடாது. பிரதானமாக தொழிலாளர்களுக்கு வேலை அளிப்பதாக இருக்கவேண்டும்.)

சில கொள்கைகளைக் கடைப்பிடிப்பதில் காந்திஜி மலைபோல் உறுதியாக இருந்தார். ஆயினும், மற்றவர்களையும், மாறுதலடையும் சூழ்நிலைகளையும் அவர் மிகவும் அனுசரித்து நடந்து வந்தார். மற்றவர்களுடைய, குறிப்பாக பொது மக்களுடைய பலம் அல்லது பலவீனத்தை மதிப்பிடுவதிலும், தாம் கூறும் சத்திய நெறியை அவர்கள் எந்த அளவு பின்பற்றமுடியும் என்பதை மதிப்பிடுவதிலும் அவர் திறமை வாய்ந்தவராக இருந்தார். அவ்வப்போது தாம் மிகவும் விட்டுக் கொடுத்து விட்டதாக அஞ்சி, மிகக் கவனமாக இருந்து கொள்வார். பின்பு தம்முடைய பழைய நிலைக்குத் திரும்புவார். செயலுக்கு மத்தியில் மக்களின் மனதுடன் அவர் இசைந்து செல்வார். பொதுமக்களுடைய சக்தியை அறிந்து ஓரளவு விட்டுக்கொடுத்தும் செல்வார். மற்ற சந்தர்ப்பங்களிலோ, அவர் அதிகக் கொள்கைப் பிடிப்புள்ளவராகவும் விட்டுக் கொடுக்கும் தன்மை அற்றவராகவும் தோன்றுவார்.

**அனுசரித்துப் போகும் தன்மை**

ஒரு தனிப்பட்ட மனிதர், மக்களின் சிந்தனையையும் கொள்கையையும் எவ்வளவுதூரம் மாற்றமுடியும் என்பதைக் கூறுவது கடினமாகும். வரலாற்றில் சிலர், இதில் மிக மிக அதிகமான சக்திபடைத்தவர்களாக இருந்திருக்கிறார்கள். ஒருவேளை, ஏற்கனவே மக்கள் மனதிலிருந்த கருத்தை அவர்கள் வலியுறுத்தி வெளிக்குக் கொண்டு வந்திருக்கலாம், அல்லது அக்காலத்தில் தெளிவற்ற தன்மையில் உணரப்பட்டு வந்த கருத்துக்களுக்குத் தெளி

வான திட்டவட்டமான உருவம் கொடுத்திருக்கலாம். ஆனால், இந்த சகாப்தத்தில் இந்தியாவின் கருத்தை உருவாக்குவதில் காந்திஜிக்கிருந்த செல்வாக்கு அபரிமித மானது. எவ்வளவு காலம் எந்த உருவத்தில் அது நீடிக்கும் என்பதைக் காலம்தான் நிரூபிக்க வேண்டும்.

**அசாதாரண செல்வாக்கு**

அவருடைய கருத்தை ஏற்றவர்கள், அல்லது அவரைத் தேசத் தலைவராக ஏற்றுக் கொண்டவர்கள் ஆகியோரிடம் மட்டும் அவருடைய செல்வாக்குப் பரவவில்லை. அவரோடு கருத்து வேறுபாடுகொண்டவர்கள், அவரைக் குறை கூறியவர்கள் ஆகியோர்மீதும் அவருடைய செல்வாக்குப் பரவி இருந்தது. அவருடைய அஹிம்சைத் தத்துவத்தையும், பொருளாதாரக் கொள்கைகளையும் அப்படியே ஏற்றுக்கொண்டவர்கள் இந்தியாவில் ஒரு சிலரே இருந்தனர். ஆயினும், மிகப் பெரும்பாலோர் கருத்து ஏதாவது ஒரு வகையில் அவருடைய தத்துவத்தின் அடிப்படையிலேயே உருவாக்கப்பட்டிருந்தது.

பொதுவாக சமய அடிப்படையிலேயே அவர் பேசுவார். அரசியல் பிரச்னை மட்டும் அல்லாது, அன்றாட வாழ்க்கைச் சிக்கல்களிலும் தார்மிகக் கண்ணோட்டம் வேண்டும் என்று அவர் வற்புறுத்தினார். சமய அடிப்படையானது அதில் நம்பிக்கை உள்ளவர்களைக் கவர்ந்தது. ஆனால் தார்மிகக் கண்ணோட்டம் மற்றவர்களையம் கவர்ந்தது. பலருடைய செயல்கள் உயர்ந்த தார்மிக, நீதி

**அரசியலில் அறநெறி**

நெறி நிலைக்கு உயர்ந்தன. மற்றும் பலர், குறைந்தது அந்த அடிப்படையில் சிந்திக்குமாறு தூண்டப்பட்டனர். சிந்தனை, ஒவ்வொருவருடைய செயல், நடத்தை ஆகியவற்றிலும் ஓரளவு பிரதிபலனை ஏற்படுத்துகிறது. பொதுவாக எல்லா இடங்களிலுமே அரசியல் கேவலம் ஒரு சந்தர்ப்பவாதமாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது. மேற்

கண்டவர்களைப் பொறுத்தவரை, அக்கருத்து நீங்கி, தார்மிக அடிப்படையில் பெரும் மனப் போராட்டம் நடத்திய பின்பே அவர்கள் கருத்தும் செயலும் உருவாயின. எது உடனடியாகச் சாத்தியமோ — விரும்பத்தக்கதோ — அதனை ஒருபோதும் அரசியலில் புறக்கணிக்க முடியாது என்றாலும், மற்றச் சூழ்நிலைகளையும் நீண்டகால விளைவுகளையும் அனுசரித்து இவைகளில் சிறு மாறுதல்கள் செய்துகொள்ள வேண்டியதாயிருக்கிறது.

இவ்வாறு பல்வேறு துறைகளில் காந்திஜியின் செல்வாக்கு இந்தியா முழுவதும் பரவித் தன்னுடைய முக்கியத்துவத்தை நிலைநாட்டியுள்ளது. அகிம்சையினாலோ அல்லது பொருளாதாரக் கொள்கையினாலோ அவர் இந்தியத் தலைவர்களில் தலைசிறந்தவராகவும் ஈடு இணையற்றவராகவும் ஆகிவிடவில்லை. இந்தியாவிலுள்ள மிகப் பெரும்பாலோருக்கு, சுதந்திரம் அடைய வேண்டும் என உறுதி பூண்டிருக்கும் இந்தியா—தீவிர தேசிய வாதம், அதர்மத்தின் பலத்திற்குப் பணிய வேண்டியதில்லை என்ற உறுதி — தேசிய அவமரியாதையான எந்தக் காரியத்திற்கும் உடன்படுவதில்லை என்ற வீரம்—ஆகியவற்றின் சின்னமாக அவர் விளங்கினார்.

**இந்திய தேசியத்தின் சின்னம்**

நூற்றுக்கணக்கான விஷயங்களில் அவருடன் பலரும் கருத்து வேறுபாடு கொண்டிருக்கலாம்; அவர்கள் அவரைக் குறை கூறியிருக்கலாம். சில குறிப்பிட்ட பிரச்னைகளில் அவரிடமிருந்து அவர்கள் விலகிச் சென்றிருக்கலாம். என்றாலும், இந்தியாவின் விடுதலைக்காக நடவடிக்கை எடுத்த காலத்திலும், போராட்ட காலத்தும், மீண்டும் அவர்கள் அவரைச் சூழ்ந்துவிடுவார்கள். தங்களுடைய இன்றியமையாத தலைவர் என்பதை உணர்ந்து அவருடைய வழிகாட்டுதலை எதிர்பார்த்து நிற்பார்கள்.

கடந்த காலத்திலோ அல்லது நிகழ்காலத்திலோ வேறுயாரும் அறியாத அளவுக்கு இந்தியாவைப் பற்றி-குறிப்பாக இந்நாட்டில் உள்ள பாமர மக்களைப் பற்றி-காந்திஜி அறிந்திருந்தார். (இந்தியா முழுவதிலும் அவர் விரிவாகச் சுற்றுப்பயணம் செய்தார். கோடிக்கணக்கான மக்களுடன் அவருக்கு நேரடியான தொடர்பு ஏற்பட்டது. அதுமட்டுமல்லாது, பாமர மக்களின் மனத்தைத் தொட அவருக்கு ஆற்றல் இருந்தது.

**மக்களுடன் மன ஐக்கியம்**

அவரால் பாமர மக்களுடன் மன ஐக்கியப்பட்டு, இரண்டறக் கலக்கமுடிந்தது. மக்களும் இதை உணர்ந்திருந்ததால் அவர்கள் அவரிடம் பக்தி வைத்து விசுவாசமாய் நடந்து கொண்டார்கள்.

இந்தியாவைப் பற்றியும், இந்திய மக்களைப் பற்றியும் அவருக்கிருந்த அறிவு ஆழமானது. வரலாற்று நூலறிவில் அவருக்கு அவ்வளவு அக்கறை இல்லையென்றாலும், சிலருக்கு இருப்பதுபோல் அவருக்கு "வரலாற்று உணர்வு" இல்லாவிட்டாலும், இந்திய மக்களின் வரலாற்று மூலத்தை அவர் நன்கு அறிந்திருந்தார். அன்றாட நிகழ்ச்சிகளை அவர் சரிவரத் தெரிந்து அவைகளை அக்கறையுடன் தொடர்ந்து கவனித்து வருவார்.

**"சாரத்தை" அறிவதில் சமர்த்தர்**

இவைகளுக்குள் இந்தியப் பிரச்னைகளில் அவர் தனிக் கவனம் செலுத்தியது தவிர்க்க முடியாததாகும். ஒரு பிரச்னை அல்லது சூழ்நிலையில் அவசியமற்றதை ஒதுக்கிவிட்டு, சாரத்தை மட்டும் எடுத்துக் கொள்ள அவருக்குத் தனித் திறன் இருந்தது. ஒவ்வொரு பிரச்னையையும் தார்மிகக் கண்ணோட்டத்துடன் அணுகியதால், அவருக்கு உறுதியும் நீண்டகாலக் கண்ணோக்கும் ஏற்பட்டன. "அரசியல் தந்திரமுறைகளில் காந்திஜிஎவ்வளவு தவறு செய்தாலும், அவருடைய அடிப்படை

தொடர்ந்து சரியாகவே இருந்தது" என்று பெர்னுர்ட்ஷா கூறியுள்ளார். ஆயினும், பெரும்பாலோர் நீண்டகாலத்தைப்பற்றி அக்கறைப் படுவதில்லை. அந்தந்த சமயத்தில் சாதுர்யமாக நடப்பதால் என்னென்ன அனுகூலம் கிடைக்கும் என்பதிலேயே அவர்கள் அதிக அக்கறை உள்ளவர்களாய் இருக்கின்றனர்.

காங்கிரசின் மீது காந்திஜி ஆதிக்கம் செலுத்தினுர். ஆனுல், அது ஒரு விநோதமான ஆதிக்கம். காங்கிரசானது தீவிரமான, புரட்சிகரமான, பல அம்சங்கள் பொருந்திய ஒரு ஸ்தாபனமாகும். அதில் பல்வேறு வகைப்பட்ட கருத்துள்ளவர்கள் இருந்தனர். அதை எளிதாக இப்பக்கமோ அல்லது அப்பக்கமோ செலுத்திவிட முடியாது. பல சந்தர்ப்பங்களில், மற்றவர்களுடைய விருப்பத்திற்கு இணங்கிச் செல்வதற்காக, தனது வேகத்தைக் காந்திஜி குறைத்துக் கொண்டார். சில சமயங்களில் தனக்கு மாறுன முடிவையும் அவர் ஏற்ருர். ஆனுல், தம்மைப் பொறுத்தவரை, ஜீவாதாரமான விஷயங்கள் என்று அவர் கருதியவற்றில், விடாப்பிடியாக இருந்தார். சில சந்தர்ப்பங்களில் அவருக்கும் காங்கிரசுக்கும் முறிவு ஏற்பட்டது; ஆயினும் எல்லாக் காலங்களிலுமே இந்தியாவின் விடுதலைக்கும் தீவிர தேசிய வாதத்துக்கும் அவரே சின்னமாக விளங்கினுர். இந்தியாவை அடிமைப்படுத்த வேண்டுமென்று எண்ணியவர்களுக் கெல்லாம் அவரே பரம விரோதியாகக் காட்சியளித்தார். இதைக் கருதித்தான் மக்கள் அவர் பின்னுல் திரண்டார்கள். மற்றும் பலவற்றில் அவருடன் கருத்து வேறுபட்டாலும்கூட, அவருடைய தலைமையை ஏற்ருர்கள். நேரடிப் போராட்டம் நடைபெருதபோது, எல்லாச் சந்தர்ப்பங்களிலுமே அவருடைய தலைமையை அவர்கள் ஏற்கவில்லை. ஆனுல், போராட்டம் தவிர்க்க முடியாது என்ற நிலைமை ஏற்பட்ட

**காங்கிரசு மீது ஆதிக்கம்**

போதோ காந்திஜியே தலையாய முக்கியத்துவம் பெற்றார். மற்றவர்களெல்லாம் அவருக்கு அடுத்தபடியானவர்கள் தான்.

இந்தியாவுக்கும், இந்திய மக்களுக்கும் காந்திஜி செய்த தலையாய சேவை, காங்கிரஸ் மூலமாக அவர் தொடங்கிய பலம் வாய்ந்த இயக்கங்களால் கிடைத்தது தான். தேச முழுவதிலும் போராட்டத்தைத் தொடங்கி கோடிக்கணக்கான மக்களை நன்முறையில் உருவாக்க அவர் விரும்பினார். இதில் அவர் பெருமளவு வெற்றியும் பெற்றார். ஒழுக்கங்குன்றி, கோழைகளாக, இழிந்த நிலையில் இருந்த மக்களை—ஆதிக்கவாதிகளால் நசுக்கப்பட்டு, எதிர்க்கச் சத்தியற்று இருந்தவர்களை—சுயமரியாதையும் தன்னம்பிக்கையும் உள்ளவர்களாக மாற்றினார். கொடுங்கோன்மையை எதிர்க்கக் கூடியவர்களாகவும், ஒன்றுபட்டுப் போராடத் தகுதியுள்ளவர்களாகவும், சிறந்த இலட்சியங்களுக்காகத் தியாகம் செய்யக் கூடியவர்களாகவும் மக்களை ஆக்கினார். அரசியல் பொருளாதாரச் சிக்கல்களைப் பற்றிச் சிந்திக்குமாறு அவர்களை அவர் தூண்டினார். மக்களைக் கவர்ந்த இப்புதுக் கருத்துக்களையும் நம்பிக்கையையும் ஒவ்வொரு கிராமத்திலும், கடைத்தெருவிலும் மக்கள் கூடி விவாதிக்கத் தொடங்கினார்கள். இது ஒரு பிரமிக்கத்தக்க மன மாறுதலாகும். இதற்கான காலம் வந்துகொண்டிருந்தது என்பதுடன், சூழ்நிலைகளும் உலக நிலைமையும் இந்த மாறுதலுக்கு வழிகோலின என்பதும் உண்மையே. ஆனால், சந்தர்ப்பங்களையும் சூழ்நிலைகளையும் பயன்படுத்திக்கொள்வதற்கு ஒரு பெரிய தலைவர் தேவைப்படுகிறது. காந்திஜிதான் அப்பெருந் தலைவர். நம்முடைய மனதைச் சிறைப்படுத்தி அதைச் செயலற்றதாக்கிய பல கோட்டைகளை அவர் தகர்த்

தெறிந்தார். இதை அனுபவித்துப் பார்த்த நம்மில் யாரும் இந்திய மக்கள் பெற்ற விடுதலே உணர்வையும் உற்சாகத்தையும் மறக்க முடியாது. சூழ்நிலேகளே எவ்வாறு மிகவும் சாதகமான முறையில் பயன்படுத்திக் கொள்வது என்பதை காந்திஜி அறிந்திருந்தார். இதனல், அவர் இந்தியாவில் மிக முக்கியமான புரட்சியைச் செய்துள்ளார். அவரால் மக்களின் உள்ளத்தைத் தொட முடிந்தது. ஆனல், இதைக் காட்டிலும் முன்னேற்றமான கொள்கையைக் கொண்டிருந்த சில கோஷ்டிகளோ வெறும் ஏட்டளவில்தான் செயல்பட்டன. சூழ்நிலேகளுக்கு அவர்கள் பொருத்தமாக நடந்துகொள்ளவில்லே; ஆகையால் மக்களிடமிருந்து அவர்கள் கணிசமான ஆதரவைப் பெற முடியாதிருந்தது.

களேப்பைப் போக்க உதவும் சக்தி வாய்ந்த தென்றலாக அவர் விளங்கினர். கண்ணிமைகளுள்ளும் நுழைந்து இருளேப் போக்கும் ஒளிக்கதிர் போலவும் அவர் இருந்தார். அநேக பொருள்களே, குறிப்பாக, மக்களுடைய மனக்கருத்துக்களேத் தலே கீழாக மாற்றும் புயல் காற்று போலவும் அவர் இருந்தார். மேலே உச்சியிலிருந்து அவர் இறங்கி வரவில்லே. இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்களிடையே இருந்து வந்தவராகவே அவர் தோன்றினர். அவர்களுடைய மொழியிலேயே பேசினர். ஓயாது அவர்களேயும் அவர்களுடைய பரிதாப நிலேயையும் மற்றவர்களுடைய கவனத்துக்குக் கொண்டு வந்தார். "உழவர்கள், தொழிலாளர்கள் ஆகியோரைச் சுரண்டி வாழ்பவர்களெல்லாம், அவர்கள் மீது குதிரை ஏறிக்கொண்டிராமல் கீழே இறங்குங்கள்: ஏழ்மையையும் துன்பத்தையும் உற்பத்தி செய்யும் இந்த முறையை அகற்றுங்கள்," என்று அவர் நமக்குச் சொன்னர்.

**ஊடுருவிக் குறையை நீக்கினர்**

# 4. அச்சத்திலிருந்து விடுதலை

அவருடைய போதனையின் சாரம், அஞ்சாமையும் சத்தியமும் ஆகும். இவைகளின் அடிப்படையில், பொது மக்களின் நலனை எப்போதும் மனதில் கொண்டு செயலில் ஈடுபட வேண்டும் என்பதுதான் அவருடைய கொள்கை. ஒரு தனிப்பட்ட மனிதருக்கோ அல்லது தேசத்துக்கோ இருக்கக் கூடிய வரப்பிரசாதம் "அச்சமின்மை" என்று நம்முடைய புராதன நூல்களில் கூறப்பட்டுள்ளது. இங்கே அச்சமின்மை என்பது, உடலில் மட்டுமல்லாமல் மனதிலும் அச்சமில்லாது இருத்தலாகும். நம்முடைய வரலாறு தோன்றிய காலத்திலேயே சாணக்கியரும் யாஞ்யவல்க்கியரும், மக்களிடையே உள்ள அச்சத்தைப் போக்குவதே தலைவர்கள் பணி என்று கூறியிருக்கிறார்கள். (பிரிட்டிஷ்

**"அஞ்சாதே" என்னும் குரல்**

ஆட்சிக் காலத்தின்போது இந்திய மக்களிடம் அச்ச உணர்ச்சியே நிறைய இருந்தது. எங்கும் பரவி, வருத்தி, பரிதவிக்கச் செய்தது இந்த அச்சமே. இராணுவத்தையும் போலீசையும் பற்றியும், விரிவாகப் பரவிக்கிடந்த இரகசியப் போலீசுப் படையைப் பற்றியும், பயம்—அதிகாரவர்க்கத்தினரைக் கண்டு பயம்—மக்களை அடக்குவதற்காக ஏற்பட்ட சட்டங்களைக் கண்டு பயம்—சிறையைக் கண்டு பயம்—நிலச்சுவான்தார் பிரதிநிதியைக் கண்டு அச்சம்—லேவாதேவிக்காரரைக்கண்டு அச்சம்—எப்போதும் வாசலில் நின்று கொண்டிருந்த வேலையில்லாத் திண்டாட்டத்தையும் பட்டினியையும் கண்டு அச்சம்—இவ்வாறு எங்கும் நிறைந்திருந்த அச்

சத்தை எதிர்த்தே காந்திஜியின் அமைதியான, ஆனல் உறுதியான "அஞ்சாதே" என்னும் குரல் எழுந்தது.

**கற்பனைப் பூதங்கள்**

இது, சொல்லுவது போல் அவ்வளவு எளிதானதா? இல்லை. அச்சத்தினல் பல கற்பனையான பூதங்கள் கிளம்புகின்றன. இந்த பூதங்கள் உண்மை நிலையைக் காட்டிலும் அதிக பயங்கரமானவையாகத் தோற்றம் அளிக்கின்றன. உண்மையை ஆர அமர ஆராய்ந்து, அதன் விளைவுகளைத் தைரியமாக ஏற்க முன்வந்தால், பயம் எவ்வளவோ போய்விடும்.

ஆகவே, திடீரென்று, அச்சம் என்ற கரும் சவப்பெட்டி மக்களுடைய முதுகிலிருந்து அகற்றப்பட்டது. பூரணமாக இது அகன்றுவிடவில்லை என்பது உண்மையே. ஆனல், பெருமளவு அகற்றப்பட்டது. அச்சம் என்பது பொய்யின் தோழனகையால், அச்சமின்மையைத் தொடர்ந்து சத்தியம் வருகிறது. இந்திய மக்கள், தாங்கள்

**திடீரென மாறுதல்**

முன்பிருந்ததைக் காட்டிலும் மிக உயர்ந்த சத்தியவான்களாகிவிடவில்லை. ஒரே இரவில் அவர்களுடைய அடிப்படை மனே இயல்பையும் மாற்றிக் கொள்ளவில்லை. ஆயினும், பொய்க்கும் கபடத்துக்கும் அவசியம் குறைந்தால் மாறுபாடு தெளிவாகத் தெரிய ஆரம்பித்தது. இது மனேநிலையில் ஏற்பட்ட மாறுதலாகும். மனேதத்துவ சாஸ்திரத்தில் வல்லுநன் ஒருவன், நோயாளியை ஆழ்ந்து ஆராய்ந்து, அவனுடைய மன அச்சத்தின் காரணங்களையெல்லாம் கண்டுபிடித்து, அவைகளை நோயாளியின் முன் படம்பிடித்துக்காட்டி, அகற்றியதுபோல் இது இருந்தது.

நம்முடைய மனேநிலையில் மற்ருெரு மாறுதலும் ஏற்பட்டது. பிறர் ஆட்சிக்கு நாம் நீண்ட காலமாக அடிமைப்

**மற்றொரு மாறுதல்**

பட்டிருந்தது நம்மைத் தாழ்த்தி, அவமதிப்பிற்குள்ளாக்கியிருந்தது. அதைக் கண்டு நாம் வெட்கமடைந்தோம். இனிமேலும் இந்த ஆட்சிக்குப் பணிவதில்லையென்றும், அதனால் என்ன விளைவுகள் ஏற்பட்டாலும் பரவாயில்லையென்றும் முடிவு செய்தோம்.

**தவறும்போது கைகொடுப்பார்**

நாம் ஏற்கனவே இருந்ததைக் காட்டிலும் மிக உயர்ந்த சத்தியவான்களாகி விடவில்லை. ஆனால், இம்மியளவும் சத்தியத்திலிருந்து குறையாதவராக காந்திஜி விளங்கினார். நாம் அசத்தியத்தில் வீழும்போது நம்மைத் தடுத்து நாம் வெட்கப்படுமாறு செய்து அவர் நம்மைச் சத்தியத்துக்கு அழைத்துச் செல்வார்.

**“சத்தியம்” என்பது என்ன?**

சத்தியம் என்பது என்ன? என்றால் திட்டவட்டமாகக் கூறமுடியாது. ஒன்றுக்கொன்று சார்ந்த உண்மைகளையே நாம் அறிவோம். பூரணமான உண்மைகள் நமது சக்திக்கு அப்பாற்பட்டவை என்று கூறலாம். பல்வேறுபட்டவர்கள் சத்தியத்தைப் பற்றிப் பல்வேறு விதமான கருத்துக்களைக் கொண்டிருக்கலாம். அவ்வாறு கொள்ளவும் செய்கிறார்கள். ஒவ்வொரு தனிப்பட்ட மனிதரும் சத்தியத்தைப்பற்றித் தீர்மானிக்கும்போது, தன்னுடைய சொந்தச் சூழ்நிலை, பயிற்சி, விருப்பு வெறுப்புக்கள் ஆகியவைகளால் அதிகம் பாதிக்கப்படுகிறார். அதைப் போன்றுதான் காந்திஜியும். ஆனால், ஒரு குறிப்பிட்ட மனிதர் எதைச் சத்தியம் என்று அறிவாரோ, உணருவாரோ அது, குறைந்தது அவரைப்பொறுத்த அளவிலாவது சத்தியம் ஆகும். இந்த விளக்கத்தின் அடிப்படையில் பார்த்தால், காந்திஜியைப் போன்று சத்தியத்துடன் இணைந்தவர் வேறு யாரையும் நான் பார்த்ததில்லை. அவர் தமது மனதில் படுவதை அப்படியே வெளியில் கூறிவிடு

வார். தம்முடைய மனதில் ஏற்படும் மாறுதல்களைக் கூட அவ்வப்போது பொதுமக்களுக்கு வெளிப்படுத்திவிடுவார். ஒரு அரசியல் வாதியைப் பொறுத்தவரை அது அபாயமான பண்பாகும். இந்தியாவில், கோடிக்கணக்கான மக்கள் மீது, பல்வேறு வகைப்பட்ட அளவுக்கு, காந்திஜியின் செல்வாக்கு இருந்தது. சிலருடைய வாழ்க்கை பூரணமாக மாறுதலடைந்தது; சிலர் ஓரளவே பாதிக்கப்பட்டனர். சிலர் மீது ஏற்பட்ட மாறுதல் படிப்படியாக மறைந்து கொண்டு வந்தது. ஆனாலும் பூரணமாக அகன்று விடவில்லை. இதில் ஒரு சிறு பகுதியாவது அகற்ற முடியாததாக இருந்ததே இதற்குக் காரணம்.

**விநோதமான சமாதான இயக்கவாதி**

காந்திஜி ஒரு விநோதமான சமாதான இயக்கவாதி. ஏனெனில், ஜீவசக்தி நிரம்பிய செயல் வீரர் அவர் விதிக்கோ, அல்லது தாம் தீமை என்று கருதும் எதற்குமோ, பணிவதென்பது அவரிடம் இல்லை. அவருடைய எதிர்ப்பு அமைதியானதாகவும் பண்பு நிறைந்ததாகவும் இருக்குமாயினும், அவரிடம் நிறைய எதிர்ப்புச் சக்தி இருந்தது.

**“செயலற்ற அமைதி”க்கு எதிரி**

இந்தியர்களின் மனப் பாங்கே அடிப்படையில் “செயலற்ற அமைதி”யை விரும்புவதுதான் என்று கூறப்படுகிறது. இது சரியென்றே நானும் நினைக்கிறேன். ஒருவேளை பழங்கால இனத்தவர்கள் இவ்வித வாழ்க்கைக் கண்ணோட்டத்தை உருவாக்கிக் கொண்டிருக்கலாம்; நீண்ட காலமாக, பரம்பரை பரம்பரையாக வந்துள்ள ஒரு தத்துவம் இதற்கு வழிகோலுவதாயும் இருக்கலாம். ஆயினும் ஒரு முன்னுதாரணமான இந்தியராகிய காந்திஜி, செயலற்ற அமைதிக்கு நேர் முரணாகவே விளங்கினார். செயலிலும் சக்தியிலும் அவர் ஒரு மாபெரும் மனிதர்.

சுறுசுறுப்பாகச் செயலில் ஈடுபடக் கூடியவர்; அவர் தாம் மட்டும் முன்னால் செல்லக் கூடியவரல்ல, மற்றவர்களையும் முன்னால் தள்ளிக்கொண்டு செல்லக் கூடியவர். இந்திய மக்களின் மாருத பழமையை, நான் அறிந்த வரையில், வேறு யாருமே அவ்வளவு மாற்றியதில்லை.

அவர் எங்களைக் கிராமங்களுக்கு அனுப்பினர். இவ்வாறு அனுப்பப்பெற்ற எண்ணற்ற, செயல் முறை வேதாந்தத் தூதுவர்களின் நடவடிக்கைகள் அங்கு ரீங்காரம் செய்துகொண்டிருந்தன. விவசாயி புத்துயிர் பெற்று, அவனுடைய செயலற்ற கூண்டிலிருந்து வெளியே வந்தான். எங்கள்மீது ஏற்பட்ட மாறுதலானது வேறு வகைப்பட்டது; ஆயினும் அதே அளவுக்கு ஆழமானது தான். ஏனெனில், கிராமவாசியானவன் தனது மண் குடிசைக்குள் அமிழ்ந்து கிடப்பதையும் பசியின் இருள் நிழல் அவனைத் துரத்திக் கொண்டிருப்பதையும் நாங்கள் கண்டோம். புத்தகங்களிலிருந்தும், படித்தவர்கள் பேச்சிலிருந்தும் நாங்கள் அறிந்த இந்தியப் பொருளாதாரத்தைக் காட்டிலும், இவ்வாறு கிராமங்களுக்குச் சென்றதில் அதிகமாகக் கற்றுக்கொண்டோம். எங்களுக்கு ஏற்கனவே ஏற்பட்ட உள்ளுணர்வு உறுதிப்பட்டது. இவைகளை நேரில் கண்ட பிறகு—பிற்காலத்தில் எவ்வளவுதான் எங்களுடைய கருத்து மாறுதலடைந்தாலும்—நாங்கள் எங்களுடைய பழைய வாழ்க்கைக்கு, பழைய வாழ்க்கைத் தரத்தை அனுபவிப்பதற்குச் செல்வதென்ற பேச்சே எழவில்லை.

**கிராமப்புறங்களில் தொண்டர்கள்**

சுதந்திரம் வந்தது; நீண்ட காலமாக ஆவலுடன் எதிர்பார்த்திருந்த சுதந்திரம் வந்தது; மிக மிகக் குறைந்த இம்சையுடன் வந்தது. ஆனால், அது வந்த உடனேயே நாட்டை இருள் சூழ்ந்து கொண்டது; மக்களைப் பைத்

தியம் பிடித்துக் கொண்டது. அச்சமும் வெறுப்புணர்ச்சியும் நம்முடைய மனதைக் குருடாக்கின. நாகரிகத்தின் படி இருக்க வேண்டிய கட்டுப்பாடுகளெல்லாம் அடித்துச் செல்லப்பட்டன. பயங்கரத்தின் மேல் பயங்கரம் ஏற்பட்டது; மக்கள் காட்டுமிராண்டித்தனமாக நடந்து கொண்டதால் நாம் ஒரு சாரமும் அற்றவர்களானோம். ஒளி விளக்குகளெல்லாம் அணைந்துவிடும்போல் தோன்றியது. ஆனால், ஒரே ஒரு பிரகாசமான திரி மட்டும் தொடர்ந்து எரிந்து சுற்றுப்புற இருளில் தனது ஒளியைப் பரப்பியது. அந்தப் பரிசுத்தமான ஒளியைக் கண்டவுடன் நமக்கு நம்பிக்கையும் பலமும் திரும்பி வந்தன. அவ்வப்போது பெரும் பெரும் நாசம் வந்து மக்களைச் சூழ்ந்து கொண்டாலும், "பலம் வாய்ந்த, கறை படாத இந்தியாவின் ஆன்மா இருக்கிறது; அன்றாட குறுகிய சந்தர்ப்பவாதங்களைப் பற்றி அக்கறைப் படாது தற்போதைய குழப்பத்துக்கு அப்பாலிருந்து அது செயல்படும்" என்ற நம்பிக்கை நமக்கு ஏற்பட்டது. அந்த ஒரு சில மாதங்கள் மகாத்மா காந்தி இருந்ததால் இந்தியாவுக்கு எவ்வளவு பெரிய நன்மை ஏற்பட்டது என்பதை உங்களில் எத்தனை பேர் உணருகிறீர்கள்? கடந்த அரை நூற்றாண்டுக்கும் மேலாக இந்தியாவுக்கும் விடுதலைக்கும் அவர் செய்த மகத்தான சேவைகளை நாம் எல்லோரும் அறிவோம். ஆனால், இந்த மாதங்களில் அவர் செய்த சேவையைக் காட்டிலும் வேறு எந்த சேவையும் பெரிதாகாது. கரைந்துகொண்டு போகும் உலகத்தில் உறுதி வாய்ந்த ஒரு மலை போல அவர் இருந்தார். சத்தியத்தின் கலங்கரை விளக்கமாக அவர் விளங்கினார். அவருடைய உறுதி வாய்ந்த, மெல்லிய குரல் கூட்டத்தினரின் கூக்குரலுக்கு மேல் கேட்டது; நன்முயற்சிக்கான பாதையைக் காட்டியது.

**இருளில் ஒளி**

அநேக பொருள்களின் உற்பத்தியைப் பற்றி நாம் பேசுகிறோம். இவற்றைக் காட்டிலும் ஒரு நாட்டில் மிக முக்கியமானது, நல்ல, உண்மையான ஆண்களையும் பெண்களையும் உற்பத்தி செய்வதுதான். இப்படிப்பட்ட ஒரு மனிதர் இந்தியாவில் இருந்தார். அவர் தம்முடைய நற்குணத்தாலும் சத்தியத்தாலும் ஆன்மிக சக்தியாலும் இந்தப் புராதன நாட்டுக்குப் பெருமை தந்தார் பலவீனமான தவறு செய்யக்கூடிய சாதாரண மனிதர்களாகிய நமக்கு ஒளி காட்டி நாம் தவறான வழியில் செல்லும்போது நம்மைத் தடுத்து நிறுத்தினர். சரியான வழியிலிருந்து நாம் எவ்வளவோ விலகிச் சென்றுவிட்டோம். நம்முடைய பரம்பரையையும் நற்புகழையும் வீணாக்கி விட்டோம். இவைகளையெல்லாம் போதுமான அளவில் நாம் செய்தாயிற்று. இனி நாம் ஆக்கப் பாதையில், நிருமாண, ஒத்துழைப்பு வழியில் செல்ல வேண்டும்; நம்முடைய சகோதர மனிதர்களோடு நல்லெண்ணத்துடன் வாழ வேண்டும்.

**நல்ல மனிதர்**

வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலிருந்து வடகிழக்கே பிரம்மபுத்திரா வரையும், இமாலயத்திலிருந்து தென் கோடியில் கன்னியாகுமரி வரையும் இப்பெரிய நாட்டில் ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக மகாத்மா காந்தி சுற்றுப் பிரயாணம் செய்துள்ளார். இந்த நாட்டின் ஒவ்வொரு சிறு பகுதிக்கும், ஒவ்வொரு மூலை முடுக்குக்கும் அவர் சென்றுள்ளார். உல்லாசத்துக்காகச் செல்லும் பிரயாணியைப் போல அவர் செல்லவில்லை. இந்திய மக்களைப் புரிந்து சேவை செய்வதற்காக அவர் சென்றார். அநேகமாக வரலாற்றிலேயே அவரளவு யாரும் இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்திருக்க மாட்டார்கள். சாதாரண மக்களை அவர் அளவு

**சேவைக்காகச் சுற்றுப்பிரயாணம்**

அறிந்து, அவர்களுக்கு இவ்வளவு அதிகமான சேவைகளை யாராலும் செய்திருக்கமுடியாது.

அவருடைய வாழ்க்கை முழுவதிலுமே ஏழைகள், நசுக்கப்பட்டவர்கள், பாமரர்கள் ஆகியோரைப் பிர தானமாக வைத்தே அவர் இந்தியாவைப் பற்றிச் சிந்தித்தார். அவர்களை உயர்த்துவதும் அவர்களுக்கு விடுதலை அளிப்பதும்தான் அவருடைய வாழ்க்கை இலட்சியமாய் இருந்தது. நாட்டில் யாரும் தங்களைத் தாழ்ந்தவர்களாகக் கருதக்கூடாது என்பதற்காக அவர்களுடைய வாழ்க்கை முறைகளைத் தாமே அனுஷ்டித்தார். அவர்களைப் போன்ற ஆடையையும் உடுத்தினர். மக்களுடைய சுதந்திரம் வளர்ச்சியடைவதே தமக்குக் கிடைத்த வெற்றி எனக் கருதினர்.

**மக்கள் வளர்ச்சி அவர் வெற்றி**

நமக்கு எப்படிப்பட்ட ஜெயம் வேண்டுமென்று காந்திஜி விரும்பினர்? இம்சை, ஏமாற்றுதல், வஞ்சகம், மற்ற தவறான வழிகள் ஆகியவற்றின் மூலம் பல நாடுகளும் மக்களும் அடைய விரும்புகிறார்களே அந்த வெற்றியை அவர் விரும்பவில்லை. அப்படிப்பட்ட வெற்றி நிலையானதுமல்ல. ஏனெனில் சத்தியம் என்னும் குன்றின் மீதுதான் நிலையான வெற்றிக்கு அஸ்திவாரமிட முடியும். காந்திஜி நமக்கு ஒரு புது வகைப் போராட்ட முறையையும், அரசியல் போர் முறையையும், புது வகை இராச தந்திரத்தையும் அளித்தார். அரசியலில் சத்தியமும் நல்லெண்ணமும் அஹிம்சையும் பலன் அளிக்கும் என்பதை அவர் நிரூபித்துக் காண்பித்தார். ஒவ்வொரு இந்தியனின் அரசியல் கொள்கையும், மத நம்பிக்கையும் எதுவாக இருந்தாலும், அவனை ஒரு மனிதனாகவும், சகப் பிரஜையாகவும் கருதி மதித்து ஒத்துழைக்குமாறு

**அரசியலில் நல்லெண்ணம்**

அவர் நமக்குப் போதித்தார். நாமெல்லோரும் இந்தியத் தாயின் குழந்தைகள்; இந்திய நாட்டிலேயே வாழ்ந்து மடியவேண்டியவர்கள். நாம் அடைந்துள்ள சுதந்திரத்தில் நாமெல்லோரும் சம பங்காளிகள். நம்முடைய 40 கோடி மக்களில் ஒவ்வொருவருக்கும், இந்தியா அளிக்கக் கூடிய வாய்ப்பிலும் வசதியிலும் சம பங்கு கிடைக்க வேண்டும். ஒரு சில மனிதர்களுக்குத் தனிச் சலுகைகள் கிடைப்பதற்காக காந்திஜி பாடுபடவில்லை; சாகவில்லை; அதே இலட்சியத்துக்கு அதே முறையில் நாம் முயற்சி செய்ய வேண்டும்.

வெண்கலத்திலும் பளிங்கியினாலும் சிலைகள் வடித்தோ அல்லது தூண்கள் எழுப்பியோ அவருக்கு நினைவுச் சின்னங்கள் எழுப்ப வேண்டுமென்று மக்கள் கூறுகிறார்கள். இவ்வாறு கூறுபவர்கள் அவரைப் பரிகசிப்பவர்களாகிறார்கள். அவருடைய அறிவுரைகளைப் பொய்ப்பிக்கிறார்கள். அவர் பாராட்டத்தக்கவாறு நாம் அவருக்குச் சூட்டக் கூடிய புகழ் மாலை என்ன? எவ்வாறு

**சரியான நினைவுச் சின்னம்**

வாழ்வது, எவ்வாறு சாவது என்பதற்கு அவர் வழி காண்பித்திருக்கிறார். அந்தப் பாடத்தைப் புரிந்து கொள்ளாவிட்டால், நாம் அவருக்கு நினைவுச்சின்னம் எழுப்பாமல் இருப்பதே நல்லது. ஏனெனில், அவர் நமக்குக் காட்டிய பாதையைப் பயபக்தியுடன் பின்பற்றுவதும், வாழ்விலும் சாவிலும் நமது கடமையைச் செய்வதும்தான் நாம் அவருக்கு எழுப்பக் கூடிய சரியான நினைவுச் சின்னம்.

அவர் ஒரு இந்து, ஒரு இந்தியர். கடந்த பல சந்ததிகளில் தோன்றிய மிகப் பெரிய இந்துவும் இந்தியரும் அவரே. ஒரு இந்துவாகவும் இந்தியராகவும் இருப்பதற்காக அவர் பெருமைப்பட்டார். அவருக்கு அருமை

வாய்ந்தது இந்தியாவே. ஏனெனில், பல சகாப்தங்களாகச் சில நிலையான உண்மைகளை அது பிரதிபலித்து வந்திருக்கிறது. அவர் தீவிர மத உணர்வு உள்ளவராக இருந்தாலும், தாம் விடுதலை பெற்றுத் தந்த நாட்டின் "தேசப் பிதா" என்று அவர் அழைக்கப்பட்டாலும், குறுகிய மத அல்லது தேசிய உணர்ச்சிகள் அவருடைய ஆன்மாவைக் கட்டுப்படுத்தவில்லை.

**மிகப் பெரிய சர்வ தேசியவாதி**

ஆகவே, மனிதனின் அடிப்படை ஐக்கியத்திலும், எல்லா மதங்களிலும் உள்ள அடிப்படை ஒற்றுமையிலும், மனித வர்க்கத்தின் தேவைகளிலும் நம்பிக்கையுள்ள மிகப் பெரிய சர்வதேசியவாதியாக அவர் ஆனார். இவைகளுக்கெல்லாம் மேலாக எல்லா இடங்களிலும் உள்ள கோடிக் கணக்கான ஏழை மக்கள், நசுக்கப்பட்ட, துயரடைந்த மக்கள் ஆகியோரின் சேவையில் அவர் தம்மை ஈடு படுத்தினர்.

மனிதனின் மனதிலும் இதயத்திலும் அவர் அவ்வளவு ஆதிக்கம் செலுத்தியதற்குக் காரணம் என்ன? இனி மேல் வரும் சகாப்தங்கள் இதைப்பற்றித் தீர்ப்பளிக்கும். நாம் அவருக்கு மிக அண்மையில் இருப்பதால், அவருடைய அசாதாரண மனிதப் பண்பின் பல அம்சங்களை மதிப்பிட முடியாது. ஆனால், சத்தியத்தின் மீதே அவருக்கு அதிக நாட்டம் இருந்தது என்பதை நாம்கூட நன்ருக உணருவோம்.

**அடிப்படைக் காரணம்**

"நல்ல இலட்சியத்தைத் தீய முறைகளின் மூலம் அடைய முடியாது. நாம் கடைப்பிடிக்கும் மார்க்கம் தவருனதாக இருந்தால், இலட்சியமும் பாதிக்கப்படும்" என்று அவர் பறைசாற்றியதற்கு இந்தச் சத்தியமே காரணம். அவர் தவறு செய்தபோதெல்லாம், அதைப் பகிரங்கமாக ஒப்புக்கொண்டதற்கு இந்தச் சத்தியமே காரணம். (தம்முடைய தவறுகளில் சிலவற்றை

"இமாலயத் தவறுகள்" என்று அவர் கூறினர். இந்தச் சத்தியம்தான், எங்கெங்கு அவர் தீமையைக் கண்டாலும் அசத்தியத்தைக் கண்டாலும், அதை எதிர்த்து, அதனுல் ஏற்படக் கூடிய விளைவுகளைப்பற்றி மனதிற் கொள்ளாது போராட அவருக்கு வழிகாட்டியது. ஏழைகள் சேவையை அவருடையவாழ்க்கையின் இலட்சியமாக ஆக்கியது. ஏனெனில், எங்கெங்கு சமத்துவமின்மையும், பாரபட்சமும், அடக்குமுறையும் இருக்கின்றனவோ அங்கெல்லாம் அநீதியும் தீமையும் அசத்தியமும் இருக்கின்றன. இவ்வாறு சமூக, அரசியல் தீமைகளால் வாடியவர்கள் எல்லோருக்கும் அவர் நண்பரானர். மனித வர்க்கம் எவ்வாறு இருக்க வேண்டுமென்று நாம் விரும்புகிறேமோ அதன் மாபெரும் பிரதிநிதியாக அவர் விளங்கினர்.

இந்தியாவை ஐக்கியப்படுத்திய மாபெரும் சக்தி அவரே. மற்றவர்களை நாம் அனுசரித்துப்போக வேண்டுமென்பது மட்டுமல்லாமல், அவர்களை நல்லுறவுடன் நமது நண்பர்களாகவும், தோழர்களாகவும் ஆக்கிக்கொள்ள வேண்டும் என்று அவர் கூறினர். நம்முடைய சுயநலத்திற்கும் விருப்பு வெறுப்புக்கும் இடம்கொடாது, மற்றவர்களிடம் உள்ள நல்ல அம்சங்களைக் காண வேண்டுமென அவர் நமக்குப் போதித்தார். அவருடைய வாழ்க்கையின் கடைசி மாதங்களும் அவருடைய மரணமும், அவருடைய பெருந்தன்மை, சகிப்புத்தன்மை, ஐக்கிய உணர்வு ஆகியவற்றின் சின்னமாக விளங்கின. அவர் இறப்பதற்குச் சிறிது நேரத்துக்கு முன்பு, இவைகளுக்காகப் பாடுபடுவோம் என்ற வாக்குறுதியை நாம் அவருக்கு அளித்தோம்.

**நம் உறுதிமொழியை மறக்கக்கூடாது**

அந்த உறுதிமொழியை நாம் காப்பாற்ற வேண்டும். இந்தியாவில் வாழும் எல்லோரும்-அவர்கள் எந்த மதத்தைச் சார்ந்தவர்களாக இருந்தாலும்-இது ஒரு பொது வீடு என்பதை நினைவிற்

கொள்ளவேண்டும். நம்முடைய பரம்பரைச் சொத்தில் எல்லோருக்கும் சம பங்கு உண்டு; சம உரிமைகளும் பொறுப்புகளும் உண்டு. நம்முடைய நாடு,பல வகுப்பினர் சேர்ந்து வாழும் ஒரு நாடு. எல்லாப் பெரிய நாடுகளும் அப்படித்தான் இருக்கவேண்டும். நாம் குறுகிய நோக்கம் கொண்டால், இந்தப் பெரிய தேசத்தின் எல்லை வரையறையை குறுக்க முயன்றால், அவர் நமக்குக் கடைசியாக கற்பித்த பாடத்துக்கு நம்பிக்கை துரோகம் செய்வதாக ஆகும். அது விபரீதமான விளைவுகளுக்கு இடமளிக்கும். அவர் எந்தச் சுதந்திரத்துக்காகப் பாடுபட்டாரோ, எந்தச் சுதந்திரத்தை நமக்கு அவர் பெற்றுத்தந்தாரோ, அதை இழப்பதற்கும் வழிகோலிவிடும்.

கடந்த கால் நூற்றாண்டுக்கும் மேலாக, இந்திய சுதந்திரத்துக்கு மட்டுமல்லாமல் உலக அமைதிக்கும் காந்திஜி மகத்தான சேவை செய்திருக்கிறார். தீமையை எதிர்க்காது பணிவதற்காக, அகிம்சைத் தத்துவத்தை அவர் நமக்குப் போதிக்கவில்லை. சர்வதேச வேறுபாடுகளை அமைதியான முறையில் தீர்ப்பதற்குப் பயன்படக் கூடிய, ஆக்கரீதியான சாதனமாகவே அஹிம்சையை அவர் நமக்குப் போதித்தார். மிகவும் பலம் பொருந்திய போர்க் கருவிகளைவிட மனித ஆன்மா அதிக சக்தி வாய்ந்தது என்பதை அவர் நமக்கு எடுத்துக் காட்டினர். அரசியல் நடவடிக்கைகளில் அவர் நீதிநெறிக் கொள்கைகளைக் கடைப்பிடித்தார். மார்க்கமே இறுதியில் இலட்சியத்தை உருவாக்குவதால் இலட்சியத்தையும் மார்க்கத்தையும் பிரிக்கமுடியாது என்று சுட்டிக் காட்டினர். மார்க்கம் தீயதாக இருந்தால் இலட்சியமும் சீர்கெட்டு, தீயதாகி விடுகிறது. அநீதியை அடிப்படையாகக் கொண்ட எந்த

**உலக அமைதிக்கு அஹிம்சை**

சமுதாயமும், அழிவை ஏற்படுத்தக்கூடிய முரண்பாடான சக்திகள் உள்ளதாகவே இருக்கும்.

சில குறிப்பிட்ட தடங்களிலேயே சிந்திக்கப் பழகியுள்ள இந்த நவீன உலகத்திற்கு இவைகளெல்லாம் விநோதமாகவும் நடைமுறைக்குச் சாத்தியமற்றதாகவும் தோன்றலாம். ஆயினும், மற்ற முறைகளெல்லாம் தோல்வியடைந்திருப்பதை மீண்டும் மீண்டும் நாம் கண்டிருக்கிறோம். பன்முறையும் தோல்வியடைந்திருக்கும் ஒரு முறையை மேலும் பின்பற்றுவதைக் காட்டிலும், நடைமுறைக்கு ஒவ்வாத காரியம் இருக்க முடியாது. மனித இயற்கையில் தற்போதுள்ள குறைபாடுகளேயோ அல்லது இராஜதந்திரிகள் உடனடியாகக் காணக்கூடிய அபாயங்களேயோ நாம் அலட்சியம் செய்யமுடியாமல் இருக்கலாம். தற்போதைய உலகில், யுத்தத்தைப் பூரணமாக நாம் புறக்கணித்து ஒதுக்கி விடவும் முடியாது. ஆனால், நம்முடைய தேசிய, சர்வதேசிய உறவுகளில் தார்மிக நெறிக்குத் தலையாய முக்கியத்துவம் அளிக்காவிட்டால், நமக்கு நிலையான அமைதி கிட்டாது என்பதை நான் நன்கு உணர்ந்து வருகிறேன். சரியான மார்க்கத்தை நாம் கடைப்பிடிக்காவிட்டால், இலட்சியமும் சரியாக அமையாது. அதிலிருந்து புதுத் தீமைகள் ஏதாவது தோன்றிவிடலாம். காந்திஜி போதனைகளின் சாரம் இது. இதைத் தெளிவாக அறியவும் செயல்படவும், அதன் முக்கியத்துவத்தை மனிதவர்க்கம் உணர வேண்டியது அவசியம். கண்கள் இரத்தச் சிவப்பேறியிருக்கும்போது, பார்வை மங்கிவிடுகிறது.

**இக்காலத்திலும் நீதிநெறி அவசியம்**

நம்முடைய தோல்விகளும் தவறுகளும் பல. இவைகளில் சில, தெளிவாக, வெளிப்படையாகத் தெரி

கின்றன. ஆனால், உண்மைத் தோல்வி என்பது ஆன்மாவின் தோல்வி; யாருடைய விவேகமான வழிகாட்டுதலின்கீழ் நாம் கடந்த நூற்றுண்டுக்கு மேல் போராடி முன்னேறினேமோ அந்த தேசப் பிதா கூறிய உயர்ந்த நெறியிலிருந்து வீழ்ச்சி யடைவதே உண்மையான தோல்வியாகும்.

**உண்மையான தோல்வி**

அச்சம் என்பது கண்ணியக் குறைவானது என்பது மட்டுமல்ல, வேற்றுமை உணர்ச்சிக்கும் இம்சைக்கும் அதுவே உற்பத்தி ஸ்தானம். ஆகையால் அச்சத்தைக் களைந்தெறிய வேண்டும் என்று அவர் கூறினர். நம்மில் பலர் இந்த போதனையை மறந்தோம். அச்சம் நம்மைப் பிடித்துக் கொண்டது. தூரத்தில் உள்ள பகைவன் ஒருவனைப் பற்றி நமக்கு இந்த அச்சம் ஏற்படவில்லை. நம்மில் ஒருவரைப் பற்றி ஒருவர் அச்சம் கொண்டோம். அதைத் தொடர்ந்து பல தீய செயல்கள் விளைந்தன.

**அச்சத்தால் வந்த தீமைகள்**

எந்த ஆசான் நமக்கு வழிகாட்டி, ஊக்குவித்தாரோ அவர் இப்போது இல்லை. இப்போது பாரத்தை நாமே சுமந்தாக வேண்டும். ஆகவே நமக்கு நாமே கேட்டுக் கொள்ள வேண்டிய முதல் கேள்வி இது தான்: அவருடைய போதனையில் நாம் உறுதியாக இருக்கிறோமா? அல்லது, வழிமாறி புதுப்புதுப் பாதைகளில் சென்றுகொண்டிருக்கிறோமா?

**பாதையில் உறுதியாய் இருக்கிறோமா?**

இந்தியா சுபிட்ச மடைய வேண்டுமானல், அதன் மதிப்பு உயரவேண்டுமானல் - இவை நடந்து தானாகும் - காந்திஜியின் செய்தியையும் போதனைகளையும் நாம் கடைப்பிடிக்க வேண்டும். இதை முன்னைக் காட்டி

லும் இப்போது நான் நன்கு உணர்ந்திருக்கிறேன். நான் பலவீனமானவன். நான் எந்த இந்தியாவின் சேவைக்காக என்னை அர்ப்பணித்திருக்கிறேனே அதற்குத் தகுதியற்றவன் என்பது பலமுறை நிரூபணமாகியிருக்கிறது. இதை நான் அறிவேன். ஆனல், நாம் என்ன தான் தகுதி யற்றவர்களாக இருந்தாலும், நம்முடைய ஆசான் கொடுத்த பலத்தில் ஒரு சிறிதாவது நம்மிடம் இருக்கிறது. இந்த பலமானது அவரிடமிருந்து மட்டுமல்லாமல், அவருடைய செய்தியிலிருந்தும் கிடைக்கிறது. அவர் நமக்கு அளித்த மகத்தான போதனைகள், நமக்குச் சுட்டிக்காட்டிய குறிக்கோள்கள் ஆகியவற்றை வேறு எல்லாவற்றிற்கும் மேலாக, நாம் நினைவுகொள்வோம். இந்த போதனைகளையும் குறிக்கோள்களையும் நாம் மறந்தால், நமது நாட்டிற்கும் இலட்சியத்துக்கும் துரோகம் செய்தவர்களாவோம்.

**காந்தியமே இரட்சிக்கும் வழி**

தனிப்பட்ட வாழ்க்கையில் மட்டுமல்லாது, பொது விவகாரங்களிலும், பல்வேறு நாடுகளின் உறவிலும் சத்தியத்தையும் நேரான வழியையும் கடைப்பிடிக்க வேண்டும் என்று அவர் நமக்குப் போதித்தார். மனிதனின் பெருமையையும் உழைப்பின் மதிப்பையும் அவர் நமக்குக் கற்பித்தார். "வேற்றுமை உணர்விலிருந்தும் இம்சையிலிருந்தும், வேற்றுமை உணர்வும் இம்சையும் அழிவும்தான் பலனகக் கிடைக்கும்; வேறு எதையும் அடைய முடியாது" என்ற மூதுரையை அவர் திருப்பிக் கூறினர். இவ்வாறு அவர், அச்சமின்மை, ஐக்கியம், சகிப்புத் தன்மை, அமைதி ஆகியவை நிறைந்த ஒரு வழியை நமக்குக் காட்டினர்.

**மூதுரையைத் திருப்பிக் கூறினர்**

அவருடைய போதனையை எந்த அளவுக்கு நாம் கடைப்பிடித்துள்ளோம்? அதிகமல்ல என்பதை நான்

பணிவுடன் கூறிக் கொள்ள விரும்புகிறேன். ஆயினும் அவரிடமிருந்து நாம் நிறையக் கற்றுக் கொண்டோம்.

**விடுதலை பெற்றவுடன் மறந்தோம்**

அவருடைய வழிகாட்டுதலின் கீழ், அமைதியான முறைகளின் மூலம் நாம் நமது சுதந்திரத்தை அடைந்தோம். ஆனால் விடுதலையடைந்த க்ஷணத்திலேயே நாம் அதை மறந்து, தவறான வழிகளில் சென்றுவிட்டோம். இதன் மூலம், இந்தியாவுக்காகவும், பல சகாப்தங்களாக இந்தியா காப்பாற்றி வந்த மகத்தான உண்மைகளுக்காகவும் ஓயாது துடித்து வந்த, பெருமை வாய்ந்த அந்த இதயத்துக்கு நாம் எல்லையற்ற வேதனையைக் கொடுத்துவிட்டோம்.

இன்று நிலைமை என்ன? நாம் அவரை நினைத்துப் புகழும்போது, அவருக்குச் சிலை எழுப்பவேண்டுமென்று சில சமயம் சிறுபிள்ளைத்தனமாகக் கூறும்போது, அவர் எதற்காக வாழ்ந்து மடிந்தார் என்ற மகத்தான குறிக்கோளைப்பற்றி நாம் சிந்தித்துப் பார்க்கிறோமா? நாம் எல்லோருமே அந்த உயர்ந்த குறிக்கோளிலிருந்து அதிக தூரத்திலேயே வாழ்கிறோம். ஆயினும், அவர் இயக்கி

**இரு வேறு சக்திகள்**

விட்டுச் சென்ற சக்திகள், அமைதியாகவும் பலத்துடனும் செயலாற்றுகின்றன. அவை, அவர் விரும்பிய வழியில் இந்தியாவை முன்னேக்கிச் செலுத்துகின்றன என்று நான் நம்புகிறேன். இதற்கு நேர்மாறான திசையில் இயங்கும் மற்ற சக்திகள்-பிரிவினை, அசத்தியம், இம்சை, குறுகிய மனேபாவம் ஆகிய சக்திகள் - இருக்கத்தான் செய்கின்றன. உலகமெங்கும் நல்ல சக்திகளுக்கும் கெட்ட சக்திகளுக்குமிடையே சண்டை நடப்பதுபோல இந்த இரண்டு சக்திகளுக்குமிடையே ஓயாது சண்டை நடக்கிறது. காந்திஜியின் நினைவுக்கு நாம் மரியாதை தெரிவிக்க வேண்டுமென்றால், நாம் அதைச் செயலின்

மூலம் காட்ட வேண்டும். அவர் எந்த இலட்சியங்களுக்காக வாழ்ந்தாரோ அவைகளுக்காக ஓயாது பாடுபடுவதன் மூலம் காட்டவேண்டும்.

நான் இந்தியாவை நேசிக்கிறேன். அதற்குத் தொண்டாற்ற விரும்புகிறேன். இந்தியா பூகோள ரீதியாகப் பெரிய நாடு என்பதற்காக நான் இவ்வாறு விரும்பவில்லை. முற்காலத்தில் அது பெருமை பொருந்திய நாடாக இருந்தது என்பதற்காகக்கூட அல்ல. ஆனல், இந்தியாவின் மீது இன்று நான் வைத்துள்ள நம்பிக்கைக்காகத்தான். சத்தியத்துக்காகவும், சுதந்திரத்துக்காகவும், வாழ்வின் மற்ற உயர்ந்த அம்சங்களுக்காகவும் அது பாடுபடும் என்று நான் வைத்துள்ள நம்பிக்கைக்காகத்தான்.

**என்னுடைய தேசத்தொண்டு ஏன் ?**

காந்திஜி நம்முன் வைத்த இந்த உயர்ந்த இலட்சியங்களுக்காகவும், குறிக்கோள்களுக்காகவும் இந்தியா பாடுபடவேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்களா? அப்படியாயின் அவற்றின் அடிப்படையில் நீங்கள் சிந்திக்கவும் செயலாற்றவும் வேண்டும். க்ஷணநேர ஆசையிலோ அல்லது சிறு நன்மைகள் கிடைக்கும் என்பதற்காகவோ நீங்கள் அதிலிருந்து விலகிச் சென்றுவிடக் கூடாது. தேசத்தைப் பலவீனப் படுத்தும் ஒவ்வொரு மனேபாவத்தையும், அது வகுப்புவாதமாக இருந்தாலும் சரி, பிரிவினை உணர்ச்சியாக இருந்தாலும் சரி, குருட்டு மத வெறியாக இருந்தாலும் சரி, மாகாண வேற்றுமை உணர்ச்சியாக இருந்தாலும் சரி, வகுப்பு அகந்தையாக இருந்தாலும் சரி, அவைகளை வேருடன் களைந்தெறியவேண்டும்.

**சிறு லாபங்களுக்காக நெறி தவருதீர்**

மற்ற எந்த தேசத்தின் மீதும் இந்தியா ஆக்கிரமிப்பை மேற்கொண்டால், இந்திய அரசாங்கத்தில் எனக்கோ என்னுடைய சகாக்களில் பலருக்கோ இடமிருக்காது. நாம் ஆக்கிரமிப்பில் இறங்கினால், நாம் எதற்காக இதுவரை பாடுபட்டோமோ, காந்திஜி எதை நமக்குப் போதித்தாரோ அவைகளையெல்லாம் மீறியவர்களாவோம்.

**இந்தியா ஆக்கிரமித்தால் ?**

மற்ற நாடுகளில் என்ன நடந்தாலும் சரி, நாம் அமைதியாக இருப்போம். காந்திஜியின் போதனைகளின்படி உண்மையாக நடக்க முயற்சி செய்வோம். நாம் அவர் மீது நம்பிக்கை வைத்தால், நம் மீதும் இந்தியாவின் மீதும் நம்பிக்கை வைத்தவர்களாவோம். இறுதியில், நம்முடைய அருமைத் தாய்நாட்டில் எல்லாம் நன்மையாகவே முடியும்.

**காந்திஜிமீது நம்பிக்கை**

எதிர்காலத்தைப் பற்றி நான் அச்சப்படவில்லை. இராணுவ அடிப்படையில் பார்த்தால், இந்தியா அவ்வளவு பலம் வாய்ந்த நாடு அல்ல. எனினும், என் மனதில் அச்சம் இல்லை. பெரிய வல்லரசுகளின் பலம், அவைகளின் படைகள், அணிகள், அணுக்குண்டுகள் ஆகியவைகளைக் கண்டெல்லாம் நான் அஞ்சவில்லை. அதுதான் எனது ஆசான் எனக்குக் கற்றுக் கொடுத்த பாடம். ஒரு பலம் பொருந்திய சாம்ராஜ்யத்தையே, நிராயுதபாணிகளாக நாம் எதிர்த்தோம். அந்தக் காலம் முழுவதுமே, தீய சக்திக்குப் பணிவதில்லையென்று நாம் உறுதியாக இருந்தோம். இதனால் நமக்குப் பலமும் ஆதரவும் கிடைத்தன. இந்தப் பாடம்தான் என் முன்னால் இருக்கிறது; இதுவே நம் எல்லோருடைய முன்பும் இன்று இருக்கிறது. அச்சம் ஒரு பயங்கரமான பிரச்னை. ஆனால்,

**அச்சம் வேண்டாம்**

இந்த அச்சத்தை நாம் அகற்றி விட்டோமானல், நமக்கு மட்டும் நம்பிக்கையிருக்குமானல், பிறர் மீது நம்பிக்கை வைப்பதனல் ஏற்படக் கூடிய அபாயங்களை நாம் ஏற்க முன்வரலாம். கடுமையான பேச்சு, இம்சை நடவடிக்கை, முடிவில் போர் ஆகியவைகளில் மட்டும் நாம் இறங்கி விடக் கூடாது.

**அவர் வழியில் நடந்தால் வெற்றி**

காந்திஜியின் மரணம், அவர் எந்தெந்த லட்சியங்களின் சின்னமாக விளங்கி வந்தாரோ அவைகளில் சிலவற்றைப் பற்றிச் சிந்திக்குமாறு செய்தது. அவர் வாழ்வைக் காட்டிலும் அவருடைய சாவு, இவைகளைப் பற்றி அதிகம் சிந்திக்குமாறு செய்தது. அவர் எதனெதன் சின்னமாக விளங்கி வந்தாரோ அவைகளை நாம் புரிந்து கொண்டு அதன்படி நடந்தாலொழிய நாம் வெற்றியடைய முடியாது. இதை வேறு வகையாகக் கூறப்போனல், அவைகளை நாம் புரிந்து அவைகளின் படி செயலாற்றினல் நாம் நிச்சயம் வெற்றியடைந்தே தீருவோம்.

**இந்தியாவின் புகழ் காந்திஜியால்தான்**

பல்வேறு காரணங்களுக்காக, இன்று இந்தியா உலகத்தில் பெரும் பெயர் பெற்றிருக்கிறது. ஆனல், இவைகளுக்கெல்லாம் மிக முக்கியமான காரணம், மகாத்மா காந்திதான். அவர்தான் இந்தியாவுக்கு இவ்வளவு பெரிய அந்தஸ்தை அளித்தவர். இந்தியாவின் தரை, கடற் படை பலத்தினலோ அல்லது இந்தியாவின் சொத்தினலோ அதற்கு இந்த அந்தஸ்துக் கிடைக்கவில்லை. அதற்குப் பதிலாக இம் மாபெரும் மனிதர் தார்மிக அடிப்படையில் இவ்வுலகம் எவ்வளவு சிறுமை வாய்ந்ததாக இருக்கிறது என்பதை உலக அரசியல்வாதிகளுக்கெல்லாம் எடுத்துக் காட்டியதால், இந்த அந்தஸ்துக் கிட்டிற்று. தார்மிக அடிப்படையில்

இந்தியாவை மக்கள் மதித்ததால், இந்தியா இந்த உன்னத இடத்தைப் பெற்றது. அவர்கள் எண்ணியதும் சரிதான். ஏனெனில், நம்மில் பெரும்பாலோர் சிறுமை படைத்தவர்கள் என்ருலும், காந்திஜியைப் பின்பற்று வதற்குக்கூடத் தகுதியற்றவர்கள் என்ருலும், இந்தியா அவரை உற்பத்தி செய்திருக்கிறதல்லவா?

வெறுப்புணர்ச்சியாலோ அல்லது இம்சையாலோ அல்லது சகிப்புத் தன்மையில்லாது இருப்பதனுலோ, தேசங்களின் அந்தஸ்து உயர்வதில்லை, அவை விடுதலை யடைவதுமில்லை என்று அவர் நமக்குக் கூறினர். ஓரளவாவது அவருடைய தலைமையை நாம் பின்பற்றிய தால் தான் நாம் அமைதியான முறையில் சுதந்திரம் பெற்ருேம். அச்சம், வெறுப்புணர்ச்சி, இம்சை ஆகிய மூன்றையும் சக்கரம்போல் உலகம் சுற்றிக்கொண்டே வருகிறது. இதற்கு மாற்று வழி முறைகளைக் கண்டுபிடித்து அவைகளைக் கடைப்பிடித்தாலொழிய, அச்சத்தினல் ஏற்படும் இத்தீய சக்கரத்திலிருந்து உலகம் தப்ப முடியாது. ஆகையால், நல்ல மார்க்கம் நல்ல லட்சியத்துக்காக நிச்சயம் இட்டுச் செல்லும் என்ற மன உறுதியுடன் நாம் நல்ல மார்க்கத்தைக் கடைப் பிடிப்போம். இவ்வாறு உலகத்தின் இணைப்புக்கும் ஐக்கியத்துக்கும் நாம் உதவ வேண்டும். இன்றைய உலகத்திற்கு இவைதான் அவசரத் தேவையாய் இருக்கின்றன.

**உலகின் "தீய சக்கரம்"**

எனக்கும் என்னுடைய அரசாங்கத்துக்கும் அடிக்கடி மிகக் கடினமான ஒரு பிரச்னை ஏற்படுகிறது. அரசியல் ரீதியாக, காந்தீயக் கொள்கையில் நாம் பிறந்து வளர்ந் திருக்கிருேம். ஆயினும் அஹிம்சையின் விஷயத்திலோ அல்லது பொருளாதாரத்திலோ நாம் காந்திஜியின் கருத்

துக்களைப் பூரணமாக ஏற்றுக் கொள்ளவில்லை. அவை களில் பலவற்றை, நம்முடைய நாட்டுக்குப் பொருத்த மானவைகளை நாம் கற்றுக்கொண்டோம். இவை நூற்றுக்கு நூறு அல்லாவிட்டாலும், பெருமளவுக்கு, உலகிற்கும் பொருத்தமானவையாகவே இருக்கும். இதை மனதில் வைத்துக் கொண்டு, விடுதலைப் போராட்ட முழுவதிலும் அகிம்சை முறைகளைக் கடைப்பிடிக்க முயன்ற மக்கள், பயங்கரமான இம்சையை எதிர்நோக்கி யிருக்கும் ஒரு நிலையை எண்ணிப் பாருங்கள். மற்றொரு அரசின் ஆயுதந் தாங்கிய பலத்தை எதிர்த்துச் சமாளிக்க வேண்டிய நிலையை நினைத்துப் பாருங்கள். இவ்வாறெல்லாம் செய்வது நமக்கு இன்பமாக இல்லை. நம்முடைய மனதில் பல குழப் பங்களையும், அலை மோதல்களையும் இது ஏற்படுத்தியது.

**"நாங்கள் தவறினோம்"**

ஒரு அரசாங்கம் என்ற முறையில், நாட் டில் அமைதியையும் ஒழுங்கையும் ஏற் படுத்த வேண்டிய பொறுப்பு நமக்கு உண்டு. ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்டாவிட்டால் நாடே துண்டு துண்டாகப் போய் விடலாம். இந்தப் பொறுப்பை விட்டுவிட்டு அரசாங்கம் வேறுவிதமாக நடந்துகொள்ள முடியாது. ஆனால், நம்மு டைய மனதில் மட்டும், இந்த நிலையில், காந்திஜி போதித்த மாபெரும் போதனைகளைப் பற்றிப் பேசுவது வெளிவேஷமும் பாசாங்கும் ஆகாதா என்ற உணர்வும் மனப் போராட்டமும் இருந்து வந்தது. நாம் காந்திஜி யைப் பற்றிப் பேசிக்கொண்டே ஒவ்வொரு கட்டத்திலும் அவருடைய கொள்கைக்கு முரணாக நடக்க நேரிடுகிறதே என்று எண்ணினோம். இந்த எண்ணம் நமக்கு மனவேதனை அளித்தது. நாட்டில் இருந்த நடைமுறை நிலவரங்களை அனுசரித்து ஒரு குறிப்பிட்ட வழியில் நாம் செயல்பட வேண்டியதாயிற்று. நாம் வேறு விதமாக நடந்திருந்தால், நிலைமை இதைக் காட்டிலும் நன்றாக இருந்திருக்குமா என்

பது எனக்குத் தெரியாது. நமது அறிவுக்குட்பட்ட அளவில் நாம் நடந்து வந்தோம். எது தவிர்க்க முடியாது என்று கருதினேமோ அதைச் செய்து வந்தோம். ஆனல், அதே சமயம் காந்திஜி நமக்குக் கூறிய போதனைகளில் இருந்த உண்மைகள் பலன் அளிக்கக் கூடியவைதான் என்பதை நாம் ஒருபோதும் மறுத்ததில்லை.

அரசை எதிர்த்துப் போராடும் புரட்சியில் நாம் நமது வாழ்க்கையை செலவிட்டுள்ளோம். புரட்சிப் பரம்பரையில் உருவானவர்கள் நாம். இப்போது நாம் பதவிப் பொறுப்பில் அமர்ந்துள்ளோம். கஷ்டமான பிரச்னைகளை நாம் தீர்த்து வைக்க வேண்டியதிருக்கிறது. இப்படிப்பட்ட ஒரு நிலை, யாருக்கும் எந்த சமயத்திலும் எளிதானதாக இருக்காது. அதே சமயம், நாம் வெறும் புரட்சிவாதிகளாகவும், ஆரவாரக்காரர்களாகவும், பலவற்றை எதிர்த்து உடைத்தெறிபவர்களாகவும் மட்டும் இல்லை. மகாத்மா காந்தியின் கீழ் ஒரு உயர்ந்த பரம்பரையில் உருவானவர்கள் நாம். அந்தப் பரம்பரையானது நீதிநெறிப் பரம்பரை, தார்மிகப் பரம்பரை. ஆனல், அதே சமயம் அந்தத் தார்மிக, நீதிநெறிக் கோட்பாடுகளை நடைமுறை அரசியலில் அனுஷ்டித்த பரம்பரை. அந்த மாபெரும் மனிதர், ஒரு செயல் முறையை நம்முன் வைத்தார். இது உலகில் ஈடு இணையற்றது.

**தார்மிக பரம்பரை**

இதில் அரசியல் வேலைகளும் அரசியல் போராட்டமும் கலந்திருந்தன. சில தார்மிக, அறநெறிக் கோட்பாடுகளுடன் விடுதலைப் போராட்டம் நடந்தது. நம்மில் யாராவது-எல்லோரும் அல்ல-எந்த தார்மிக, அறநெறிக் கோட்பாடுகளின்படி வாழ்ந்திருக்கிறேம் என்பதை நான் நிச்சயமாகக் கூறமுடியாது. ஆனல், ஒன்றை மட்டும் நான் உறுதியாகக் கூற

முடியும். கடந்த முப்பது ஆண்டுகளில் நம்மில் எல்லோரும் ஒரு சிறிதளவோ, பெருமளவோ, ஏன், இந்த நாடே ஒரு சிறிதளவோ அல்லது பெருமளவோ இப்பெரிய ஆசானின் கோட்பாடுகளால் உயர்த்தப்பட்டிருக்கிறோம்.

அந்த இலட்சியக் கண்ணோட்டத்துடனும், நீதிநெறிப் பின்னணியுடனும் நாம் அப்போது நடைமுறைப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு அக்குறிப்பிட்ட தத்துவத்தைப் பயன் படுத்துவதானது, மிக மிகக் கஷ்டமானதாய் இருக்கிறது. தனிப்பட்ட மனிதர்களும் கோஷ்டிகளும் தேசங்களும், இதற்கு முன்பு பலமுறை அனுபவிக்க வேண்டியிருந்த ஒரு போராட்டம் இது. வழக்கத்திற்கு மிகவும் மாறான சூழ்நிலைகளில் இந்நிலைமை எங்களுக்கும் ஏற்பட்டது. அந்தச் சூழ்நிலைகளால் பிரச்னை மேலும் கடினமாயிற்று; இதனால் தான் எங்களில் பெரும்பாலோருக்கு "ஆன்மிகப் பிரசவ வேதனை" ஏற்பட்டது. பல சந்தர்ப்பங்களில், காந்திஜியைப் பற்றியும் அவருடைய தத்துவத்தைப் பற்றியும், அவருடைய மகத்தான போதனையைப்பற்றியும் நாங்கள் போதுமான அளவு சிந்திக்கவில்லை. அவைகளை அடிக்கடி புகழ நேர்ந்தபோது நாங்கள் எங்களுக்குள்ளேயே, "அவருடைய போதனைகளைப் பற்றியே பேசிக்கொண்டு அதன்படி வாழ முடியாத நாம் கபட வேடதாரிகளா? உலகத்தையும் நம்மையும் ஏமாற்றிக் கொண்டிருக்கிறோமா?" என்று கேட்டுக் கொண்டோம். ஏனெனில், நாங்கள் கபட வேடதாரிகளாக இருந்தால், நிச்சயமாக நமது எதிர்காலம் இருளடைந்ததாகவே இருக்கும். வாழ்க்கையின் சிறு விஷயங்களில் நாம் கபடதாரிகளாக இருக்கலாம். ஆனால், பெரிய காரியங்களில் பாசாங்குக்காரர்களாக இருப்பது ஆபத்தானதாகும். நம்முடைய மாபெருந் தலை

**குருட்டுத்தனமாகப் பின்பற்றுவதா?**

வருடைய பெயரையும் புகழையும் பயன்படுத்திக் கொண்டு, அவைகளின் நிழலில் நின்றுகொண்டு, இந்த நாட்டிற்கும் உலகத்திற்கும் அவர் அளித்த செய்திக்குப் புறம்பாக எண்ணியும் செயல்பட்டும் வருவோமானால், அது மிகப் பெரிய பேரழிவாகத்தான் இருக்கும். இந்தச் சிந்தனைப் போராட்டங்களெல்லாம் எங்கள் மனதில் ஏற் பட்டன. இன்றும் தொடர்ந்து ஏற்பட்டுக் கொண்டிருக் கின்றன. சூழ்நிலைகளின் நிர்பந்தத்தால் இலட்சியத்துக் கும் நடைமுறைக்கும் ஏற்பட்டுள்ள இந்த இடைவெளி யைக் குறைக்க ஓயாது முயற்சி செய்வதைத் தவிர இப் பிரச்னைக்கு இறுதியான பரிகாரம் இல்லை போலும்! சூழ் நிலைகளில் ஏற்பட்டுள்ள மாறுதலைக் கவனியாது, உயிரற்ற இயந்திரங்கள்போல, அவர் சொன்னதையெல்லாம் அப் படியே நாம் நிறைவேற்றி வைக்க முடியாது. நம்முடைய பெரிய தலைவரும் நம்மிடமிருந்து அவ்வாறு எதிர்பார்த் திருக்கமாட்டார் என்று நான் உறுதியாக நம்புகிறேன். ஆனால், அதே சமயம் நாம் பலமுறை உறுதிமொழி எடுத் துள்ள அந்த இலட்சியங்களை மறந்துவிடாது மனதிற் கொண்டு செயலாற்றவேண்டும்.

ஒரு பிரச்னையை ஒரு தீர்க்கதரிசி அணுகுவதற்கும் ஒரு அரசியல்வாதி அணுகுவதற்கும் எப்போதுமே மாபெரும் வேறுபாடு உண்டு. தீர்க்கதரிசியாகவும் மாபெரும் அரசியல் வல்லுநராகவும் இருந்த ஒருவர் நம்மிடையே வாழ்ந்தார். ஆனால், நாம் தீர்க்கதரிசிகளல்ல. அரசியலிலும் நாம் பெரிய வல்லுநர்களல்ல. நாம் கூறிக் கொள்ளக் கூடியதெல்லாம், அந்த உயர்ந்த நிலையை எட்டிப்பிடிக்க நம்மால் இயன்ற அளவு முயற்சி செய்கிறோம் என்பதுதான். ஆனால், அதே சமயம் ஒவ் வொரு பிரச்னையையும் எங்கள் அறிவுக்கு ஏற்ற முறையில்

**நடு வழி**

ஆராய்ந்து முடிவு கட்டவேண்டும். இல்லையேல் நாம் தோல்வி யடைந்துவிடுவோம். அம் மகானின் செய்தியை மீறுவதில் ஒருபுறம் பெரிய அபாயம் இருக்கிறது. மற்றொரு புறமோ அதைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றுவதிலும், அதன்மூலம் அதனுடைய ஜீவனை விட்டுவிடுவதிலும் அதே போன்ற அபாயம் இருக்கிறது. ஆகையால் இவைகளுக்கு மத்தியமான ஒரு வழியில் நாம் செல்லவேண்டியதாக இருக்கிறது.

**காந்திஜி ஏற்கலாம். நாம்...?**

ஒரு நாட்டின் தலையாய கடமை தன்னைத் தானே பாதுகாத்துக் கொள்ளுவதாகும். ஒரு நாட்டைப் பாதுகாத்துக்கொள்ளுவது என்பதற்கு துரதிருஷ்டவசமாக, ஆயுதந்தாங்கிய படைகளையும் மற்றும் அதுபோன்றவற்றையும் நம்பியிருப்பது என்பது பொருளாகும். ஆகவே, அவசியமான இடங்களிலெல்லாம் நமது பாதுகாப்புச் சாதனங்களைப் பலப்படுத்துகிறோம். அவ்வாறு செய்யாமல் இருப்பதில் ஏற்படக் கூடிய அபாயத்தை நாம் தாள முடியாது. அப்படிப்பட்ட அபாயத்தை மகாத்மா காந்தி ஏற்றிருப்பார் என்பதில் ஐயமில்லை. அவர் அவ்வாறு செய்திருந்தால் அது தவறு என்றும் நான் கூறமாட்டேன். அந்த அபாயத்தை ஏற்கும் அளவுக்கு ஒரு நாடு பலமுள்ளதாக இருந்தால், அது அழியாது மீண்டுவிடும் என்பது மட்டுமல்ல, ஒரு பெருமை மிக்க நாடாகவும் விளங்கும் என்பது உண்மையே. ஆனால், நாமெல்லோரும் சிறியவர்கள். அந்த அபாயத்தை ஏற்க நமக்குத் துணிச்சல் இல்லை.

நான் இயற்கையாகவே இந்தியாவின் நலனைக் கவனித்திருக்கிறேன். ஏனெனில், அதுதான் எனது முதல் கடமை. உலகத்தின் பெரிய நன்மைக்கான அடிப்படையிலேயே, இந்தக் கடமையைப்பற்றி நான் எப்

போதும் சிந்தித்து வந்திருக்கிறேன். நம்முடைய ஆசான் நமக்குக் கற்பித்த பாடமும் இதுவே. எப்போதுமே, இந்தியாவின் சுதந்திரத்தையும் கண்ணியத்தையும் ஒரு புறம் பாதுகாத்துக்கொண்டு, மற்றவர்களோடு நல்லுறவுடனும் அமைதியாகவும் வாழக்கூடிய வழிகளை நாம் கடைப்பிடிக்க வேண்டும் என்று அவர் நமக்குக் கூறியுள்ளார். இன்று உலகில் பூசல் நிறைந்திருக்கிறது; அடிவானத்தில் அழிவின் தோற்றம் காணப்படுகிறது. மனிதர்களின் உள்ளங்களில் வேற்றுமை உணர்ச்சியும் அச்சமும் சந்தேகமும் தோன்றியுள்ளன. இதனல் அவர்களுடைய பார்வையே மங்கலடைந்திருக்கிறது. ஆகவே, உலகிலுள்ள இந்த நெருக்கடியைக் குறைக்கக்கூடிய எந்த முயற்சியும் வரவேற்கத் தக்கதே.

**நெருக்கடியைக் குறைக்க வேண்டும்**

எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய அபாயங்களுக்கு ஆயத்தம் செய்யாமல் ஒரு நாட்டு மக்களோ, அரசாங்கமோ இருந்துவிடக்கூடாது. மகாத்மாஜியின் கொள்கையைக் கடைப்பிடிக்கும் அளவுக்கு நமக்குத் தைரியம் இருந்தாலொழிய, துரதிருஷ்டவசமாக, நாமும் இவ்வித ஆயத்தம் செய்துகொள்ள வேண்டியதுதான். நமக்குப் போதிய தைரியமிருந்தால் நல்லது; வரக்கூடிய அபாயத்தை நாம் ஏற்போம். நாம் தைரியமுள்ளவர்களாக இருந்தால், அதுவே சரியான கொள்கை என்றுதான் நானும் நம்புகிறேன். ஆனல், தனிப்பட்ட நானே அல்லது நீங்களோ தைரியமாக இருப்பது பிரச்னை அல்ல. அந்தக் கொள்கையைப் புரிந்து பின்பற்றும் அளவுக்கு நாடு தைரியம் உள்ளதாக இருக்கவேண்டும். அந்த அளவுக்கு நாம் உயர்ந்துவிட்டோம் என்று என்னல் எண்ண முடியவில்லை. ஆகையால்

**வீணுக்கு காந்திஜி பெயர் வேண்டாம்**

வீணாக நாம் மகாத்மாவின் பெயரை உபயோகிக்கவேண் டாம். எந்த அரசாங்கமும், அமைதியே தனது குறிக் கோள் என்றும், ஆகவே பாதுகாப்பிற்காக எதுவும் செய்யவில்லையென்றும் கூறமுடியாது. நாம் முன்னெச்ச ரிக்கையுடன் இருந்து, நம்மால் இயன்ற அளவு நம்மைத் தயார் செய்துகொள்ள வேண்டி யிருக்கிறது.

நிராயுதபாணிகளாகவும், அமைதியான முறையிலும் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை நாம் எதிர்த்தோம். மற்ற எந்த நாட்டிடமிருந்தும் உதவியை எதிர்பாராது, நம் பலத்திலேயே நம்பிக்கை வைத்து, நாம் அந்த சாம்ராஜ் யத்தை எதிர்த்தோம். நம்முடைய தலைவர் மீதும், நாட் டின் மீதும், நம்மீதும் நமக்கு நம்பிக்கை இருந்தது. நம் முடைய விடுதலைப் போராட்ட காலத்தின்போது இது நமக்குப் பலம் அளித்து நம் மைக் காப்பாற்றியது. வெளிப் பார்வைக்கு நமக்குப் பலமே இல்லாததுபோல் தோன்றிய போது, நமக்குத் தன்னம்பிக்கையும் உறுதியும் இருந் திருக்கிறது அல்லவா? ஆகவே, இப்போது எவ்வளவோ நாம் நல்ல நிலைமையில் இருக்கிறோமே! இப்போது நாம் சுதந்திர மக்கள்; ஒரு நாட்டின் பலம் முழுதும் நமக்கு இருக்கிறது. பின் ஏன் நம்மீது நாம் வைத்திருந்த நம்பிக் கையும் நமது மன உறுதியும் நலிய வேண்டும்?

**இப்போது ஏன் தன்னம்பிக்கை இல்லை?**

ஆயுதமோ, அதிக வசதியோ இல்லாது நாம் இந்திய சுதந்திரத்துக்காகப் போராடினோமே! அந்தக் காலத்தை நீங்கள் ஒரு நொடிப்பொழுது நினைத்துப் பார்க்க வேண்டு மென விரும்புகிறேன். ஒரு பெரிய தலைவர் நமக்கு ஊக்க மூட்டினார். மற்றத் தலைவர் களும் நமக்கு இருந்தார்கள். ஆனால், போராட்டத்தின் கடுமையை அதிகம் முன்வந்து ஏற்ற வர்கள் இந்தியாவின் பொதுமக்கள்தான். தங்கள்

**ஏன் பயம்?**

நாட்டின் மீதும் தலைவர்கள் மீதும் அவர்களுக்கு நம்பிக்கை இருந்தது. அவர்களுக்குத் தன்னம்பிக்கையும் இருந்தது. முன்பு ஒருபோதும் இல்லாத அளவு இப்போது நமக்குப் பலம் இருக்கிறது. ஆகவே, சிலர் இப்போது தோல்வி மனப்பான்மை கொள்வதும், தன்னம்பிக்கை இழப்பதும், எல்லாச் சமயமும் புகார் கூறிக் கொண்டிருப்பதும் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

**நம்பிக்கை பெறுவோம்**

நம்முடைய விடுதலைப் போராட்ட காலத்தின்போது நம்மை முன்செலுத்திய காரிய நோக்கு, உற்சாகம், தன்னம்பிக்கை, விசுவாச உணர்வு ஆகியவற்றை மீண்டும் நாம் அடைவோமாக. நம்முடைய சிறு சண்டைகளையும் பிளவுகளையும் நாம் தூர ஒதுக்கி வைத்துவிடுவோம். நம் முன்னுள்ள மகத்தான இலட்சியத்தைப் பற்றி மட்டும் எண்ணுவோம்.

**ஒரு பாடம்**

சில வகைகளில் நாம் பலவீனமாகவே இருக்கிறோம். ஆனால், பல ஆண்டுகளுக்கு முன்பு, நாம் இதைக் காட்டிலும் பலவீனமாக இருந்தபோது, நம்முடைய பெரிய தலைவரான மகாத்மா காந்தியிடம் நாம் கற்றுக்கொண்ட பாடம் ஒன்று உண்டு. நம்முடைய மக்கள் நிராயுதபாணிகளாக விருந்தும், பண பலமோ, வெளிப்படையாகத் தோன்றக் கூடிய வேறு பலமோ இல்லாதிருந்தும், இந்தியாவில் இருந்த பலம் பொருந்திய, செல்வ வளம் மிக்க சாம்ராஜ்யத்தை எதிர்த்துப் பல ஆண்டுகள் போரிட்டார்கள்.

அது ஒரு விநோதமான சூழ்நிலை, சரியாக முப்பது ஆண்டுகளுக்கு முன்* மகாத்மா காந்தி-ஒரு வகையில்-முதன் முதலாக இந்திய அரசியலில் தோன்றிய காலத்தை நான் நினைவுபடுத்திக்கொள்ளுகிறேன். அதற்கு முன்பே

* 1949-இல் பேசியது.

இந்திய மக்கள் அவரை அறிந்திருந்தார்கள், நேசித்தார்கள், தென்னுப்பிரிக்காவில் அவர் செய்த சேவைக்காகப் பாராட்டினுர்கள். ஆனுல், அதற்கு முன்பு அகில இந்திய அடிப்படையில் இந்திய அரசியலில் அவர் பிரவேசிக்கவில்லே. அவர், திடீரென்று அரசியல் பணி புரியத் தொடங்கினுர். அவர் அளித்த செய்தியில் மந்திர சக்தி இருப்பது போல் தோன்றியது. அது எளிய முறையிலேயே அமைந்திருந்தது. இந்தியாவின் நிலேமையை அவர் ஆராய்ந்து, பயத்தினுலேயே நாம் பயங்கரமான முறையில் அவதிப்பட்டுக்கொண்டிருப்பதாகவும், குறிப்பாக இந்தியாவில் இருக்கும் பொதுமக்களே, ஏன், மற்றவர்களேக் கூட அச்சம் பீடித்திருப்பதாகவும் கூறினுர். ஆகவே அவர், "அச்சமடையாதீர்கள். ஏன் அஞ்சுகிறீர்கள்? உங்களுக்கு என்ன நிகழ்ந்துவிட முடியும்?" என்று பிரசாரம் செய்தார். நம் மனதில் இருந்த அரசியல் அச்சத்தையே அவர் இவ்வாறு குறிப்பிட்டார் என்பது தெளிவு. பிரிட்டிஷ் அரசாங்கம் விரும்பாத ஒன்றை நாம் செய்திருப்போமானுல் நாம் நிச்சயம் தண்டனே யடைந்திருப்போம். சிறைச்சாலேயில் நம்மை அடைத்து விடுவார்கள்; நம்மைச் சுட்டுத் தள்ளியுமிருக்கலாம். அதனுலேயே பொதுவாக நாட்டில் அச்சம் நிலவியது. உழவர்களில் மிகவும் ஏழைகளேயும்-மக்களில் மிக மிகத் தாழ்ந்த நிலேயில் இருந்தவர்களேயும்-உற்பத்தி செய்ததையெல்லாம் நிலச் சொந்தக்காரர்களுக்குக் கொடுத்துவிட்டு உண்ண உணவின்றி இருந்த அவர்களேக்கூட-அச்சம் பிடித்துக் குலுக்க நேரிட்டது. இந்த ஏழை மனிதன் எல்லோராலும்-அவனுடைய நிலச்சுவான்தார், நிலச்சுவான்தாரின் பிரதிநிதி, போலீஸ்காரர், லேவாதேவிக்காரர் ஆகிய எல்லோராலும்-காலால் எத்தப்பட்டு விலங்கு பூட்டப்பட்டான். அவன் யாருடன் தொடர்பு

**அச்சத்திலிருந்து விடுதலே**

கொள்ள நேரிட்டதோ அவர்களெல்லாம் அவனைப் பிடித்துத் தள்ளினர்கள். இவைகளெல்லாம் தன்னுடைய விதி என்று அவன் ஏற்றுக்கொண்டான். வானில் ஏதாவது இருந்ததோ, அல்லது காந்திஜியின் குரலில் ஏதாவது மந்திரம் இருந்ததோ எனக்குத் தெரியாது. எப்படியும், "அஞ்காதீர்கள்" என்று அவர் கூறிய எளிய சொற்களும், அவர் கூறிய முறையும், மக்களைக் கவர்ச்சி செய்துவிட்டன. நம்முடைய இதயத்தில் பிரமிக்கத்தக்க ஊக்கம் ஏற்பட்டு, நாம் அஞ்சுவதற்கு யாதொன்றும் இல்லை என்பதை உணரத் தொடங்கினேம். ஏழை விவசாயிகூட முதுகை நிமிர்த்தி உட்கார்ந்தான். பிறர் முகத்தை நிமிர்ந்து பார்த்தான். அவனுடைய குழி விழுந்த கண்களிலும் நம்பிக்கை ஒளி வீசியது. முடிவாக, இந்தியா முழுவதிலும் ஒரு மாயமான மாறுதல் ஏற்பட்டது.

பல மேடு பள்ளங்கள் ஏற்பட்டன. "அஞ்சாதே" என்ற அவருடைய போதனை நம்மை முன்னேக்கிச் செலுத்தியது. உண்மையில், அஞ்சுவதற்கு ஒன்றுமில்லை என்பதையும் நாம் அறிந்தோம். அச்சம் என்பது நாமாகப் படைத்துக்கொண்ட ஒன்றுதான். ஆயிரக்கணக்கிலும் பதினயிரக்கணக்கிலும் நாம் சிறைச்சாலைக்குச் சென்றேம். அது வசதிக் குறைவாகவிருந்தது; பலர் பெருந் தொல்லைகளையும் துயரங்களையும் அடைந்தார்கள். ஆயினும் துயரம், தொல்லை என்பது, இவைகளைப் பற்றி ஒருவர் கொண்டுள்ள கண்ணேட்டத்தைப் பொறுத்தது தான் என்பதை நாம் கண்டோம். நாம் ஏதாவது

**உயர்நோக்கும் பலவீனமும்**

பெருங் குற்றத்துக்காக, அவமானம் தரத்தக்க பெருங் குற்றத்துக்காக சிறைக்குச் சென்றிருந்தோமானல், அது நமக்குப் பயங்கரமான வேதனை அளித்திருக்கும். ஆனல், ஒரு பெரிய இலட்சியத்துக்காகச் சிறைக்குச் செல்கிறேம்

என்ற எண்ணம் நமக்கு இருந்ததால், அது அஞ்சத் தக்க காரியமாகப்படவில்லை. அதற்குப் பதிலாக ஆசைப் படவேண்டிய ஒன்ருகவே பட்டது. நான் இவைகளையெல் லாம் ஏன் உங்களுக்குச் சொல்கிறேன் என்ருல், இன் றைய உலகத்திலும் பல பெரிய நாடுகளுடன் ஒப்பிட் டால், நாம் பலவீனமானவர்களாகவே இருக்கிரும். ஆயுதந் தாங்கிய போர் ஒன்று ஏற்பட்டால் அதில் நாம் பலவீனமானவர்களே. நம்மிடம் அணுக்குண்டு இல்லை. ஆனல், நான் உண்மையைக் கூறுவனேயானல், அணுக் குண்டு இல்லாததற்காக நாம் மகிழ்ச்சியே அடை கிருேம்.

போர்கள் ஏற்பட்டிருக்கின்றன; நாம் வெற்றி அடைந் திருக்கிருேம்; அந்த வெற்றியைக் கொண்டாடியுமிருக்கி ருேம். ஆயினும், வெற்றி என்பது என்ன? அதை எந்த அளவுகோல் கொண்டு நாம் அளக்கிருேம்? ஒரு சில குறிக் கோள்களை அடைவதற்காக ஒரு யுத்தம் மேற்கொள்ளப் படுகிறது. எதிரியை முறியடிப்பது மட்டும் அந்தக் குறிக்கோளை அடைந்ததாகாது. எதிரியை முறியடிப்ப தானது, நமது குறிக்கோளை அடைவதற்குத் தடங்கலாக விருந்த முட்டுக்கட்டையை அகற்றிய செயலேயாகும். ஆனல், அந்தக் குறிக்கோளை அடையாவிட்டாலோ, நாம் எதிரியைத் தோற்கடித்ததானது, ஒரு எதிர்மறை நிவாரணத்தையே அளிக்கிறது; அது உண்மையான வெற்றியுமாவதில்லை. போர்களில் எதிரிகளைத் தோற்

**குறிக்கோளைக் காப்பாற்றவேண்டும்**

கடிப்பது ஒன்றே முக்கிய நோக்கமாகக் கொள்ளப்படுகி றது. மற்றபடி, உண்மையான குறிக்கோளை மறந்து விடுகின் றனர் என்பதை நாம் கண்டிருக்கிருேம். இதன் முடி வான பலன் என்னவென்ருல், எதிரியைத் தோற்கடித்த தால் கிடைத்த வெற்றியானது அரைகுறையான வெற்

றியே. அது உண்மையான பிரச்னையைத் தீர்ப்பதில்லை. அது உடனடிப் பிரச்னையைத் தீர்த்திருக்கும் இடங்களில், மற்ற பல பிரச்னைகளுக்கு இடமளிக்கிறது. சில சமயங்களில், தீர்த்துவைத்ததைக் காட்டிலும் மோசமான பிரச்னைகளுக்கு இடங்கொடுத்திருக்கிறது. ஆகையால், யுத்தமாயினும் சரி, சமாதானமாயினும் சரி, எல்லாக் காலங்களிலுமே, உண்மையான இலட்சியம் என்ன என்பதை நாம் நம் மனதில் தெளிவாக வைத்துக்கொள்ள வேண்டும். எப்போதுமே அந்த இலட்சியத்தை அடைவதற்காக முயற்சி செய்ய வேண்டும்.

**குறிக்கோளும் மார்க்கமும்**

நம்முடைய குறிக்கோளுக்கும் மார்க்கத்துக்குமிடையே எப்போதுமே நெருங்கிய தொடர்பு இருக்கிறதென்று நான் எண்ணுகிறேன். இலட்சியம் சரியாக இருந்தாலும் கூட, மார்க்கம் தவருக இருந்தால் அது இலட்சியத்தைப் பழுதாக்கிவிடும்; அல்லது நம்மைத் தவருன வழியில் திருப்பிவிட்டுவிடும். இவ்வாறு இலட்சியமும் மார்க்கமும் ஒன்றுடன் ஒன்று சிக்கறுக்க முடியாதபடி நெருங்கி இணைந்திருக்கின்றன. அவைகளில் ஒன்றிலிருந்து மற்றென்றைப் பிரிக்க முடியாது. கடந்த காலத்தில் பல பெரிய மனிதர்கள் நமக்குப் போதித்த பாடமும் இதுவே. ஆனல், துரதிருஷ்டவசமாக நாம் இதை நினைவிற் கொள்வதில்லை.

யாருடைய வழிகாட்டுதலின் கீழும் ஆதரவிலும் நான் வளர்ந்தேனே அந்த மகாத்மா காந்தி, எப்போதுமே நீதி நெறிக் கோட்பாடுகளை வலியுறுத்தினர். இலட்சியத்துக்காக, மார்க்கத்தை ஒருபோதும் பலியிடக் கூடாது என்று நம்மை எச்சரித்தார். நாம் அவரைப் பின்பற்றுவதற்குத் தகுதியானவர்களாய் இல்லை. ஆயினும், நம்மால் இயன்ற அளவு நாம் அவரைப் பின்பற்றி

நடக்க முயற்சி செய்தோம். அவருடைய போதனையை நாம் பின்பற்றிய சிறு அளவுக்குக்கூட, அது நிறையப் பலன் அளித்தது. ஒரு பெரிய

**பாராட்டத்தக்க முறை**

சக்தி வாய்ந்த நாட்டை எதிர்த்து ஒரு சகாப்தம் முழுவதும் தீவிரமாகப் போராடிய பின்பு நாம் வெற்றியடைந்தோம் ஆனால், இந்த வெற்றியில் மிக முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய அம்சம் — இரு தரப்பினரையும் பாராட்டவேண்டிய அம்சம்— இந்த வெற்றியை நாம், அடைந்த முறைதான். இப்படிப்பட்ட போராட்டம் அமைதியான வழியில் தீர்க்கப்பட்டதற்கும், அதற்குப் பின்பு நல்லுறவான ஒத்துழைப்புஏற்பட்டதற்கும் ஒப்புமையான ஓர் உதாரணம் வரலாற்றில் இல்லை. எவ்வளவு விரைவாகக் கசப்புணர்ச்சியும் குரோதமும் நீங்கி, இரு நாடுகளும் ஒத்துழைக்கத் தொடங்கி விட்டன என்பது வியப்பளிக்கக் கூடியதாகும். ஒரு சுதந்திர நாடு என்ற முறையில், இந்த ஒத்துழைப்பை நீடிப்பதென நாமே விரும்பி முடிவு செய்துள்ளோம்.

இன்றைய உலகின் பெரும் பிரச்னைகளைத் தீர்ப்பதற்குப் பயன்படக்கூடிய சில அம்சங்கள் இந்தியாவின் அமைதிப் புரட்சியில் இருக்கின்றன. "இம்சைதான் மனிதனுடைய தலைவிதியைத் தீர்மானிக்கக்கூடியது என்பதில்லை. ஒரு போராட்டத்தை நடத்தும் முறையும் அதை முடிக்கும் முறையும் மிகமிக முக்கியமானவையாகும்" என்பதை அந்தப் புரட்சி நமக்கு எடுத்துணர்த்தியது. உலகின் தார்மிகச் சக்திகளை,

**தார்மிகமும் இம்சையும்**

இம்சைச் சக்தி புறக்கணிக்க முடியாது என்பதைக் கடந்த கால வரலாறு நமக்கு எடுத்துணர்த்தியிருக்கிறது. அவ்வாறு அது புறக்கணித்தால், தனது சொந்த அழிவைத்தான் அதன் மூலம் அது தேடிக்

கொள்ளும். இன்று இந்தப் பிரச்னையின் முக்கியத்துவம் மிக அதிகமாகியுள்ளது. ஏனெனில், இம்சைச் சக்தி வசம் உள்ள ஆயுதங்கள் சிந்திக்கக்கூட முடியாத படி பயங்கரமானவை. மனிதனுடைய அழிவுக்காக மனிதனே தனது திறமையைப் பயன்படுத்திக் கண்டு பிடித்தவை அவை. இந்த ஆயுதங்கள் இருப்பது தவிர, இருபதாம் நூற்றுண்டுக்கும், முற்கால காட்டுமிராண்டித்தனத்துக்கும் ஏதாவது வேறுபாடு வேண்டாமா? என்னுடைய ஆசான் கூறிய போதனைப்படி, இந்த நிலைமையைச் சமாளிக்கவும், நம் முன்னுள்ள பிரச்னையைத் தீர்க்கவும் வேறொரு வழி இருக்கிறது என்று நான் நம்புகிறேன்.

ஒரு அரசியல் வல்லுநனே அல்லது பொது விவகாரங்களை நிருவகிப்பவனே, நடைமுறை நிலவரங்களைப் புறக்கணிக்க முடியாது. ஏட்டில் குறிப்பிட்டுள்ள சத்தியத்தின்படி அப்படியே நடக்கமுடியாது. அவனுடைய சகோதர மக்கள் எந்த அளவுக்குச் சத்தியத்தை ஏற்கிறார்களோ அந்த அளவுக்குத் தான் அவன் செயல்பட முடியும்.

**அடிப்படை சத்தியம் மாறுது**

ஆயினும், அடிப்படையான சத்தியம் முக்கியமானதாகும். அதை எப்போதுமே நாம் மனதிற் கொள்ள வேண்டும். கூடிய வரை, நமது செயல்களில் அதுவே வழிகாட்டியாய் இருக்க வேண்டும். இல்லையேல் தீமையின் தீய சுழலில் நாம் அகப்பட்டுக்கொள்கிறோம். ஒரு தீமையானது மற்றொரு தீமைக்கு நம்மை அழைத்துச் செல்கிறது.

இந்தியா பழம் பெருமை வாய்ந்த ஒரு புராதன நாடு. ஆனால் அது, புது வேட்கைகளும் விருப்பங்களும் உள்ள ஒரு புது நாடுங்கூட. 1947 ஆகஸ்டிலிருந்து அது தனது சொந்த வெளிநாட்டுக் கொள்கையைக்

கையாளக் கூடிய உரிமை படைத்ததாய் இருக்கிறது. நடைமுறை நிலவரங்களால் இந்தியாவுக்குச் சில வரம்பு, வரையலறைகள் ஏற்பட்டுள்ளன என்பதில் ஐயமில்லை. இந்தியா அலட்சியம் செய்யவோ அல்லது கட்டுப் படுத்தவோ முடியாதவை இவ் வரையறைகள். ஆயினும், தன்னுடைய மாபெருந் தலைவரின் போதனையை இந்தியா மறக்க முடியாது. பூரணமாக அல்லாவிட்டாலும் முடிந்த அளவுக்காவது, நடைமுறை நிலவரத்திற்காக உயர்ந்த நெறியை விட்டுக்கொடுக்காமல் இருக்க இந்தியா முயன்று வந்திருக்கிறது.

**நடை முறையும் இந்தியாவும்**

உலக நாடுகள் என்னும் குடும்பத்தில் அது ஒரு புது நாடு. ஆரம்பத்தில் அதனால் உலகநாடுகளை அதிகம் மாற்ற முடியவில்லை. ஆயினும், அதற்கு ஒரு தனி அனுகூலம் இருந்தது. தனது சொந்த சக்தியையும் செல்வாக்கையும் பெருக்கி வளர்க்கக் கூடிய பெரிய வளங்கள் அதற்கு இருக்கின்றன. கடந்த கால நிகழ்ச்சிகளினாலோ, பழைய விரோதங்களினாலோ, பழைய உறவுகளினாலோ, வரலாற்றுப் பூர்வமான உரிமைகளினாலோ, பரம்பரையாக வந்த போட்டிகளினாலோ அது கட்டுப் படாதிருந்தது, அதற்கு இன்னும் பெரிய அனுகூலமாயிருந்தது. முன்னர் தன்மீது ஆட்சி நடத்தியவர்கள் மீதுகூட இந்தியாவிற்குக் கசப் புணர்ச்சி இல்லை. இவ்வாறு எந்தவிதமான விருப்பு வெறுப்புகளோ, விரோதங்களோ இல்லாது, பிறரைத் தான் வரவேற்கவும், மற்றவர்கள் தன்னை வரவேற்கவும் கூடிய நிலையில் இந்தியா, உலக நாடுகள் அமைப்புக்கு வந்தது. விவேகம் நிறைந்த சுயநல அடிப்படையிலேயே தனது வெளிநாட்டுக் கொள்கையை அது அமைத்துக் கொள்ள வேண்டியிருந்தது என்பது உண்மையே. ஆயி

**இலட்சிய நோக்கும் தேசீய நலனும்**

னும் தன்னுடைய இலட்சிய நோக்கையும் இதில் இந்தியா சேர்த்திருந்தது. அதாவது, உயர்ந்த இலட்சிய நோக்கையும் தேசிய நலனையும் அது இணைக்க முயன்றிருக்கிறது.

இந்திய வெளிநாட்டுக் கொள்கையின் முக்கிய அம்சங்கள், எந்தப் பெரிய வல்லரசுடனே அல்லது வல்லரசுகள் முகாமிலோ சேராதிருப்பதுடன் தகராறு அல்லது வாக்குவாதத்துக்கிடமான ஒவ்வொரு பிரச்னையிலும் சுயேச்சையான வழியைக் கடைப்பிடித்து அமைதிக்காகப் பாடுபடுவது, அடிமையாக இருக்கும் மக்களின் விடுதலைக்காக உழைப்பது, தேசிய சுதந்திரத்தையும் தனிப்பட்டவர் சுதந்திரத்தையும் நிலைநிறுத்தப் பாடுபடுவது, இன வேறுபாட்டை நீக்குவது, உலக மக்களில் பெரும்பாலோரைப் பீடித்துள்ள வறுமை, நோய், அறியாமை ஆகியவற்றை அகற்றுவது போன்றவையாகும். இந்தியா கடைப்பிடிக்க முயலும் கொள்கையானது, எதிர்மறையான கொள்கையோ அல்லது எப்பக்கமும் சாராத கொள்கையோ அல்ல. அது இந்திய விடுதலைப் போராட்டத்திலிருந்தும், மகாத்மா காந்தியின் போதனைகளிலிருந்தும் உருவாகிய ஒரு ஆக்கரீதியான, ஜீவசக்தி நிறைந்த கொள்கையாகும்.

**வெளிநாட்டுக் கொள்கை குறிக்கோள்**

இந்தியாவிலுள்ள நாம் முன்னேறுவதற்கும், வளர்ச்சியடைவதற்கும் மட்டும் சமாதானம் அத்தியாவசியத் தேவை என்பதல்லாமல், உலகிற்கும் அது மிக முக்கியத்துவம் வாய்ந்தது என்பது வெளிப்படையாகும். அந்த சமாதானத்தை நாம் எப்படிப் பாதுகாக்க முடியும்? ஆக்கிரமிப்புக்குச் சரணுகதியடைவதன் மூலமோ அல்லது தீமை அல்லது அநீதியுடன் இணங்கிப் போவதன் மூலமோ நாம் அதனைப் பாதுகாக்க முடியாது. அதே

சமயம், யுத்தத்துக்காகத் தயார் செய்வதன் மூலமோ அல்லது போர்முழக்கம் செய்வதன் மூலமோ அதனைக் காப்பாற்றி விடவும் முடியாது. ஆக்கிரமிப்பென்பது அமைதிக்கு அபாயம் விளைவிப்பதால் அதை நாம் எதிர்த்தே ஆகவேண்டியிருக்கிறது. ஆனால், அதே சமயம் கடந்த இரண்டு யுத்தங்களும் நமக்குக் கற்பித்த பாடத்தையும் நாம் மறந்துவிடக்கூடாது. அந்தப் பாடம் கண்முன் இருந்தும்கூட பழைய வழியிலேயே பலர் போவதுதான் எனக்கு வியப்பை அளிக்கிறது. உலகை இரண்டு விரோதமான முகாம்களாகப் பிரித்து அணி வகுக்கச் செய்வதானது, போரைத் தவிர்ப்பதற்குப் பதிலாகத் தூண்டுவதாக அமைகிறது; அது பயங்கரமான அச்ச உணர்வை ஏற்படுத்துகிறது; அந்த அச்சம் மனிதர்களின் மனதை இருளடையச் செய்து அவர்களைத் தவறான வழிகளில் செலுத்துகிறது. வாழ்க்கையில் அச்சத்தைப் போன்று தீயதும் அபாயமானதும் வேறெதுவும் இல்லை என்று கூறலாம். ஒரு பெரிய அமெரிக்கக் குடியரசுத் தலைவர் கூறியதுபோன்று, அச்சததைக் காட்டிலும் நாம் அஞ்சுவதற்கு யாதொன்றும் இல்லை.

**அமைதியைப் பாதுகாக்கும் வழி**

ஆகவே நமது பிரச்னை இந்த அச்சத்தைக் குறைப்பதும் அதற்கு இறுதியாக முற்றுப்புள்ளி வைப்பதுமேயாகும். உலக நாடுகளெல்லாம் ஒவ்வொரு பக்கத்தில் சேர்ந்து, யுத்தத்தைப்பற்றிப் பேசுவதானல், இது சாத்தியமாகாது. அப்போது யுத்தம் என்பது நிச்சயமானதாகிவிடும். நாம் நம்முடைய பலவீனத்தையும் குறைகளையும் நன்ருக அறிவோம். மற்றவர்களைக் காட்டிலும் நமக்கு உயர்ந்த நற்குணங்கள் இருப்பதாக நாம் உரிமை பாராட்டிக் கொள்ளவில்லை. ஆனல், யாருடனும் சாராது இருக்கும் இப்போதைய நிலையில் நமக்குக் கிடைக்கும் அனுகூலத்தை நாம் இழக்கவும்

**"நடு நிலை" என்பதென்ன?**

விரும்பவில்லை. இந்தச் "சார்பற்ற தன்மை" நம்முடைய நலனுக்காக மட்டுமல்ல, உலக அமைதி, சுதந்திரம் ஆகியவற்றின் நலனுக்காகவும்தான். அமைதிக்கோ அல்லது விடுதலைக்கோ அபாயம் ஏற்படும்போது, இந்தச் சார்பற்ற தன்மை என்பது தனித்து ஒதுங்கியிருப்பதாகவோ, அலட்சியமாக இருப்பதாகவோ, அல்லது எப்பக்கமும் சேராது இருப்பதாகவோ இருக்காது. மனிதனின் சுதந்திரமோ அல்லது சமாதானமோ அபாயத்தில் இருக்கும்போது, நாம் நடுநிலையாக இருக்கமுடியாது, நடுநிலையாக இருக்கவும் மாட்டோம். அப்போது நடுநிலை வகிப்பதென்பது, நாம் இதுவரை எதற்காகப் போராடி வந்தோமோ, எதற்காக இப்போது பாடுபடுகிறோமோ அதற்குத் துரோகம் செய்வதாகும்.

உலக அரசியலுக்கு இந்தியா புதிதாக இருக்கலாம். நம்முடைய சகாப்தத்தில் உள்ள மாபெரும் வல்லரசுகளுடன் ஒப்பிட்டால், நம்முடைய ராணுவ பலம் மிக மிகக் குறைவானதாக இருக்கலாம். ஆனால், சிந்தனையிலும் அனுபவத்திலும் இந்தியா புராதனமான நாடு. வாழ்க்கையென்னும் போராட்டத்தில், அடிச்சுவடு கூடக் காணமுடியாத பல நூற்றாண்டுகளைக் கழித்திருக்கிறது. அதனுடைய நீண்ட வரலாற்றில் அமைதிக்காகவே அது பாடுபட்டிருக்கிறது. ஒவ்வொரு இந்தியனுடைய பிரார்த்தனையும் "சாந்தி," "சாந்தி" என்றே முடிகிறது. இந்தப் புராதன, ஆனால் இளம் இந்தியாவிலிருந்துதான் மகாத்மா காந்தி தோன்றினார். அமைதியான போராட்ட

**சரியான அடிப்படை**

முறை ஒன்றை நமக்குக் கற்பித்தார். அது அமைதியானதாக இருந்தாலும் மிக்க பலன் அளிப்பதாக இருந்தது. அது நமக்கு விடுதலைபெற்றுத் தந்தது; நேற்றுவரை நாம் யாருடன் போராடிக்கொண்டிருந்தோமோ அவர்களோடும் நல்லுறவு கொள்ள உதவியது.

இந்தக் கொள்கையை இன்னும் விரிவான செயல் முறைக்கு எவ்வாறு கடைப்பிடிக்கமுடியும் என்பது எனக்குத் தெரியாது. ஏனெனில், சூழ்நிலைகள் மாறுகின்றன; தீமையை எதிர்க்கும் சாதனம், அத்தீமையின் இயல்பை அறிந்து தயாரிக்கப்படவேண்டியிருக்கிறது. ஆயினும், இந்தப் போராட்ட முறையின் அடிப்படைக் கொள்கையிருக்கிறதே அதுதான் மனித விவகாரங்களைத் தீர்ப்பதற்குச் சரியான வழி என்பதிலும், அதுதான் இறுதியில் பிரச்னையை மனநிறைவளிக்கும் முறையில் தீர்க்கக்கூடிய ஒரே வழி என்பதிலும் எனக்கு ஐயமில்லை.

நாம் சுதந்திரமடைவதுடன் அதைப் பாதுகாக்கவும் வேண்டும். ஆக்கிரமிப்பை நாம் எதிர்க்க வேண்டியிருப்பதால் அதற்கு நாம் பயன்படுத்தும் சக்தி போதுமான பலம் உள்ளதாய் இருக்கவேண்டும். ஆனல், ஆக்கிரமிப்பை எதிர்ப்பதற்காக நாம் தயாராகும்போது கூட, நமது இறுதிக் குறிக்கோள், சமாதானமும் வேற்றுமையைப் போக்கி நட்புறவை உண்டாக்குவதும்தான் என்பதை நாம் ஒருபோதும் மறந்துவிடக்கூடாது. நமது மனமும் இதயமும் இந்த உயர்ந்த இலட்சியத்திலேயே கண்ணுய் இருக்கவேண்டும். வேற்றுமை உணர்ச்சியோ அல்லது பயமோ இவைகளைக் கவ்விக்கொள்ளக்கூடாது. இதுவே நமது வெளிநாட்டுக் கொள்கையின் அடிப்படையும் இலட்சியமும் ஆகும்.

**போராட்டத்திலும் இறுதி லட்சியம்**

நடைமுறை நிலவரத்தை நாம் கண்ணை மூடிக்கொண்டு புறக்கணிக்கவில்லை. மனிதனின் சுதந்திரத்துக்கு அபாயம் வந்தால், அது எந்தத் திக்கிலிருந்து வந்தாலும் சரி, இணங்கிப்போகும் எண்ணம் நமக்கில்லை. எங்கே சுதந்திரத்துக்கு அபாயம் ஏற்படுகிறதோ, எங்கே நீதி மிரட்டலுக்கு

**எப்போது "நடு நிலை" கூடாது?**

உள்ளாகிறதோ, எங்கே ஆக்கிரமிப்பு நிகழ்கிறதோ அங்கெல்லாம் நாம் எப்பக்கத்திலும் சாராது இருக்க முடியாது; இருக்கவும் மாட்டோம். அமைதியில் உறுதியான நம்பிக்கை கொள்ளவும், அதைப் பாதுகாப்பதற்காகச் சிந்தனையிலும் செயலிலும் ஓயாது முயற்சி செய்யவும் நாம் விரும்புகிறோம். நாம் வேண்டிக்கொள்வதும், நடைமுறையில் முடிந்தவரை சாதிக்க முயல்வதும் இதுவே.

**விடுதலைப் போர் தீவிரமானதேன் ?**

கடந்த சுமார் முப்பது ஆண்டுகளாக* இந்திய சுதந்திரத்துக்காக நாம் தீவிரப் போராட்டம் நடத்தினோம். நாம் அதைத் தொடங்கவில்லை; அந்தப் போராட்டம் ஏற்கனவே நடந்து கொண்டிருந்தது. அது நமக்கு முன்பே சில தலைமுறைகளாகத் தொடர்ந்து நடந்து வந்தது. ஆயினும் கடந்த முப்பது ஆண்டுகளாகத்தான் இது உலகின் கவனத்தை அதிகமாகக் கவர்ந்தது. உலகப் பெரியவர்களில் ஒருவரான மகாத்மா காந்தி இந்திய அரசியல் அரங்கில் தோன்றியதே அதற்குக் காரணம். அவர் இந்தியாவில் மகத்தான மாறுதலை ஏற்படுத்தினர்.

நான் அப்போது மிகவும் இளைஞனாக இருந்தேன். ஆயினும் இந்தியாவில் உள்ள கோடிக்கணக்கான மக்களைப் போலவே என்னையும் அம்மாறுதல் கவர்ந்ததால், இன்னும் தெளிவாக எனக்கு அது ஞாபகம் இருக்கிறது. எங்களுக்கு ஏற்பட்ட ஒரு விசித்திரமான மாறுதல் அது. அப்போது நாங்கள் விரக்தியடைந்தவர்களாக இருந்தோம். சுதந்திர தாகம் நிறைய இருந்தது. ஆனால், என்ன செய்வதென்று எங்களுக்குத் தோன்றவில்லை. நாங்கள் உதவியற்றவர்களாகவும் நிராயுதபாணிகளா

* 1949-இல் நிகழ்த்திய பேச்சு

கவும் இருந்தோம். சரியான முறையில் நாங்கள் ஸ்தா பனரீதியாக ஒன்று சேர்ந்து கொள்ளவில்லை. நூற்றைம்பது ஆண்டுகளுக்கு மேல் நம்முடைய நாட்டில் நங்கூரமிட்டிருந்த ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை எதிர்ப்பதற்கான பலம் எங்களுக்குக் கொஞ்சங்கூட இல்லையென்றே தோன்றியது. மேலும் இந்த சாம்ராஜ்யம் மேற்போக்காகத் தன்னுடைய ஆயுத பலத்தால் மட்டும் இங்கில்லை. இந்தியாவில் வேரிட்டு ஆழமாகப் பதிந்திருந்தது. அதை அகற்றுவதென்பது அப்போது மிகமிகக் கடினமான வேலையெனத் தோன்றியது.

**அப்போதிருந்த நிலைமை**

நம்முடைய இளைஞர்களில் சிலருடைய விரக்தி அதிகமாகி அவர்கள், முற்றிலும் பயனற்ற இம்சைச் செயல்களில் ஈடுபட்டனர். சிலர் பயங்கர இயக்க நடவடிக்கைகளில் இறங்கினர்கள். ஆனல், பரந்த அடிப்படையில் பார்க்கும்போது, இவைகள் எல்லாவற்ருலும் ஒரு பயனும் ஏற்படவில்லை. ஆனல், மற்றொருபுறம் நம்முடைய தலைவர்களின் அரசியல் பலவீனமாக இருந்ததால், அதனுலும் ஒரு பயனும் விளையவில்லை. ஆகையால் இந்த இரண்டுக்குமிடையே என்ன செய்வதென்பது எங்களுக்குத் தெரியாமல் இருந்தது. அக்காலத்தில் இந்தியப் பொதுவாழ்விலிருந்த சில அரசியல் தலைவர்கள் கூறிய வழி, நம்மையே தாழ்வு படுத்துவதாக இருந்தது. அதனைப் பின்பற்றுவது கேவலமாகத் தோன்றியது. ஆனல், மற்றொருபுறத்திலோ, பயங்கர இயக்கத்தில் ஈடுபடுவது முற்றிலும் தவருனதாகவும் வீணனதாகவும் தோன்றியது. இப்பயங்கர இயக்கமானது தீயது என்பதோடு மட்டுமல்லாமல் ஒரு பயனும் அளிக்கக் கூடியதாகவும் இல்லாதிருந்தது.

**பின்பற்ற முடியாத இரு வழிகள்**

அச்சமயத்தில் காந்திஜி அரசியலில் நுழைந்து, அரசியல் போராட்ட வழியொன்றை நமக்கு அளித்தார். அது ஒரு புதுமையான வழி. அவர் சொன்னதன் சாரம் புதிதல்ல. பெரிய மனிதர்கள் ஏற்கனவே அதைக் கூறியிருக்கிறுர்கள். ஆனல், அதைக் காந்திஜி மக்களுடைய அரசியல் போராட்டத்தில் பயன்படுத்தினர் என்பது தான் வேறுபாடு. தனிப்பட்ட வாழ்க்கையில் ஒருவர் செய்ய வேண்டுமென்று கூறிய போதனை திடீரென்று மக்கள் போராட்டத்தில் இடம் பெற்றது. அதுவும், ஒரு பெரிய நாட்டில், எழுத்தறிவில்லாத, பயிற்சி பெருத, முற்றிலும் பீதியடைந்திருந்த மக்களுடைய போராட்டத்தில் இடம் பெற்றது. மனதில் அச்சம் நிறைந்திருந்த மக்கள் போராட்டத்தில் இடம் பெற்றது. இந்திய மக்கள் தொகையில் நூற்றுக்கு எண்பது பேராக விளங்கும் நமது விவசாய மக்களை நான் குறிப்பிடுவதாகவிருந்தால், அவர்கள் தங்களுடன் தொடர்பு கொண்ட லேவாதேவிக்காரர்கள், அரசாங்க அதிகாரிகள் போன்ற ஒவ்வொருவராலும் காலால் உதைக்கப்பட்டார்கள்; விலங்கு பூட்டப்பட்டார்கள்; மிகவும் மோசமாக நடத்தப்பட்டார்கள். அவர்களுடைய பெரும் சுமையிலிருந்து அவர்களுக்கு ஒரு போதும் விடுதலை கிடைக்கவில்லை. இப்படிப்பட்ட மக்களுடைய போராட்டத்தில் அது இடம் பெற்றது.

**பாமர மக்களிடையே அகிம்சை**

நன்று, காந்திஜி வந்தார். இவைகளையெல்லாம் போக்குவதற்கு—இந்தியா விடுதலைபெறுவதற்கு—ஒரு வழி இருக்கிறது என அவர்களிடம் கூறினர். "முதலில் அச்சத்தைப் போக்குங்கள். பயப்படாதீர்கள். ஐக்கியமாக, ஆனல் எப்போதும் அமைதியாகச் செயல்படுங்கள். உங்களுடைய எதிராளி

**முறைக்குத்தான் எதிர்ப்பு**

யின் மீது கொஞ்சங்கூடக் குரோத உணர்ச்சிகொள்ளா தீர்கள். நீங்கள் ஒரு குறிப்பிட்ட முறையை எதிர்க்கிறீர்களே தவிர ஒரு தனிப்பட்ட மனிதரையோ இனத்தையோ, அல்லது மற்றொரு நாட்டு மக்களையோ அல்ல. நீங்கள் எதிர்த்துப்போராடுவது ஏகாதிபத்திய முறை அல்லது குடியேற்ற ஆட்சி முறையைத்தான்'' என்று கூறினர்.

இவைகளையெல்லாம் புரிந்து கொள்வது எங்களுக்கு எளிதாக இல்லை. ஆகையால், மற்றவர்களுக்கு, குறிப்பாக நம்முடைய விவசாயிகளுக்கு இது இன்னும் கஷ்டமாக இருந்திருக்கும். ஆனல், உண்மையென்ன வெனில், அவருடைய குரலில் ஏதோ சக்தி இருந்தது. மற்ற மக்களை ஊக்குவித்து, ''இந்த மனிதர் வெறும் வாய்ப்பேச்சுக்காரர் அல்ல; அவர் சொன்னதைச் செய்யக் கூடியவர்; அவரால் சுதந்திரம் வாங்கிக் கொடுக்க முடியும்'' என்று மக்கள் நம்பவும் ஊக்கமடையவும் செய்யுமாறு அவரிடம் ஏதோ ஒன்று இருந்தது.

**அவருடைய தனிச் சக்தி**

மாயமான முறையில் அவருடைய செல்வாக்குப் பரவியது. இதற்கு முன்புகூட அவரை மக்கள் நன்கு அறிந்திருந்தார்கள். ஆயினும் இந்தக் குறிப்பிட்ட துறையில் அல்ல. ஒரு சில மாதங்களில் நம்முடைய நாட்டுப்புறங்களில் மாறுதல் ஏற்பட்டதை நாங்கள் கண்டோம். விவசாயிகள் புதுவிதமாக நடக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் நிமிர்ந்து உட்கார்ந்தார்கள். அவர்களால் உங்கள் முகத்தை நேரே பார்க்க முடிந்தது. அவர்களுக்குத் தங்களைத் தாங்களே சார்ந்து வாழக்கூடிய தன்னம்பிக்கை ஏற்பட்டது, ஆனல், இவைகளெல்லாம் திடீரென்று ஏற்பட்டுவிடவில்லை. பதினயிரக்கணக்கான இளைஞர்களும் யுவதிகளும் நாட்டுப்புறங்களுக்குக் காந்திஜியின் செய்திகளைக் கொண்டு சென்றார்கள்; உற்சாகமாக

**விவசாயிகள் மாறுதல்**

இச் செய்தியை ஏற்றவர்களிடம் முதலில் சென்றூர்கள். ஒருசில மாதங்களில் இந்தியாவின் கண்ணேட்டமே மாறியது.

அஞ்சாதீர்கள் என்று சொல்வது எளிதானதுதான். அதில் மந்திரம் எதுவும் இல்லை. எதைக் கண்டு நாம் அஞ்சினேம்? சாதாரணமாக, எதைக் கண்டு ஒருவன் அஞ்சுகிருன்? பல விஷயங்களைக் கண்டு அவன் அஞ்சுகிருன். சிறைச்சாலையில் அடைக்கப்படுவதற்காக நாம் அஞ்சினேம். கிளர்ச்சிக்காரர்கள் என்று சுட்டுக் கொல்லப்படுவோமே என அஞ்சினேம். அப்போது காந்திஜி நமக்குச் சொன்னர்: "சுதந்திரத்தின் மீது உங்களுக்கு அவ்வளவு ஆர்வம் இருப்பதாலுல், நீங்கள் சிறைக்குச் சென்ருல் என்ன? உங்களுடைய சொத்து பறிமுதலானல் என்ன? அல்லது நீங்கள் கொல்லப்பட்டால்தான் என்ன? அவை உங்களைப் பாதிக்கப்போவதில்லை. ஏனெனில் இவைகளைக் காட்டிலும் மகத்தான ஒன்றை நீங்கள் அடைவீர்கள். ஒரு பெரிய இலட்சியத்துக்காகச் சேவை செய்கிரேம் என்பது மட்டுமல்லாமல், உங்களுடைய சேவையால் பலன் கிடைக்கக்கூடும் என்பது மட்டுமல்லாமல், இதைச் செய்வது ஒன்றே உங்களுக்கு மனத் திருப்தியும் மகிழ்ச்சியும் அளிப்பதாகும்."

**காந்திஜி ஊட்டிய ஊக்கம்**

எப்படியோ இந்தக் குரல் மக்களுக்கு மன உறுதி அளித்தது; ஒரு மாபெரும் மாறுதலும் ஏற்பட்டது. இவ்வாறுதான் இந்திய அரசியலில் "காந்தி சகாப்தம்" தோன்றியது. அவர் சாவுவரை இச்சகாப்தம் நீடித்தது. ஏதாவது ஓர் உருவத்தில் இது எப்போதும் நீடிக்கும். நம்மில் பலர் தொழிலை விட்டு, கிராமங்களுக்குச் சென்று இச்சுவிசேஷத்தைப் பரப்பினேம். நம்முடைய அரசியல்

**போராட்டத்தில் லயித்தோம்**

ஸ்தாபனத்துக்குத் தேவையான மற்ற விஷயங்களையும் பிரசாரம் செய்தோம். நாங்கள் செய்து வந்த தொழில்களையெல்லாம் மறந்துவிட்டோம். நம்முடைய வாழ்க்கை மாறியது. நாம் வேண்டுமென்று திட்டமிட்டு அவைகளை மாற்றவில்லை. அவை தாமாகவே மாறின; பூரணமாக மாறின. நாம் முன்பு ஈடுபட்டு வந்த செயல்களில் மீண்டும் ஈடுபடுவதென்பதே நமக்குக் கடினமாக இருந்தது. அந்த அளவுக்கு நம் வாழ்க்கை மாறிவிட்டது. அச்சமயத்தில் ஏற்பட்ட இப்புதுப் பணியில் நாம் மூழ்கிவிட்டோம்; ஆனல், அந்தச் சமயத்துக்கு மட்டுமல்லாமல் பல வருஷங்களுக்கு மூழ்கிவிட்டோம். நாம் செய்ததில் நமக்கு நல்ல மனத் திருப்தி ஏற்பட்டது. ஏனெனில், அக்காலத்தில் எங்களுடைய பேச்சும் செயலும் இணைந்து செயல்பட்டதால், நாம் முழுமையான மனிதர்களானேம். பலன் கிடைக்கவேண்டுமென்று நாம் விரும்பியது உண்மையே; பலன் கருதியே பாடுபட்டு வந்தோம். ஆயினும் அந்த க்ஷணத்தில் நாம் பலன்களைப் பற்றி எதிர்பாராது, செயலில் ஈடுபடுவதிலேயே திருப்தியடைந்திருந்தோம். நம்முடைய பாதையில் மேடுபள்ளங்கள் இருந்தன. தற்காலிகமாக நமக்குத் தோல்விகளும் ஏற்பட்டன. காந்திஜி எங்களுக்குக் கற்பித்த போராட்ட முறையின் தன்மையால், தற்காலிகமாகத் தோல்வி ஏற்பட்டது போல் தோன்றினலும் உண்மையில் பின்னேக்கிச் செல்வதென்பதே நம் அகராதியில் இல்லை.

இந்தப் போராட்ட முறையில் பொதுஜன நடவடிக்கை மூலம் அரசாங்கத்தை வெற்றி கொள்ளும் அம்சம் இருந்தது என்ருலும் அதுவே பிரதானமானதாக

இருக்கவில்லை. அதனுடைய பிரதான அம்சம், தனிப்பட்ட மனிதன் சரணுகதி அடையாமல் செய்து, ஒரு அரசாங்கத்தின் தன்மதிப்பைக் குறைப்பதே. தோரோவின் கட்டுரைகளில் இதைப் போன்ற ஒரு போராட்ட முறையைப் பற்றி உங்களில் பலர் படித்திருக்கலாம். அதைப் பொதுஜன இயக்கமாகக் காந்திஜி விரிவுபடுத்தினுர். இந்திய மக்கள் நன்ருகப் பயிற்சி பெருதிருந்தது இயற்கையே. இந்தப் போராட்ட முறைத் தத்துவத்தை அவர்கள் அவ்வளவு நன்ருகப் புரிந்துகொள்ளவுமில்லை. அவர்கள் பலவீனமானவர்களாக, தன்னெறியில் உறுதியில்லாதவர்களாக இருந்தார்கள். அவர்கள் பாதையிலிருந்து விலகிச் சென்ருர்கள், தவறினுர்கள். எனினும், மொத்தமாகப் பார்த்தால், அவர்கள் இந்தப் போராட்ட முறையின் படியே செயல்பட்டார்கள்; இறுதியில் வெற்றியும் அடைந்தார்கள்.

**போராட்ட முறையும் பொதுமக்களும்**

காந்திஜியின் நடவடிக்கை முறை, அமைதியானதாக இருந்தது என்பது மட்டுமல்லாமல், சக்தி வாய்ந்ததாகவும் இருந்தது. அது நல்ல பலன்களையும் தந்தது. சுதந்திரம் வாங்கித் தந்ததிலும், சுதந்திரம் பெற்றதற்குப் பின் இரண்டு நாடுகளுக்குமிடையே குரோத உணர்ச்சிக்கு அது இடமளிக்கவில்லை என்பதிலும் அது தனது நற்சக்தியை நிரூபித்தது. நாம் சுதந்திரம் அடைந்த பின்பு நமக்குக் குரோத உணர்ச்சி கொஞ்சமும் இல்லையென்று என்ருல் கூற முடியாது. ஆயினும் இங்கிலாந்தின் மீதிருந்த குரோத உணர்ச்சியும், ஐயப்பாடும், கசப்புணர்வும் எவ்வாறு நம்முடைய நாட்டிலிருந்து இந்த அளவு மறைந்ததென்பது அசாதாரணமான ஒரு நிகழ்ச்சிதான்.

**முக்கிய பலன்**

ஒரு பிரச்னையைத் தீர்ப்பதன் மூலம் புதிதாக இரண்டு அல்லது மூன்று பிரச்னைகள் கிளம்புவதாகவிருந்தால், அது அப்பிரச்னையைத் தீர்ப்பதாகாது. ஆனல், பொதுவாக நாம் ஒரு பிரச்னையைத் தீர்க்கும்போது இவ்வாறுதான் நிகழ்கிறது. வேறு புதுப் பிரச்னைகள் கிளம்பாதபடி பல்வேறு பிரச்னைகளையும் தீர்க்கும் காந்திஜி வழி, ஓர் இறுதியான, கிட்டத்தட்ட முடிவான பரிகாரமாய் இருக்கிறது.

**காந்திஜி வழியின் தனிச் சிறப்பு**

நாம் அணுக்குண்டு பயத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். எப்போது திடீரென அழிவு வரும் என்பதை நாம் அறியமாட்டோம். இது ஒரு அசாதாரணமான நிலைமையாகும். இந்த அபாயமானது வெகு விரைவிலோ அல்லது இன்னும் சில ஆண்டுகளிலோ நிகழ்ந்துவிடும் என்று நான் எண்ணவில்லை. ஆகையால், இதைப்பற்றி நான் அவ்வளவு அதிகமாகப் பயப்படவில்லை. இந்த இடைக்காலத்தை நாம் சரியான முறையில் பயன்படுத்தினல், இந்த அழிவு ஒருபோதும் வராமல் செய்துவிடலாம். ஆனல் இதற்கு, நாம் அதிகம் அஞ்சாது, இலட்சியத்தை மனதிற்கொண்டு பாடுபட வேண்டும். உண்மையான அபாயம் நம்மிடம் உள்ள அச்சம் தான்; அச்சத்தினல் தவருன வழிகளை நாம் மேற்கொண்டுவிடுவோம் என்பதுதான்.

**அணுக்குண்டு பயம்**

ஒரு தீய வட்டத்தை நாம் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருக்கிறோம். இன்றைய உலகத்தில் யுத்தத்தைப் பற்றிச் சிந்திக்கக் கூடியவர்கள் மிகமிகக் குறைவானவர்களே இருப்பார்கள் என்று நான் எண்ணுகிறேன். அதே சமயம் ஒவ்வொரு நாட்டிலும் ஏராளமான பேர்—கிட்டத்தட்ட எல்லோரும்—அமைதியையே விரும்புகிருர்கள். ஆயினும் நம்முடைய சிந்தனை அல்லது செயலில் ஏதோ

தவறு இருக்க வேண்டும். இல்லையேல், நாம் ஏன் இந்தச் சிக்கலில் மாட்டிக்கொள்கிறோம்? இவைகளெல்லாம் நம்முடைய தவறல்ல, வேறு மக்களுடைய தவறு என்று நாம் கூறலாம். அதுவும் ஐயத்திற் கிடமின்றி உண்மை தான். எனினும் நாம் இந்த தர்மசங்கடமான நிலையில் நம்மை மாட்டிக்கொள்வதிலேயே ஓரளவு தவறு இருக்கிறது. காந்திஜி எப்போதும் நமக்குக் கூறிவந்தார்: "உங்களுடைய தேசிய இயக்கத்தில் உள்ள குறைகளுக்கும், நீங்கள் செய்ய முயலும் காரியங்களில் உள்ள குறைகளுக்கும் பிரிட்டிஷாரைக் குற்றம் சாட்ட உங்களுக்கு உரிமை இல்லை. உங்களைத் தடுத்து நிறுத்த பிரிட்டிஷ் அரசாங்கம் முயலும் என்பது உண்மையே. அதுதான் அவர்களது கடமையும் கூட. அவர்கள் உங்கள் செயலை ஒப்புக்கொள்ளாத வரை, பிரச்னை முழுவதும் தீர்க்கப்படாதவரை, அவர்கள் உங்களைத் தடுத்துக் கட்டுப்படுத்தத்தான் செய்வார்கள். ஆகவே, உங்களை அடக்குகிறார்கள் அல்லது தோற்கடிக்கிறார்கள் என்பதற்காக, அவர்களைக் குறை கூறுவதனால் என்ன பயன்? அது உங்களுடைய தவறைத்தான் காட்டுகிறது. நீங்கள் வெற்றி பெறவிட்டால் அது உங்களுடைய குறையே தவிர, பிரிட்டிஷாரின் தவறல்ல. ஆகையால், நாம் அவர்களை அதற்காகக் குறை கூறுவது நல்லதல்ல."

**பிறரைக் குறை கூறாதீர்கள்**

மற்றவர்களை நாம் குறைகூறுவது அவ்வளவு நல்லதல்ல. மற்றவர்களும் குறைகூறப்பட வேண்டியவர்களாய் இருக்கலாம் என்பதில் ஐயமில்லை. ஆனால், அது முக்கியமல்ல. நாம் பிரச்னையைத் தீர்ப்பதற்கான வழி காண வேண்டும். மற்றவர்களுடைய நல்லெண்ணத்தையோ கெட்ட எண்ணத்தையோ சார்ந்திருக்கக் கூடாது. அவ்வாறு சார்ந்திருந்

**நாமே வழி காண வேண்டும்**

தால், யுத்தத்திற்கும் சமாதானத்திற்கும் மற்றவர்கள் என்ன செய்கிருர்கள் என்பதைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்க நேரும்.

இந்தத் தர்ம சங்கடமான பிரச்னையைத் தீர்ப்பதென்பது ஒரு அரசியல் வாதிக்கு மிக கடினமானதாகும். என்னிடம் இதற்கு மந்திரம் எதுவும் இல்லை என்பது தெளிவு. பொறுப்பை ஏற்றிருக்கும் மனிதன், எவனும் தன்னுடைய நாட்டை இக்கட்டான நிலையில் மாட்டி வைக்கும் ஒரு துணிச்சலான காரியத்தைச் செய்ய முடியாது. எப்படிப்பட்ட சூழ்நிலைக்கும் அவன் நாட்டைத் தயார் செய்ய வேண்டியவனாய் இருக்கிருன். ஒரு ஆக்கிரமிப்பு ஏற்படக் கூடுமென்ருல் அவன் அதை எதிர்பார்த்து நாட்டைத் தயார் செய்ய வேண்டும். மனித வர்க்கம் தற்போது இருக்கும் நிலைமையில், அவன் பூரண சாத்விக இயக்கக் கொள்கையை அனுஷ்டித்துக்கொண்டு, "நாம் ஒன்றும் செய்யப் போவதில்லை; மற்றவர்களும் எதுவும் செய்ய மாட்டார்கள் என்று நாம் எதிர்பார்ப்போம்" என்று கூற முடியாது. அவன் அவ்வித அபாயத்தை ஏற்க முடியாத ஒவ்வொரு சாத்தியமான அபாயத்துக்கும் அவன் தயாராக இருக்க வேண்டியதாய் இருக்கிறது.

**நாட்டைத் தயார்படுத்த வேண்டும்**

அதே சமயம், மற்ருெருபுறம் சிந்தித்துப் பார்த்தால், இவ்வாறு நாம் தயார் செய்வது, சில சமயங்களில் யுத்தத்தைச் சமீபத்தில் கொண்டுவந்துவிடுகிறது. இவ்வாறு ஏற்படும் போர் உலகப் போராக வந்தாலோ, அது இது வரை இல்லாத அளவுக்குப் பேரழிவை ஏற்படுத்திஞலோ நாம் வியப்படைவதற்கில்லை. அதனுல் என்ன நடைபெறும் என்பது திட்டமாக யாருக்கும் தெரியாது. ஆனல், ஒன்று மட்டும் மிகமிக நிச்சயம். போர் ஏற்பட்டால்,

**யுத்தம் வந்தால்?**

இன்றைய நவீன உலகமும் நாகரிகமும் நிச்சயமாக இருக்காது.

அவ்வாறு யுத்தம் ஏற்பட்டால்—ஏற்படவும் கூடும் என்பதை நாம் உணரவேண்டும்-அது வெற்றி, தோல்விப் பிரச்னையாக மட்டும் இராது. வெற்றிகிடைத்தால் நாம் விரும்பியதைச் செய்யலாம் என்பதால், வெற்றி விரும்பத் தக்கதுதான் என்பதில் ஐயமில்லை. ஆனால், பிரச்னை இதைக் காட்டிலும் ஆழமானது-அதாவது, நீங்கள் விரும்பும் சில குறிப்பிட்ட குறிக்கோள்களை அடைய முடியுமா என்பதுதான் பிரச்னை. நீங்கள் போரில் ஈடுபடும்போது, சில குறிப்பிட்ட குறிக்கோள்களை அடைவதற்காகவே அவ்வாறு செய்கிறீர்கள். போரில் வெற்றி யடைவது மட்டும் குறிக்கோள் அல்ல. நமது குறிக்கோளை அடைவதற்கிருந்த ஒரு தடையை நீக்கும் நடவடிக்கைதான் அது. அந்தக் குறிக்கோளை நீங்கள் மறந்துவிட்டீர்களானால், நீங்கள் அடையும் வெற்றி மட்டமான வெற்றியாகப் போய்விடுகிறது. அது ஒரு 'நிவாரணமாக' இருக்கலாம். ஆயினும், நீங்கள் குறிக்கோளை அடையவில்லை. அதனால்தான் கடந்த இரண்டு யுத்தங்களும், இராணுவ ரீதியில் அவை எவ்வளவோ மகத்தான வெற்றியாக இருந்தாலும், உலகத்தின் நெருக்கடிகளைப் போக்கவில்லை.

**போரில், வெற்றிக்கு அப்பால்...**

இந்தச் சூழ்நிலையில் காந்திய முறை எந்த அளவு நடைமுறைச் சாத்தியம் என்பதை நாம் சிந்தித்துப் பார்ப்பது நன்மை பயக்கும். நடை முறையில் இது எந்த அளவுக்குச் சாத்தியம் என்பதை நான் அறியமாட்டேன். ஏனெனில், இதில் எண்ணற்ற கஷ்டங்கள் இருக்கின்றன. ஆயினும் இது நடை முறையில் அனுஷ்டிக்க முடிந்த

**மனோநிலை மாற்றத்துக்கு உதவும்**

தாக இருந்தாலும் சரி, முடியாததாக இருந்தாலும் சரி, நம்முடைய மனோநிலையிலும், உளப்பாங்கிலும் மாறுதல் ஏற்படுத்துவதற்கு இது பெருமளவு உதவக்கூடும்.

இந்தியா, ஆயிரக்கணக்கான ஆண்டு வரலாறு உள்ள ஒரு புராதன நாடு. ஆயினும் இன்றைய உலகத்தை, ஒரு துடிதுடிப்புள்ள இளம் நாடாக அது எதிர்நோக்குகிறது. முப்பது ஆண்டுகளாக அது தேசிய விடுதலைப் போராட்டத்தில் தனது முழுக் கவனத்தையும் செலுத்தியது. மகாத்மா காந்தி தலைமையின் கீழ் நடைபெற்ற அந்தப் போராட்டம் அசாதாரணமான ஒன்றாக இருந்தது. தேசப் பிதா என்று நாம் அழைக்கும் அந்தப் பெரிய மனிதர், அவருடைய தனித் தன்மையின் முத்திரையை, இந்தியாவிலும், குறிப்பாக நம்முடைய சகாப்தத்திலும் பதித்தார். ஆகவே இன்றைய உலக நிலையைப் பார்த்து, நம்முடைய வெளிநாட்டுக் கொள்கையை நாம் உருவாக்கும்போது, விடுதலைப் போராட்ட காலத்தில் காந்திஜி நமக்குக் கற்பித்த இலட்சியக் கோட்பாட்டையும் நடைமுறைக் கண்ணோட்டத்தையும் மனதிற்கொண்டு அக்கொள்கையை உருவாக்கியுள்ளோம். தனது சொந்த வளர்ச்சியிலோ அல்லது உலக விவகாரங்களிலோ இந்தியா பயன் தரத்தக்க பங்காற்ற வேண்டுமாயின், பல ஆண்டுகளாக அது கடைப்பிடித்து வந்த கொள்கையைத் தொடர்ந்து கடைப்பிடித்து வரவேண்டும். அந்த இலட்சியத்தில் உள்ள முக்கியமான அம்சங்கள், சமாதானம், ஒத்துழைப்பு, தேசிய விடுதலை, ஒரே உலக அமைப்புக்கு வழிகோலும் சர்வதேசியம், அனைத்து நாடுகள், மக்கள் சமத்துவம், கோடிக்கணக்கான மக்களை வருத்தும் வறுமையையும் துன்பத்தையும் அகற்றுதல் ஆகியவை யாகும்.

**எதிர்காலக் கொள்கை அடிப்படை**

வாய்ப்பும் வசதியும் அற்றவர்கள், ஏழை மக்கள் ஆகியோரை அடிப்படையாக வைத்தே நம்முடைய தேசியப் போராட்டத்தைக் கணிக்க வேண்டும் என்று மகாத்மா காந்தி நமக்குப் போதித்தார். ஆகையால், சுதந்திரத்துக்காக நாம் நடத்திய விடுதலைப் போராட்டத்துக்கு எப்போதுமே பொருளாதார அடிப்படை ஒன்று இருந்தது. தொடர்ந்து வறுமையினால் அவதிப்படுவோருக்கு உண்மையான சுதந்திரம் இருக்க முடியுமென்பதை

**விடுதலைப் போரில் பொருளாதார அம்சம்**

நாம் உணர்ந்தோம். வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகள் கூட இல்லாது கோடிக்கணக்கான மக்கள் உள்ளதால் இந்த மக்களுடைய நிலையை உயர்த்துவதற்குச் சுதந்திரம் உதவும் என்று நாம் எண்ணினோம். ஆகையால் அரசியல் விடுதலை அடைந்து விட்டபின்பு, இவ்வழியில் மக்களுக்குச் சேவை செய்ய வேண்டுமென்பதும், பல சகாப்தங்களாக அவர்கள் மீதிருந்த சுமையை அகற்ற வேண்டுமென்பதும் நம்முடைய தீரா ஆசையாக இருக்கிறது.

ஒவ்வொரு கண்ணிலுமிருந்து துளிர்க்கும் ஒவ்வொரு சொட்டுக் கண்ணீரையும் துடைக்க வேண்டுமென்பது தான் தம்முடைய தலையாய ஆசை என்று காந்திஜி ஒரு முறை கூறினார். ஆனால், அவரால்கூட அதை நிறைவேற்ற முடியவில்லை. இந்தியாவிலும் ஆசியாவிலும் உலகின் பிற பகுதிகளிலும் கோடிக்கணக்கான மக்கள் கண்ணீர் வடித்திருக்கிறார்கள். வற்றாத நீரோட்டமாக இருக்கும் மனித

**துயரைக் குறைப்பதே நோக்கம்**

வர்க்கத் துயரைப் பரிபூரணமாக நிறுத்துவதென்பது அநேகமாக ஒருபோதும் சாத்தியமாக இராது. அதே சமயம் மனிதர்களின் தேவையையும் வறுமையையும் கஷ்டத்தையும்

குறைப்பது நிச்சயமாகச் சாத்தியம்தான். இந்த இலட்சியத்தை நாம் மனதிற் கொள்ளாவிட்டால் நம்முடைய அரசியலுக்கும் வாக்குவாதங்களுக்கும்தான் என்ன பொருள் இருக்க முடியும்?

இருளில் தள்ளாடித்தள்ளாடி என்னுடைய வழியைக் கண்டுபிடிக்க நான் முயற்சி செய்திருக்கிறேன். நேராகச் சிந்திக்கவும் சிந்தனையுடன் செயலைக் கூடியவரை ஒன்று படுத்தவும் நான் முயன்றிருக்கிறேன். அரசியலில் செயல் என்பது தனிப்பட்ட ஒருவனுடைய செயல் அல்ல, ஒரு கூட்டத்தின் செயலாக அல்லது பொது மக்கள் செயலாக அது இருக்கிறது. ஆகையால் சிந்தனையுடன் செயலை இணைப்பதென்பது அடிக்கடி கஷ்டத்தை அளிக்கிறது. எனினும், மக்களிடையே சத்தியத்தையும் ஒழுக்கத்தையும் புறக்கணித்து, வேற்றுமை உணர்ச்சியையும் இம்சையையும் பரப்பும் எந்தத் தத்துவம் அல்லது கொள்கையும் தீயவிளைவுகளைத்தான் ஏற்படுத்த முடியும் என்பதை நான் உணர்ந்திருக்கிறேன். நம்முடைய நோக்கம் எவ்வளவு நல்லதாக இருந்தாலும், நாம் குறிக்கோளாகக் கொண்டுள்ள இலட்சியம் எவ்வளவு சிறந்ததாக இருந்தாலும், நாம் செல்லும் பாதையும் கடைப்பிடிக்கும் சாதனமும் தவருனதாகவும் தீயதாகவும் இருந்தால், நாம் ஒருபோதும் நம்முடைய குறிக்கோளை அடைய முடியாது. உலகில் உள்ள பல்வேறு மக்களிடையே ஒற்றுமையையும் நல்லெண்ணத்தையும் ஏற்படுத்த வேண்டுமென்ருல் நாம் வேற்றுமை உணர்ச்சியைப் பிரசாரம் செய்யவும் கூடாது, கடைப்பிடிக்கவும் கூடாது. இன்றைய உலகில் இம்சையும் வேற்றுமை உணர்ச்சியும் நிறைய இருக்கின்றன என்பது உண்மையே. நாம் எவ்வாறு ஆக்கிரமிப்புக்குப் பணிய முடியாதோ அதே போன்று இவற்றிற்கும் வெற்றி

**சொல்வது ஒன்று செய்வது வேரு?**

கிட்ட நாம் இடமளிக்க முடியாது. தீமையையும் ஆக்கிரமிப்பையும் நாம் எதிர்த்துப் போராடவேண்டியிருக்கிறது. அவ்வாறு செய்யும்போது நம்முடைய நோக்கங்களையும் குறிக்கோள்களையும் மறந்துவிடக் கூடாது என்பதுடன், நாம் கடைப்பிடிக்கும் மார்க்கமும் அவைகளுக்கு ஏற்றதாக இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ளவேண்டும்.

**பெர்னார்ட்ஷா பொன்மொழி**

பல ஆண்டுகளுக்கு முன்பு ஜார்ஜ் பெர்னார்ட்ஷாவின் எழுத்தோவியங்களில் ஒன்றில், என்னுடைய இதயத்தை நெகிழச்செய்த, எனது மனதிலும் உள்ளத்திலும் எதிரொலி ஏற்படுத்திய ஒரு வாசகத்தைப் படித்தேன். அவர் எழுதியுள்ளார்: "உங்களால் மகத்தானது என்று ஏற்கப்பட்ட ஒரு இலட்சியத்துக்காக இந்த உயிர் பயன்படவேண்டும். இந்த உடலைக் கட்டையில் வைப்பதற்குமுன், உயிரானது உழைத்து ஓடாய்ப் போயிருக்கவேண்டும். உலகம் என்னை மகிழ்ச்சியாக வைப்பதற்குப் பாடுபடவில்லையே என்று அலுத்துக் கொண்டிராமல், வேதனைகளும் துயரங்களும் நிறைந்த, ஜன்னிபிடித்த, சுயநலம் கொண்ட ஒரு மண் கட்டிபோல இல்லாமல், இயற்கையின் சக்தியாக உயிர் விளங்க வேண்டும். அதுதான் வாழ்க்கையின் உண்மையான மகிழ்ச்சி."

நம்மில் பலர் இவ்வளவு உயர்ந்த நிலைக்குச் செல்ல முடியாது. ஆனால் சில சமயங்களில் ஒரு பெரிய தலைவரின் தூண்டுதலாலோ அல்லது மாபெரும் வேட்கையினாலோ ஒரு தேசம் முழுதுமே உயர்ந்து, நிகழ்ச்சிகளை உருவாக்கி, தான் விரும்பும் முறையில் வரலாற்றை அமைக்கிறது. மகாத்மாகாந்தி இந்திய அரசியல் வாழ்வில் நுழைந்து தன்னுடைய சொந்த செல்வாக்கினாலும் அறிவுரைகளி

னுலும் மக்களை உயர்த்தியபோது, இதுதான் நடந்தது. தேசப் பிதா இப்போது நம்மிடையே இல்லை. ஆனுலும் அவருடைய அறிவுரைகள் இருக்கின்றன. அவர் நம்மிடையே ஏற்றிவைத்த அந்தச் சுடர் எரிந்துகொண்டுதான் இருக்கிறது. அவர் ஆரம்பித்து வைத்த வேலை இன்னும் முடியவில்லை. ஆகையால் ஓய்வு ஒழிச்சலின்றி நாம் பாடுபட்டு அதை முடித்து வைக்க வேண்டும். இந்த வரலாற்றுப் புகழ் மிக்க யாத்திரையில் நாமெல்லாம் தோழர்கள்; இந்தியப் படை வீரர்கள். ஆகையால் நாமெல்லோரும் சேர்ந்து அணி வகுத்து முன்னேறுவோம்; எஞ்சியுள்ள கடமையைச் செய்து முடிப்போம்.

**ஓய்வு இல்லாது பாடுபடுவோம்**

வெளிக்குத் தோல்வி போன்று தெரிந்தாலும், முடிவில் வெற்றிக்கு நம்மை அழைத்துச் சென்ற மனிதர் இப்போது நம்மிடையே இல்லை. ஆனல் அவருடைய உழைப்பின் பயன் நமக்கே கிடைத்துள்ளது. இந்தப் பலனை வைத்துக்கொண்டு நாமென்ன செய்யப்போகிறோம் என்பது பல அம்சங்களைப் பொறுத்தது. அதில் அடிப்படையானவை காந்திஜி தனது காலம் முழுவதும் வற்புறுத்தி வந்த உயர்ந்த ஒழுக்கம், மனதிலும் செயலிலும் நேர்மை, சகிப்புத்தன்மை, கூட்டுறவு, கடின உழைப்பு ஆகியவைகளாகும். இந்த அடிப்படைகளைக் கொண்டுதான் நம்முடைய சுதந்திரக் குடியரசை நாம் நிருமாணிக்கவேண்டும் என்பதை மட்டும் நமது மக்களின் கவனத்திற்கு நான் கொண்டுவர விரும்புகிறேன். நம்முடைய மனதிலிருந்து அச்சத்தையும் வேற்றுமை உணர்ச்சியையும் போக்க வேண்டும். கோடிக்கணக்கான மக்களுடைய வாழ்க்கையை அபிவிருத்தி செய்யவேண்டுமென்பதைப்பற்றியே எப்போதும் எண்ணவேண்டும்.

**சுதந்திரக் குடியரசின் அடிப்படை**

**தலையாய பாடம்**

மற்ற நாடுகள் எப்படிப்பட்ட கொள்கையைக் கடைப்பிடித்தாலும் சரி, குறுகிய நோக்கம் கொண்ட கொள்கை எதையும் நாம் கடைப்பிடிக்கக் கூடாது என்பதில் நான் உறுதியான முடிவுக்கு வந்துள்ளேன். உயர்ந்த குறிக்கோள்களின் அடிப்படையில் மட்டும் அல்லாது கேவலம் சந்தர்ப்பவாத அடிப்படையில் பார்த்தாலும் அதுவே சிறந்தது என்பதைக் கூற விரும்புகிறேன். கடந்த முப்பது அல்லது நாற்பது ஆண்டுகளாக என்னுடைய பொது வாழ்க்கையில் நான் ஏதாவது அனுபவம் பெற்றிருப்பதாக இருந்தால், பல விஷயங்களை நமக்குப் புகட்டிய அந்தப் பெரிய ஆசானிடமிருந்து நான் ஏதாவது பாடங் கற்றுக்கொண்டிருந்தேனென்றால், அது ஒன்றுதான். "குறுகிய நோக்கங்கொண்ட கொள்கை தற்காலிகமாக வேண்டுமானால் அது பலன் அளிக்கலாம். ஆனால், இறுதியில் பலனளிப்பதில்லை" என்ற பாடந்தான் அது.

**தெளிவான பார்வைவேண்டும்**

காந்தியக் கொள்கை என்று கூறப்படுவதிலிருந்து நாம் எவ்வளவோ கீழே சென்று விட்டோம். ஆயினும் இன்னும் ஓரளவு நம்மீது அதற்கு ஆதிக்கம் இருக்கிறது. அது வெறும் கொள்கைப் பிரச்னையல்ல; தெளிவான கண்களுடன் உலகைச் சரியாகப் பார்க்கும் பிரச்னை அது. இரத்தந் தெறித்த கண்களுடன் ஒரு நாட்டை மற்றொரு நாடு பார்ப்பதை ஒருமுறை மகாத்மா காந்தி எச்சரித்தார். அவர் கூறிய வாக்கியத்தில் தனி முக்கியத்துவம் இருந்தது. உங்களுடைய கண்களைத் தெளிவாக வைத்துக்கொள்ளுங்கள் என்று அவர் கூறினார். ஆகவே, நான் எந்தக் காட்சியைப் பார்த்தாலும் சரி, இந்தியாவின் நிலையைப் பார்த்தாலும் சரி, உலகக் கட்சியைப் பார்த்தாலும் சரி, அல்லது இந்தியாவுக்கும் பிறநாடுகளுக்குமிடையே உள்ள உற

வைப் பார்த்தாலும் சரி, என்னுடைய கண்களைத் தெளி வாக வைத்துக் கொள்ள முயற்சி செய்கிறேன். ஏனெனில் கோபக்கனல் ஏறிய கண்களைக்கொண்டு பார்ப்பதால் நன்மை ஏற்படுவதில்லை; நமது சிந்தனையோ செயலோ தெளிவாக இருப்பதில்லை.

நமக்குச் சமாதானம் வேண்டுமென்றால் அதற்கான மனோநிலையை நாம் வளர்க்கவேண்டும்; நம்மைப்பற்றிச் சந்தேகப்படுபவர்களையும் நமக்கு எதிரிகளாகத் தங்களைக் கருதிக் கொள்பவர்களையும் கூட நம் பக்கம் திருப்ப நாம் முயற்சி செய்யவேண்டும். மற்றவர்கள் நம்மைப் புரிந்துகொள்ள வேண்டுமென்று நாம் எவ்வாறு விரும்புகிறோமோ அதேபோன்று, நாமும் மற்றவர்களைப் புரிந்துகொள்ள முயற்சி செய்யவேண்டும். போர் முழக்கம் செய்வதன் மூலமோ அல்லது மிரட்டல்களின் மூலமோ நாம் அமைதியைக் காண முடியாது. இதற்கு இங்கிலாந்தும் இந்தியாவும் பெருமைப்படத்தக்க மகத்தான முன்னுதாரணங்களாக இருப்பதை நீங்கள் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். இந்த இரண்டு நாடுகளுக்குமிடையே நீண்ட காலமாகப் போராட்டம் நடந்ததென்றாலும் சமாதான மனோபாவத்துடன் நமது பிரச்னைகளை நாம் அணுகினோம். இந்தப் பிரச்னைகளை நாம் தீர்த்து வைத்த அதே சமயத்தில் நல்லுறவையும் தோழமையையும் ஏற்படுத்திக் கொண்டோம். பிறநாடுகளுடன் நமக்கு மீண்டும் ஏதாவது நெருக்கடி ஏற்பட்டால், நாம் நன்றாக நினைவில் வைத்துக்கொள்ள வேண்டிய சிறந்த முன்னுதாரணம் இது. பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு இது ஒன்றுதான் வழி. இவ்வழியைக் கடைப்பிடித்தால், குரோதமோ கசப்புணர்ச்சியோ ஏற்படுவதில்லை.

அமைதி மனோபாவம்

நான் ஒரு 'சமாதான இயக்கவாதி' யல்ல. துரதிருஷ்டவசமாக, இன்றைய உலகம், இம்சை தவிர்க்க முடியாதது

என்று கருதுகிறது. ஒவ்வொரு நெருக்கடிக்கும் நாம் தயாராய் இருக்கவேண்டும். ஒவ்வொரு நெருக்கடியிலிருந்தும் நாம் நம்மைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். ஆக்கிரமிப்பையும் மற்றும் அதைப் போன்ற தீமைகளையும் நாம் சமாளிக்க வேண்டும். தீமைக்குப் பணிவதென்பது எப்போதும் கெடுதலாகும். ஆனால் தீமையை எதிர்க்கும்போது, நம்முடைய சொந்த ஆத்திரத்தாலும் அச்சத்தாலும் உந்தப்பட்டு, தீய வழியில் சென்றுவிடக் கூடாது. தீமையையும் ஆக்கிரமிப்பையும் எதிர்க்கும் போது கூட, நாம் சமாதான மனோபாவத்தைக் கைவிட்டு விடாது அச்சத்தினாலோ அல்லது வேறு காரணத்தாலோ நமக்கு எதிராக இருப்பவர்களுடன் நல்லுறவோடு நடந்து கொள்ள முன் வர வேண்டும். நம்முடைய பெரிய தலைவரான மகாத்மா காந்தி நமக்குக் கற்றுக் கொடுத்த பாடம் இதுதான். நாம் பக்குவமடைந்தவர்களாக இல்லாவிடினும், அம் மகத்தான போதனையைக் கடைப்பிடிக்க முயலுவோம். நமக்குள் உள்ளாந்தாரமாக ஏற்படும் மனப்போராட்டம் இருக்கிறதே அதற்கு நம்முடைய பல்வேறு நடவடிக்கைகள் எந்த அளவு திருப்தியளிக்கின்றன? இந்தப் போராட்டத்தைப் பற்றிப் பல வகையாகக் கூறலாம்; ஆனால் அடிப்படையாகப் பார்த்தால் அது மனிதனின் ஆன்மிகப் போராட்டமே யாகும். நம்மைச் சுற்றி நடைபெறுவதை உணரக் கூடிய தன்மை மட்டும் இருக்குமானால், இந்தப் போராட்டம் நம்மில் ஒவ்வொருவருக்கும் ஏற்படும்.

### தீமையை எதிர்ப்பதிலும் அமைதி வழி

இந்தியாவில் நம்மில் பெரும்பாலோர் இரு பெரிய பரம்பரைகளின் கீழ் வளர்ந்தோம். மகாத்மா காந்தி, தாகூர் ஆகிய இரண்டு பெரிய மனிதர்கள் வளர்த்த இரண்டு பெரிய பரம்பரைகளில் இந்தியாவே வளர்ந்தது

என்று கூறலாம். இன்றிருக்கும் இந்தியாவை உருவாக்கியவர்கள் இந்த இரு மனிதர்களும்தான். சிந்தனையில் நாம் அவர்களின் குழந்தைகள்—நாம் எவ்வளவு பக்குவமற்ற, முட்டாள்தனமான குழந்தைகளென்றாலும் நாம் அவர்களுடைய குழந்தைகள்தான். இவர்கள் இருவரும் எவ்வளவோ மாறுபட்டவர்களாகவிருந்தாலும், ஒரே மண்ணிலிருந்து வந்தவர்கள்தான்; இந்தியாவின் கலாசாரத்திலிருந்து உதித்தவர்கள்தான். பத்தாயிரம் ஆண்டு வளர்ச்சி பெற்ற இந்தியப் பரம்பரையிலிருந்து தோன்றியவர்கள்தான். இருவரும் எவ்வளவோ மாறுபட்டவர்களென்றாலும், இந்தியாவின் எண்ணற்ற அம்சங்களைப் பிரதிபலித்தார்கள். இருவரும் சரியான இந்தியர்கள்; எவ்வளவோ மாறுபட்டவர்கள்; அதே சமயம் எவ்வளவோ ஒன்றுபட்டவர்கள். இளம்

**இரு பெரியார்கள்**

இந்தியாவின் இலட்சியத்தை அவர்கள் பிரதிபலித்தார்கள். இந்த இலட்சியத்தைத்தான் எனது இளம் வயதில் நான் கொண்டிருந்தேன். இன்றுகூடப் பலர் கொண்டிருக்கிறார்கள். ஆயினும், அந்த இரண்டு மனிதர்களும் இப்போது எவ்வளவோ தூரத்திலிருப்பவர்களைப் போல் தோன்றுகிறார்கள். இவர்களைப் பற்றி நாம் அடிக்கடி பேசுகிறோமென்றாலும், நாம் பல்வேறு சிந்தனைகளுக்கு இலக்காகி, மற்ற இலட்சியங்களை மேற்கொண்டு விட்டோம். இந்த நவீன காலத்தில் அந்த இரு மனிதர்களும் தங்கள் தங்கள் வழிகளில் பலம் வாய்ந்த ஆக்க சக்தி, நம்பிக்கை, விசுவாசம் ஆகியவற்றைப் பிரதிபலித்தார்கள். ஆனால் இன்று அதற்குப் பதிலாக இந்தியாவும், மற்ற நாடுகளைப் போலவே, மேலும் மேலும் அழிப்பு சக்தியையும் மறுப்பு சக்தியையும் வளர்த்துக் கொண்டிருக்கிறது.

ஆகவே, என் மனதில் ஒரு அச்சம் ஏற்படுகிறது; முற்றிலும் நம்முடைய சக்திக்கு அப்பாற்பட்ட ஒன்றால்

நம்முடைய முயற்சிகளெல்லாம் அடித்துச் செல்லப்படப் போகின்றனவா என்பதுதான் அந்த அச்சம். ஆகவே, பெரும் முயற்சி செய்து ஒரு கற்பனை மாளிகையில் வாழ்வதைக் காட்டிலும், கற்பனை வாழ்க்கையில் இருந்து கொண்டே, சாரத்தை அல்லது மூலத்தைப் போய்த் தொடாத பணியை—அது நல்ல பணியாக இருந்தாலும் கூட—செய்து கொண்டிருப்பதைக் காட்டிலும், எது நம்முடைய முயற்சிகளையெல்லாம் அடித்துச் செல்லுகின்றதோ அதைக் கட்டுப்படுத்துவது நல்லதல்லவா? அவ்வாறு கட்டுப்படுத்த முடியாவிட்டாலும் கட்டுப்படுத்த முயற்சியாவது செய்வது நல்லதல்லவா? இதுதான் எனக்குள்ள கஷ்டமான பிரச்னைகளில் ஒன்றாக இருக்கிறது.

**அழிவைத் தடுக்கும் முயற்சி**

## 5. ஆதாரக் கல்வி, கதர், கிராமக் கைத்தொழில்கள்

நாம் சுதந்திரம் அடைவதற்கு முன்பு, இந்த நாட்டிலிருந்து வெளி நாட்டினரை விரட்டுவதே நம்முடைய முதல் முயற்சியாக இருந்தது. சமூக, பொருளாதார சீர்திருத்தங்களைப் பற்றி அப்போதும் நாம் பேசத்தான் செய்தோம். ஆனால் அப்போது நம்முடைய பிரதான முயற்சியெல்லாம் அரசியலில்தான் இருந்தது. சுயராஜ்யம் அடைந்த பின்பு, பொருளாதார, சமூகப் பிரச்னைகள் நமக்குப் பிரதானமாயின. இந்தப் பிரச்னைகளைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். ஆனால் இப்போதுள்ள கேள்வி அப்பிரச்னைகளை எவ்வாறு தீர்ப்பது என்பது தான். காந்தியத்தைப் பற்றியும் மற்ற 'இசங்'களைப் பற்றியும் பேசுகிறோம். ஆனால், நமக்குள்ள பெரிய குறை

**செயலே பெரிது**

என்ன வென்றால் நம்மிடம் செயலைக் காட்டிலும் பேச்சுத் தான் அதிகமாக இருக்கிறது. தீர்மானங்கள் போடுவ தாலோ அல்லது சட்டம் இயற்றுவதாலோ சமூக, பொரு ளாதார சீர்திருத்தங்களை ஏற்படுத்திவிட முடியுமென நாம் நம்புகிறோம்.

கல்வியைப் பற்றி நம்முடைய கருத்துக்களெல்லாம் மிக மிக மெதுவாகச் செயல்படுத்தப்படுகின்றன. இன் னும் வேகமாக இது நடைபெற வேண்டுமென்று நான் விரும்புகிறேன். செயல் அதிகமாக இருக்கவேண்டுமென் பதே கல்வியைப் பற்றிய நமது கருத்துக்களில் உள்ள அடிப்படையான அம்சம். ஆதாரக் கல்வியில் பல நல்ல சிறப்புகள் இருக்கின்றன. ஆனால் அதனுடைய முக்கிய சிறப்பு, நீங்கள் ஒரு புத்தகத்திலிருந்து எதையோ ஒப்பிக் கிறீர்கள் என்பதல்லாமல், ஏதாவது செய்யத் தொடங்கு கிறீர்கள் என்பதுதான். சிறு குழந்தையைக் கூட ஏதா வது செய்யுமாறு தூண்டுகிறீர்கள். இது தனி இந்திய முறை என்று கூறுவதற்கில்லை யென்பது

**ஆதாரக் கல்வி**

உண்மையே. எல்லா இடங்களிலுமே புதுக்கல்வி முறை இப்படித்தான் இருக் கிறது. இந்தியாவில் மகாத்மா காந்தியால் இதற்கு ஒரு குறிப்பிட்ட உருவம் அளிக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் ஒரு வேலையைப் பற்றிப் பேசிக்கொண்டிராமல், உங்கள் அவயவங்களைப் பயன்படுத்தி அதைச் செய்வதில் இறங்க வேண்டும் என்பதுதான் தத்துவம். வெறும் பேச்சுப் பேசிக்கொண்டிருப்பவர்களைப் பற்றி நான் அலுத்துப் போய்விட்டேன். நீங்கள் எவ்வளவுதான் புத்திசாலியாக இருந்தாலும், செயலில் ஈடுபடாது ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பதால் மட்டும் ஒருபோதும் அதன் ஆழத்தைக் காண முடியாது.

சிந்தனையையும் செயலையும் இவ்வாறு இணைப் பதுதான் மிக முக்கியமானது என்று நான் கருதுகிறேன்.

செயல் இல்லாத சிந்தனை அரைகுறைப் பிரவசத்தைப் போன்றது. சிந்தனை யில்லாத செயல் அறிவீனமாகும். நாம் என்ன செய்தாலும் சரி, சிந்தனையும் செயலும் இணைந்திருக்க வேண்டும்.

**சிந்தனை, செயல் இணைய வேண்டும்**

இந்தியாவில் கதர், கிராமத் தொழில்களின் வளர்ச்சி தலையாய முக்கியத்துவம் வாய்ந்தது என்று நான் கருதுகிறேன். வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக மட்டும் இது முக்கியம் என்று நான் கூறவில்லை. மொத்தமாக இந்திய நாட்டின் முன்னேற்றத்துக்கே இது முக்கியமானதாகும்.

**கதர், கிராமத் தொழில் முக்கியம்**

இந்தியாவைப் போன்ற ஒரு நாட்டில், எவ்வளவுதான் நாம் பெரிய தொழில்களைப் பெருக்கினாலும், கிராமக் கைத்தொழில்களை விரிவுபடுத்துவதற்கு அப்போதும் நிறைய வாய்ப்பு இருக்கத்தான் செய்யும். நாட்டின் மொத்தப் பொருளாதாரத்தில் சிறு தொழில்களைக் கட்டுக்கோப்பான முறையில் எவ்வாறு இணைப்பது என்பதே பிரச்னை. பகட்டுக்காகவோ அல்லது கண்காட்சிக்காகவோ கதரையும் மற்ற சிறு தொழில்களையும் வளர்க்க வேண்டுமென்று நாம் நினைக்கவில்லை. உருப்படியான பலன் காணவே அவ்வாறு செய்கிறோம். அதே சமயம் பெரிய தொழில்களின் உதவியின்றி, இக்கால நாடு எதுவும் தன்னுடைய சுதந்திரத்தைப் பாதுகாக்க முடியாது. இந்தப் பெரிய தொழில்கள் அரசாங்கத்துக்குச் சொந்தமானவையாக இருக்க வேண்டும் அல்லது அரசாங்கக் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும்.

**சிறு, பெருந் தொழில்கள் இணைப்பு**

நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்குச் சிறிய தொழில்கள் நிறைய உதவ முடியும், என்று நாம் மனப் பூர்வமாக நம்புகிறோம். நமக்கு இன்றுள்ள மிகக் கஷ்ட மான பிரச்னை, வேலையில்லாத் திண்டாட்டம் என்பது நீங்கள் அறிந்ததே. கிராமக் கைத் தொழில்கள் வளர்ச்சி இப்பிரச்னை யைத் தீர்ப்பதில் முக்கிய தொண் டாற்றமுடியும். உண்மையைக் கூறப் போனால், ஒவ்வொரு மனிதனுக்கும் வேலை கிடைத்து அவன் தேச நிர்மாணப் பணிகளில் பங்கெடுத்துக்கொண் டாலொழிய சேம நல அரசுக்குப் பொருளே இல்லை. சரியான முறையில் ஒத்துழைப்பு இருந்தால், பெருந் தொழில்களுக்கும் கிராமக் கைத்தொழில்களுக்கும் மோது தல் ஏற்படாது என்றே நான் கருதுகிறேன்.

**ஒவ்வொருவருக்கும் வேலை**

கதருக்கும் கிராமக் கைத்தொழில்களுக்கும் போது மான அளவு அரசு உதவி அளிக்கவில்லை என்று புகார்கள் கூறப்படுவதை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இந்தத் தொழில்கள் தங்களுடைய வளர்ச்சிக்கு அரசாங்கத்தின் உதவியை மட்டுமே நம்பி இருந்தால், அவைகளிடம் சொந்தமான பலமோ அல்லது உயிர்ச் சக்தியோ இல்லை யென்றால் அவை நீடிக்க முடி யாது. இந்தப் பிரச்னையைப் பற்றியும் அதனால் மனோநிலை யில் ஏற்படக் கூடிய விளை வைப் பற்றியும் கதர், கிராமக் கைத்தொழில்களில் ஈடு பட்டுள்ள ஊழியர்கள்தான் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

**அரசு உதவியை மட்டும் நம்பி இருப்பதா ?**

சர்க்கா, கதர், கிராமக் கைத்தொழில்கள் ஆகியவற் றுக்கு காந்திஜி தனி முக்கியத்துவம் அளித்தார். சர்க் கவை மக்களுடைய புரட்சிகர பொருளாதார சின்னமாக அவர் ஆக்கினார். நம்முடைய சுதந்திரப் போராட்ட காலத்தின்போது, கதர்த் தொழிலின் பொருளாதார அம்

சத்தைக்காட்டிலும் அதனுடைய புரட்சிகர அம்சம் அதிக முக்கியத்துவம் பெற்ற கட்டம் ஒன்று இருந்தது. ஆனல் இப்போது கதர்த் தொழிலின் புரட்சிகர அம்சத்தை வலியுறுத்தி அதை வளர்க்க முடியாது. அதனுடைய பொருளாதார அம்சத்தை விரிவுபடுத்தினல் தான் அது சமுதாயத்தில் ஒரு சக்தியாகத் திகழ முடியும். கதர், கிராமக் கைத்தொழில்களை நாம் ஒரு புதுக் கண்ணேட்டத்துடன் அணுகினல் தான், அரசாங்கத்தின் உதவியை அதிகம் சார்ந்திராமல் தன்னுடைய சொந்த பலத்திலேயே கதரும் கிராமக் கைத்தொழில்களும் வளரவேண்டு மென்ற உண்மையை நாம் ஒப்புக்கொண்டால்தான், இதைச் சாதிக்க முடியும் என்பதை நான் வற்புறுத்திக்கூற விரும்புகிறேன்.

**பொருளாதார அம்சமே இன்று முக்கியம்**

நாம் உயர்ந்த குறிக்கோள்களை அடைய வேண்டுமானல், சிறந்த கோட்பாடுகளைக் கடைப்பிடிக்க வேண்டும். புத்தர் காலத்திலிருந்து, நேர்மையான செயலுக்கு காந்திஜி வழி காட்டிய இக்காலம்வரை, இந்தியர்கள் சிந்தனை உயர்ந்த கோட்பாடுகளின் அடிப்படையிலேயே இருந்து வந்திருக்கிறது. தூரதிருஷ்டியினலும், ஆன்மிக சகிப்புத் தன்மையாலும் இரக்கத்தாலும், அதிர்ஷ்டத்தாலோ துரதிருஷ்டத்தாலோ பாதிக்கப்படாத சமநிலை உணர்வாலும் தான் பெருமை கிடைக்கிறது. வேற்றுமை உணர்ச்சியினலோ இம்சையாலோ அல்லது உள் குரோதத்தாலோ நாம் உண்மையான முன்னேற்றம் அடைய முடியாது. இன்றைய உலகத்தைப் போலவே நம் நாட்டிலும் இனி இம்சைத் தத்துவம் பலன் அளிக்காது. சமாதான ஒத்துழைப்பையும் ஒருவருக் கொருவர் சகிப்புத்தன்மை கொள்வதையும் அடிப்படையாகக் கொண்டே நம்முடைய முன்னேற்றம் இருக்க முடியும்.

**உயர்ந்த சிந்தனைகள்**

# 6. சத்தியாக்கிரகம்

சமாதானம் வேண்டுமென்றால் சமாதானமான முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டியது அவசியம். இலட்சியமும் மார்க்கமும் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டவை என்பதை காந்திஜி எப்போதுமே வற்புறுத்தி வந்தார். நான் பெரிய தத்துவார்த்த விசாரணை எதிலும் இறங்கவில்லை. ஆனால், உங்களுக்கு சமாதானம் வேண்டுமென்றால், நீங்கள் சமாதான முறையில் அதற்காகப் பாடுபட வேண்டும் என்பதில் மறுப்புக்கு எதுவுமில்லை. ஏராளமான நாடுகள், பெரிய, சிறிய நாடுகள் ஆக்கிரமிப்பு முறையிலும் யுத்தபாணியிலும் சமாதானத்தைப் பற்றிப் பேசுகின்றன. இது ஒரு முகாமுக்கு மட்டும் உண்மையல்ல; எல்லோர் விஷயத்திலும் உண்மைதான். சமாதானம் என்பதற்கு யு—த்—த—ம் என்று இப்போது எழுத்துக் கூட்டுகிறார்கள். அரசியல் இராசதந்திரத்துக்கு இரண்டாம் இடம் அளித்துவிட்டு, இராணுவ மனோபாவத்தை இப்போது நமக்குள் வளர்த்துக் கொண்டிருக்கிறோம்.

**யுத்தபாணியில் சமாதானமா ?**

நாம் இந்த நாட்டில் அரசியல் புரட்சியை ஏற்படுத்தி விடுதலை பெற்றோம். இப்போது பொருளாதார மாற்றத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறோம். இவைகளுக்குச் சமமான முக்கியத்துவம் உள்ள மற்றொரு மாறுதல் இருக்கிறது. அதுதான் சமூக மாறுதல். பொருளாதார, சமூக மாறுதல்களைப் புறக்கணித்து அரசியல் மாறுதலைப் பற்றி நீங்கள் சிந்திக்க முடியாது. அரசியல் மாறுதலைப் போன்றே பொருளாதார மாறுதலும் அவசியம் என்பதைப் பெரும்பாலான மக்கள் இன்று ஒப்புக்கொள்கிறார்

கள். ஆனால் சிலரோ, "சமூக மாறுதல்" என்பதைக் குறுகிய பொருளில் கொள்கிறார்கள். அரசியல், பொருளாதார விஷயங்களிலிருந்து "சமூக மாறுதல்" என்பது வேறுபட்டதென எண்ணுகிறார்கள். சமூக வாழ்க்கைக்கு வேலி கட்டிவைத்து விடலாம் என்று கருதுகிறார்கள். வாழ்க்கை என்பது ஒரு கட்டுக்கோப்பான முழுமைத் தன்மை வாய்ந்தது. ஆதலால், சரியான மனோபாவமல்ல என்று நான் கருதுகிறேன்.

**வாழ்க்கை கட்டுக்கோப்பானது**

அரசியல் சூழ்நிலை மாறுதல் அடைந்தால், பொருளாதார கண்ணோட்டம் வேறுபட்டால், நீங்கள் விம்பினாலும் விரும்பாவிட்டாலும் சமூக சூழ்நிலையும் மாறுதல் அடையும். ஆகையால், ஒரு நாட்டில் நடைபெறும் உண்மையான புரட்சி, இந்த மூன்று அம்சங்களையும் அடிப்படையாகக் கொண்டதாய் இருக்க வேண்டும். அரசியலில் ஒரு புரட்சிவாதி, சமூக, பொருளாதாரக் கொள்கைகளில் பிற்போக்குவாதியாக இருந்தால் அவன் ஒரு முழுமையடைந்த மனிதன் அல்ல. "டாக்டர் ஜெகில், மிஸ்டர் ஹைட்" என்ற கதையில் வரும் பாத்திரங்களைப் போல அவன் வாழ்க்கையைப் பல்வேறு சிறுபகுதிகளாக வேறுபடுத்திப் பிரித்து வாழ்பவனாவான்.

தீண்டாமைப் பிரச்னையை எடுத்துக்கொள்ளுங்கள். வேதங்களிலிருந்து நான் மேற்கோள்கள் காட்ட முடியாது. ஆனால் மத நூல்கள் அவைகளை வகுத்துக் கொடுத்திருப்பதாகச் சிலர் கருதுகிறார்கள். எனினும், தீண்டாமையை ஒழித்துக்கட்டிவிட வேண்டும் என்ற முடிவுக்கு நீண்ட காலத்துக்கு முன்பே நாம் வந்துவிட்டோம். அது அநியாயமானது என்பதற்காக மட்டுமல்லாமல், காந்திஜி அடிக்கடி கூறிவந்ததுபோல், இந்த சமுதாயம் உயிர் வாழ்வதற்கே இது அவசியம் என்ற முடிவுக்கு வந்தோம். அதாவது, இந்து சமுதாயம் வாழவேண்டும்

என்னும் குறுகிய அடிப்படையில் பார்த்தாலும் இந்த முக்கிய சமூக மாறுதல் அவசியமாகிறது. மனித உறவு பற்றிய மற்ற பிரச்னைகளிலும் இதே மாதிரி நாம் சிந்திக்க வேண்டியிருக்கிறது. சொல்லப்போனால் உலகத்தின் மிகப் பெரிய பிரச்னைகளே மனித உறவு சம்பந்தப்பட்ட பிரச்னைகள்தான்—அது தனிப்பட்ட ஒரு மனிதர் மற்றொரு மனிதருடன் வைத்துக்கொள்ள வேண்டிய உறவு என்றாலும் சரி, தனிப்பட்ட மனிதர் ஒரு குழாத்துடன் கொள்ள வேண்டிய உறவானாலும் சரி, அல்லது ஒரு குழாம் மற்றொரு குழாமுடன் கொள்ள வேண்டிய உறவாயினும் சரி.

**மனித உறவுப் பிரச்னைகள்**

இந்தியாவில் உள்ள 36 கோடி மக்களுக்குத் திட்டமிட நாம் தொடங்கி யிருக்கிறோம். கொள்கைப் பிரச்னைகளைப்பற்றி நாம் ஆர அமர உட்கார்ந்து விவாதிக்கலாம். உதாரணமாக, சோஷலிசம் வேண்டுமா, தனியார் தொழில் முயற்சிக்கு இடம் அளிக்க வேண்டுமா, பொதுவுடைமை வேண்டுமா அல்லது காந்தியமுறை வேண்டுமா என்பதைப்பற்றி நாம் விவாதிக்கலாம். இதேபோல எத்தனையோ தத்துவங்களைப் பற்றிக் கூறிக் கொண்டு போகலாம். இவ்வாறு வாக்குவாதம்செய்து நம்முடைய அறிவைத் தெளிவு படுத்திக் கொள்வது வரவேற்கத் தக்கதே. கடுமையாக வாதம் செய்து கருத்துக்களைப் பரிமாறிக்கொள்வதன் மூலம் சிந்தனை வளர்கிறது. ஆனால் துரதிருஷ்டவசமாக இந்தத் தத்துவங்களுக்கெல்லாம், ஒரு காலத்தில் இருந்த திட்டவட்டமான பொருள் இப்போது படிப்படியாக மங்கி வருகிறது. ஏராளமான புதுக் கருத்துக்கள், முரண்பாடுகள், அபிலாஷைகள் ஆகியவற்றால் இவை தங்களுடைய நிலையையும் பொருளையும் இழந்துகொண்டிருக்கின்றன.

**தத்துவங்களின் தனித்தன்மை**

தற்போதைய சூழ்நிலையில் எந்த அரசாங்கமும் அஹிம்சையைப் பூரணமாகக் கடைப்பிடிக்க முடியாது என்றே எனக்குப் படுகிறது. அஹிம்சையையே கடைப் பிடிப்பது என்று நாம் உறுதிபூண்டால், நாம் தரைப் படையோ கடற்படையோ விமானப்படையோ வைத்துக் கொண்டிருக்கமாட்டோம். ஏன், ஒரு போலீசுப் படைகூட வைத்துக் கொள்ள மாட்டோம் என்று கருது கிறேன். ஆனால் இது எனக்கு நிச்சயமா கத் தெரியவில்லை. ஒருவனுக்கு ஒரு இலட்சியம் இருக்க லாம்; ஒரு குறிப்பிட்ட திசையில் கொண்டுசெல்லக்கூடிய ஒரு கொள்கையை ஒருவன் கடைப்பிடிக்கலாம். ஆயினும் தற்போதுள்ள சூழ்நிலைகளால், அந்த இலட்சியத்தைச் செயல்படுத்த முடியாதிருந்தால் சிறிதுகாலம் பொறுத் திருக்க வேண்டியதுதான்.

**அஹிம்சையும் சூழ்நிலையும்**

தாக்குதல் நடத்திய குண்டர்களிடமிருந்து காசுமீ ரைப் பாதுகாப்பதற்காக இந்திய ராணுவம் காசுமீருக்குச் செல்வதை காந்திஜி ஆதரித்தார். உண்மையில் அவர் இதை ஊக்குவித்தார். அகிம்சையில் பூரண நம்பிக்கை கொண்டிருந்த காந்திஜியைப் போன்ற ஒரு மனிதர் இப் படிப்பட்ட காரியம் செய்தது வியப்பளிக்கக் கூடியது தான். ஆகவே, தற்போது அமைக்கப்பட் டிருக்கும் முறையில், ஒரு அரசானது, தற் காப்பிற்காக இம்சையில் இறங்குவதைச் சில சூழ்நிலைகளில் அவரும் ஒப்புக்கொண் டார். தற்போதுள்ள சூழ்நிலைகளில் இந்திய அரசாங்கம் அந்த உரிமையை விட்டுக்கொடுக்க முடியாது. எனினும், நாம் தற்காப்பிற்காக மட்டுமே இம்சையைப் பயன் படுத்துவோம்:யுத்தத்தைத் தூண்டமாட்டோம்,தொடங்க மாட்டோம், அல்லது யுத்தத்தில் முடியக்கூடிய ஆக்கிர மிப்பு முறைகளைக் கடைப்பிடிக்க மாட்டோம் என்பதை முற்றிலும் தெளிவுபடுத்தியிருக்கிறோம்.

**போரிடும் உரிமை**

எந்த அரசும் சத்தியாக்கிரகத்தில் இறங்காது; இறங்கவும் முடியாது. நான் இவ்வாறு கூறும்போது, ''சத்தியாக்கிரகம்'' என்ற சொல்லைச் சாதாரணமாக வழங்கும பொருளிலேயே பயன்படுத்துகிறேன். இதற்கு விரிவான பொருள் இருக்கலாம்; ஆனால் தற்போது அது என் மனதில் இல்லை. நாம் அறிந்தவரை சத்தியாக்கிரகமானது நம்முடைய நாட்டில் அரசாங்கத்துக்கு எதிராக நடத்தப் பட்டிருக்கிறது. ஒரு அரசாங்கம் மற்றொரு அரசாங்கத்துக்கு எதிராக சத்தியாக்கிரகம் நடத்தமுடியுமா என்பது இப்போது எனக்குத் தெளிவு படவில்லை.

**நாடுகளுக்குள் சத்தியாக்கிரகம்**

நம்முடைய அரசாங்கத்தைப் பொறுத்தவரை, சத்தியாக்கிரகத்துக்கும் அதற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. இதுதான் அரசாங்கத்தின் கொள்கை. அரசாங்கத்தின் கருத்தைத் தவிர பொது ஜனக் கருத்து வேறு இருக்கலாம் என்பது உண்மையே. ஒரு கட்சி சத்தியாக்கிரகத்தை ஊட்டி வளர்க்கலாம். ஆனல் அரசாங்கம் சத்தியாக்கிரகத்துக்கு ஆதரவு அளிக்க முடியாது. சத்தியாக்கிரகம் ஒரு குறிப்பிட்ட எல்லைவரையறைக்குள் நடைபெற்றால், அது அஹிம்சையான முறையில் நடைபெறுமானல், பெரும் அளவில் இம்சையை அது தூண்டிவிடாதென்றால், அரசாங்கம் அதில் குறுக்கிடாமல் இருக்கலாம். அதிகமாகப்போனல் அரசாங்கம் செய்யக்கூடியது அதுதான். பொதுஜன சத்தியாக்கிரகத்தை அரசு அங்கீகரிக்காதிருப்பதற்கு அது தவறு என்பது காரணமல்ல. அதை நடத்தும் முறை எதிர்பாராத விளைவுகளுக்கும் பெரும் இம்சைக்கும் இடமளிக்கக்கூடும் என்பதனல்தான். சத்தியாக்கிரகம் ஆக இருக்கும் நிலையிலிருந்து விலகி, வேறு திசையில் அது

**அரசும் மக்களும் சத்தியாக்கிரகமும்**

திரும்பக் கூடிய நிர்ப்பந்தமான சூழ்நிலை ஏற்படக்கூடும். பயிற்சி பெற்ற சத்தியாக்கிரகிகள் போதுமான அளவு இருந்தால், பொதுஜன சத்தியாக்கிரகத்தையும் அவர்கள் கட்டுப்பாடான முறையில் நடத்தலாம். சத்தியாக்கிரகத் துக்கு ஆதிகர்த்தாவான மகாத்மாஜியே, இந்த இயக்கம் முழுவதற்கும் முற்றுப்புள்ளி வைத்துவிட்டு, ''இனிமேல் தனிப்பட்ட ஒருவர்தான் சத்தியாக்கிரகம் செய்வார்'' என்று கூறினர். அவருடன் ஒப்பிடும்போது நாமெல்லோ ரும் கற்றுக்குட்டிகள்தான். சத்தியாக்கிரகத்தின் முக்கிய அம்சங்களையெல்லாம் நாம் புரிந்துகொண்டுவிட்டதாகக் கூறமுடியாது. ஆனல் ஒன்றுமட்டும் தெளிவானது. எந் தப் பிரச்னையையும் அமைதியான முறையில் தீர்க்க வேண்டுமென்று நாம் விரும்பினல், (முதலில் அமைதி யானதாக இருந்தாலும், பின்னல்) இம்சையில் கொண்டு போய் விடக்கூடிய எதையும் நாம் செய்யக்கூடாது.

முன்னேற்றத்திற்கான பல வழிகள் இருக்க லாம்; பல கண்ணேட்டங்கள் இருக்கலாம். ஆனல் அடிப்படையில் இறுதியான குறிக்கோள் ஒன்ருகத் தான் இருக்க முடியும். பஞ்சீலத் தத்துவத்தின் பொருளே இதுதான். இதை மற்ருெருமுறையில் விளக்குவதாய் இருந்தால் சத்தியம் என்பது ஒரு நாட்டுக்கோ அல்லது ஒரு நாட்டு மக்களுக்கோ மட்டும் சொந்தமானதல்ல. ஒருவரே எல்லாவற்றையும் தெரிந்துகொள்ள முடியாத அளவிற்கு, அதில் ஏராள மான அம்சங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு நாடும் மக்க

**அவரவர் வழியை அவரவரே காணவேண்டும்**

ளும் தங்கள் மனச்சாட்சிப் படி சத்தியமாக நடந்து கொள்வதாக இருந்தால், தப்பித்தவறி தங்கள் சொந் தக் கஷ்டத்தின் மூலமும் அனுபவத்தின் மூலமும் தங்களு டைய பாதையைக் கண்டுபிடித்துக் கொள்ளவேண்டும்.

அப்போதுதான் அவர்கள் வளர்ச்சியடைய முடியும். மற்றவர்களை அப்படியே பின்பற்றினால் வளர்ச்சியடைய முடியாது. இவ்வாறு அப்படியே படியெடுத்தாற்போலப் பின்பற்றுவது எவ்வளவு நல்லதாக இருந்தாலும், மன வளர்ச்சியில்லாத காரியமாக இருக்கும். மனம்தான் அதை நம்மில் ஒட்டிப்போன காரியமாக்கக் கூடியது.

கடந்த சுமார் முப்பது ஆண்டுகளாக, மகாத்மா காந்தி தலைமையின் கீழ் நம்முடைய வளர்ச்சி இருந்திருக்கிறது. அவர் நமக்காக என்ன செய்தார் அல்லது செய்யவில்லை என்பது ஒரு புறமிருக்க, அவர் தலைமையின் கீழ் இந்த நாடு அடைந்த வளர்ச்சியானது உயிருள்ளதாய் இருந்தது. இந்தியாவின் சிந்தனைக்கும் ஜீவனுக்கும் பொருத்தமான வளர்ச்சி அது. ஆனால் அதே சமயம் நவீன உலகத்திலிருந்து அது தனித்து விலகியதாகவும் இல்லை; நவீன உலகத்துக்கு நாமும் பொருத்தமானவர்களானோம். புதிய சூழ்நிலைக்கேற்ப மாற்றி யமைத்துக் கொள்ளும் இப்பணி இனியும் தொடர்ந்து நடைபெறும்.

**சூழ்நிலைக்கேற்ப மாறுதல்**

வெளியிலிருந்து நாம் கற்றுக்கொள்ளும் பல விஷயங்களால் இது மாறுதல் அடைந்தாலும் நம்முடைய மனதிலிருந்தும் ஜீவனிலிருந்தும் உருவாகி வளரும் ஒரு முறை இது. இதே போன்று ஒவ்வொரு மக்களும் தமது காப்பிற்குத் தாமே பொறுப்பேற்றுக் கொள்ளவேண்டும் என்ற மிக முக்கியமான உண்மையைப் பஞ்சசீலக் கொள்கை வகுக்கிறது. இராணுவ ரீதியாகக் கொள்ளவேண்டிய பாதுகாப்பை நான் கூறவில்லை. அறிவு பூர்வமாகவும் தார்மிக ரீதியாகவும் ஆன்மிக ரீதியாகவும் நாம் முயற்சி செய்ய வேண்டியவற்றையே நான் கூறுகிறேன். பிறருடைய கருத்துக்கள் தாராளமாய் நுழைவதற்காக நம்முடைய அறிவின் கதவுகளைத் தாராள

மாகத் திறந்துவிட்டு, மற்றவர்களுடைய அனுபவத்தி லிருந்து கற்றுக்கொள்வதையும் நான் குறிப்பிடுகிறேன். இப்படிப்பட்ட முயற்சியைப் பிறர் கொள்வதானல் அதையும் அனுபவத்தோடும் நல்லுறவோடும் வரவேற்க வேண்டும்; அதில் குறுக்கிடவோ நமது கருத்தைத் திணிக்கவோ முயலக்கூடாது.

கோவாவில் சத்தியாக்கிரகம் மேற்கொண்ட சிலர், தங்களுக்கு இந்திய இராணுவத்தினரின் உதவி கிடைக் கும் என்று நம்பினர்கள்; அல்லது இவ்வாறு பிறர் அவர் களிடம் கூறினர்கள் என்று சொல்லப்படுகிறது. இதுவே தற்போதைய நிலைமை யென்ருல் சத்தியாக்கிரகத்தின் கண்ணேட்டமே மாறிவிட்டது என்பதை நீங்கள் உணரு வீர்கள். சத்தியாக்கிரகம் என்பது என்ன? லோகாயத பலத்தை எதிர்த்து, மனிதனுடைய ஆன்மா நடத்தும் போராட்டமே அது. மிகவும் சக்தி வாய்ந்த, பலன் உள்ள ஆயுதம் இது. எதிரி பின்வாங்கிச் செல்லுமாறு அது செய்துவிடுகிறது. சத்தியாக்கிரகி தனது உயிரையும் பலி கொடுக்கத் தயாராய் இருக்கிருன். சத்தியாக்கிரகத் தத்துவமானது மக்களை ஆண்மை யுள்ளவர்களாகவும் தைரியமுள்ளவர் களாகவும் செய்கிறது. எதிரியின் பலங்குலையச் செய் கிறது. ஆனல், தங்களுக்குப் பின்னல் இராணுவம் இருக் கிறது என்பதைச் சத்தியாக்கிரகிகள் அறியும்போது, நிலைமை முழுதுமே மாறுதலடைந்து விடுகிறது; அது மேலும் சத்தியாக்கிரகமாக இருப்பதில்லை.

**இராணுவத்தை நம்பி சத்தியாக்கிரகமா?**

# 7. பெருந் தொழில்களும் காந்திஜியும்

காந்திஜிக்கும் இந்தப் பெரிய தொழிலுக்கும்* என்ன சம்பந்தம் என்று சிலர் எண்ணி ஒரு வேளை வியப்படையலாம். ஏனெனில் பெருந்தொழில்கள் அவர் மனத்தைக் கவரவில்லை. கிராமத்தையும் வீட்டையும் பற்றியே அவர் அதிகம் சிந்தித்தார். ஆயினும் பெருந் தொழில்களை அவர் எதிர்த்தார் என்பது அடிப்படையிலேயே தவறான எண்ணமாகும்.

**தவறான கருத்து**

நமக்கு நல்ல அதிர்ஷ்டம் இருந்து காந்திஜி இன்று நம்முடன் இருந்திருப்பாரானால், புதிதாக இத்தொழிற்சாலை தொடங்கப்படுவதைக்கண்டு மகிழ்ச்சியடைந்திருப்பார். கிராமக் கைத்தொழில்களைப் பெருக்கவேண்டுமென்பதும் அதன் மூலம் நம் நாட்டில் உள்ள ஏராளமான கிராம, நகர மக்களுடைய வாழ்க்கைத் தரத்தைப் பொதுவாக உயர்த்த வேண்டுமென்பதும் அவருடைய முக்கிய விருப்பம். அவருடைய விருப்பம் நிறைவேறுவதற்கு, எல்லாத் தொழிற்சாலைகளையும் போலவே, இத்தொழிற்சாலையும் முட்டுக்கட்டையாக இல்லை.

காந்திஜியைப் பற்றிச் சிலர் குறுகிய, ஒரு சார்பான கருத்துக்கொள்கின்றனர். அவருடைய பல்வேறு குணங்களில் எதையுமே பூர்ணமாக நம்மில் யாரும் புரிந்துகொள்ள முடியாது. அந்த மகத்தான மனிதரைப் பூரணமாக நாம் அறியமுடியாது. இதையெல்லாம் உணராது,

* 1955இல் காந்திஜி பிறந்த தின விழாவின்போது, சென்னையில் இரயில் பெட்டி உற்பத்தித் தொழிற் சாலையைத் திறந்து வைத்துப் பேசியது.

**முழுதாக அவரை நாம் அறியமாட்டோம்**

ஓரிரண்டு அம்சங்களைமட்டும் அறிந்து அதையே வலியுறுத்திக் கொண்டிருக்கிறோம். பலர் அவர் கூறியதை எழுத்தளவில் கொண்டார்களே யொழிய அதனுடைய சாரத்தைக் கவனிக்கவில்லை; அவருடைய அடிப்படையான தத்துவம் என்னவென்பதைக் கவனிக்கவில்லையென்று நான் எண்ணுகிறேன். தம்முடைய சிந்தனை எப்படிப் போய்க் கொண்டிருக்கிறது என்பதை அவரே ஒரு சமயம் கூறியுள்ளார். அவைகளிலிருந்து நமக்குத் தெரிவதென்ன? அவருடைய மனம் ஆழமானது, விரிவானது என்பதுடன் அவருடைய சிந்தனை இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்களைப் பற்றி மட்டுமல்ல, மனிதவர்க்கம் முழுவதையும் பற்றியதாகும் என்பதுதான்.

**நீண்ட ஆராய்ச்சிக்குப் பின்**

இந்திய வரலாற்றின் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் ஒரு பலம் பொருந்திய சாம்ராஜ்யத்தை எதிர்த்து நடத்திய மகத்தான போராட்டத்தின் தலைவராக அவர் விளங்கினார். அதில் அவர் கையாண்ட சாதனங்களும் வழிமுறைகளும் அந்தப் போராட்டத்துக்கு விசேஷமாய் ஏற்றவையாக இருந்தன என்பது மட்டுமல்லாமல், தேச நிர்மாணப் பணிக்கும் ஏற்றதாய் இருந்தன. கிராமக் கைத்தொழில்களின் முக்கியத்துவத்தை அவர் வற்புறுத்தினார். அவரை இதில் குறை கூறியவர்கள் கூட, கிராமக் கைத்தொழில்களையும் அவற்றைப் போன்றவற்றையும் பற்றி அதிக நம்பிக்கை கொள்ளாதவர்கள் கூட, இப்போது மிகவும் விந்தையான முறையில் கிராமக் கைத்தொழில்களுக்காகவும் கிராமப் பகுதிகளின் வளர்ச்சிக்காகவும் பாடுபட்டு வருகின்றனர். உள்ளுணர்வால் அவர் வந்த முடிவுக்கு மற்றவர்கள் தங்கள் பகுத்தறிவைக் கொண்டு மிகக் கஷ்டப்

பட்டு ஆராய்ந்து படிப்படியாகத்தான் வரவேண்டியிருந் தது. அந்த முடிவுக்கும் இந்தத் தொழிற்சாலைக்கும்—அல் லது நாம் கட்டக்கூடிய மற்ற தொழிற்சாலைகளுக்கும் முரண்பாடு எதுவும் இல்லை. ஏனெனில், இந்த இரண்டு வழி துறைகளையும் ஒன்ருக இணைக்க நாம் முயலுகிருேம்.

**சிறு, பெருந்தொழில்கள் அவசியம்**

பெரிய தொழிற்சாலைகள் இல்லாமல் பொருளாதா ரத் துறையில் இந்தியா உண்மையான செல்வவளமோ முன்னேற்றமோ அடைய முடியாது. பெரிய தொழிற்சாலை யும், அதைச் சார்ந்தவைகளும் இல்லாது இந்திய தேசம் தன் னுடைய சுதந்திரத்தைப் பாதுகாக்க முடியாது என்று கூட நான் சொல்லுவேன். அதே சமயம் இன்னும் ஒரு கணிசமான கால அளவிற்கு, கிராமக் கைத்தொழில்களைப் பரவலாக நிறுவாமல், இந்தியாவில் பெரும் அளவில் வேலை வாய்ப்பு அளிக்கமுடியாது, செல்வ வளமும் ஏற் படுத்த முடியாது என்றும் நான் கருதுகிறேன்.

# 8. நாட்டு ஒற்றுமை

துரதிருஷ்டவசமாக, இந்திய வரலாற்றில் நீண்ட காலம் நாம் பிரிவினைமனப்பான்மை கொண்டவர்களாய் இருந்தோம்; பிரிவினைக்கு ஆளானோம். இதனால் இந்தியாவின் மகத்தான பலம் உள்நாட்டுச் சண்டையிலும், வாக்குவாதங்களிலும் பல்வேறு இன, பகுதிப் பிரிவினை உணர்ச்சிகளிலும் வீணாயிற்று. இந்திய வரலாற்றிலிருந்து நாம் கட்டாயமாகச் சிலவற்றைக் கற்றுக் கொள்ள வேண்டும்.

**ஒற்றுமையின்மை**

சிந்தனை, செயல், கலை, இலக்கியம், இசை போன்ற மனிதமுயற்சிகளில் எதை எடுத்துக்கொண்டாலும் நம் நாட்டில் பெரியோர்கள் இருந்திருக்கிறார்கள். ஆயினும், எதையும் அக்கு அக்காகப் பிரிக்கும் நம்முடைய குணத்தாலும், ஒவ்வொருவரும் அவரவர் வழியில் செல்ல விரும்புவதாலும் இந்தப் பெருமையைப் பயன்படுத்திக் கொள்ள நாம் தவறி பலவீனமானவர்களாய் இருந்திருக்கிறோம்; இங்கே வந்த வெளிநாட்டினரால் ஆக்கிரமிக்கப் பட்டு அடிமைப் படுத்தப்பட்டிருக்கிறோம்.

இங்கே வந்த வெளிநாட்டார் எவரும் இந்தியாவை ஒருபோதும் வெற்றிகொள்ளவில்லை என்று கூறுவது சரி தான். பிரிட்டிஷாரைப் பொறுத்தவரை, அவர்களிடம் எவ்வளவோ உயர்தரமான ஆயுதங்கள் இருந்தும் நிச்சயமாக அவர்கள் நம்மை வெற்றி கொள்ளவில்லை.

**யாரும் இந்தியாவை வெல்லவில்லை**

இந்தியாவில் இருந்த பிரிவினைகளை அவர்கள் பயன்படுத்திக் கொண்டார்கள், அவ்வளவுதான். இந்தியாவுக்கு வந்த மற்றவர்களும் இதையேதான் செய்தார்கள். இந்திய வரலாறு கற்பிக்

கும் பெரிய பாடம் இது ஆதலால் நாம் ஒற்றுமையாக இருக்கக் கற்றுக்கொள்ளவேண்டும். நமக்குள்ளே எத்தனை விதமான வாக்குவாதங்களும் தகராறுகளும் இருந்து விட்டுப் போகட்டும். ஒரு முடிவுக்கு வருவோமானல்—சமாதானமான முறையில் ஜனநாயக ரீதியாக ஒரு முடிவுக்கு வருவோமானல்—அதை அப்படியே கடைப்பிடிக்க வேண்டும்.

காந்திஜி நடத்திய அந்தப் பெரிய இயக்கத்தின் போது இந்தக் கொள்கையை நாம் எந்த அளவுக்குக் கடைப்பிடித்தோமோ அந்த அளவுக்கு இந்திய தேசத்தின் பலம் உருவாயிற்று. கடந்த முப்பது அல்லது நாற்பதாண்டு காலச் சரித்திரத்தை மனதிற்கொண்டே நான் இதைக் கூறுகிறேன். இந்திய வரலாற்றில் அது மகத்தான காலமாக விளங்கியது; எதிர்கால வரலாற்று ஆசிரியர்கள் அதைப் பற்றி நிறைய எழுதுவார்கள். இந்த நாற்பதாண்டு காலத்திலும் காந்திஜி நமக்கு ஒவ்வொரு கட்டத்திற்கும் தேவையான பயிற்சியை அளித்தார். நாம் தவறு செய்தபோதெல்லாம் நம்மைக் கண்டித்துத் திருத்தினர்; இந்தியாவில் எத்தனையோ வேறுபாடுகள் இருந்தாலும், பல மாநிலங்கள், சமஸ்தானங்கள், சீதோஷ்ணம், மொழி, மதம் முதலியவை இருந்தாலும் இந்தியா ஒன்றே என்பதை நமக்குக் கற்பித்தார்.

**ஒற்றுமையைக் கற்பித்தார்**

இந்தியா ஜீவனுடன் விளங்கிய அந்தப் பழங்காலத்தில், இந்தியத் தூதுக்குழுக்கள் நீண்டதூரம் சென்றிருக்கின்றன. இந்தியாவின் மதம், மொழி, கலாசாரம், பழக்க வழக்கங்கள், கலை, சிற்பம் ஆகியவற்றைத் தென்கிழக்கு ஆசியா, மேற்கு ஆசியா, மத்திய ஆசியா முழுவதும் அவர்கள் பரப்பியிருக்கிறார்கள்.

**வெளிநாடுகள் சென்ற இந்தியர்**

இதற்குப் பின்னர், இந்தியக் கலாசாரம் முன்னேற்றம் இல்லாது தேங்கி நின்ற ஒருகாலம் வந்தது. நம்முடைய நாட்டிலேயே நாம் அடைபட்டுக் கிடந்தோம்; வெளி உலகத்தை மறந்துவிட்டோம். வெளியே செல்ல நாம் அஞ்சினேம். நாம் வெளிநாடு போகக்கூடாது என்பதற்கு மத சம்பிரதாயங்களிலும் பழக்க வழக்கங்களிலும் பல தடைகளை ஏற்படுத்திக்கொண்டோம். நாம் வெளிநாட்டுக்குச் சென்றால் நம்முடைய மதத்தையும் சாதியையும் இழந்துவிடுவோம் என்பதுபோன்ற பல தடைகள் ஏற்பட்டன. சாதிகள்பற்றி மிகமிகக் குறுகிய கருத்தை நாம் வளர்த்துக்கொண்டு, எண்ணற்ற பிரிவுகளாகப் பிரிந்தோம். இதுதான் இந்தியாவின் அரசியல், கலாசார, சமூக வீழ்ச்சிக்காலம். இதனல் தான் நாம் பலவீன மடைந்தோம். வெளிநாட்டுப் படையெடுப்பாளர்கள் வந்தபோது, நாம் மிகவும் பலவீனமானவர்களாய் இருந்ததால், அவர்களை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலையில் இருந்தோம்.

**வீழ்ச்சிக்காலம்**

வரலாற்றில் ஒரு புதுத்திருப்பம் ஏற்பட்டு, நாம் இப்போது அரசியல் ரீதியாக விடுதலைபெற்றுள்ளோம். அரசியல் சூழ்ச்சிகளின் மூலம், நாம் அரசியலில் விடுதலை அடையவில்லை. சுதந்திரத்துக்கு வேண்டிய சில குணங்களை நாம் வளர்த்துக்கொண்டதால், நாம் சுதந்திரம் அடைந்துள்ளோம். நாம் கட்டுப்பாட்டை வளர்த்தோம்; ஒரு புது உத்வேகத்தை வளர்த்தோம்; தியாகம் செய்யும் திறனைப் பெருக்கினேம். இவைகளுக்கெல்லாம் மேலாக, காந்திஜி தலைமையின் கீழ் ஐக்கியமாகப் பணியாற்றப் பழகிக் கொண்டோம். இந்தக் குணங்களையெல்லாம் நாம் வளர்த்

**சுதந்திரம் அடைந்த காரணம்**

துக்கொண்டபின், நாம் சுதந்திரமடைந்தோம். நாம் இப்போது அந்த நல்ல குணங்களைப் பாதுகாப்பது மட்டுமல்லாது, அவைகளை மேலும் வளர்க்கவேண்டும்.

ஓரளவு அரசியல் இணைப்பு ஏற்கனவே ஏற்பட்டுவிட்டது; ஆனால் நான் இப்போது முயற்சிசெய்வதெல்லாம், இதைக் காட்டிலும் பலமான ஒரு இணைப்புக்காகவே. இந்திய மக்கள் மனப்பூர்வமாக ஒன்ருய் இணைக்கப்படவேண்டும். அப்போதுதான் நம்முடைய வியத்தகு வேற்றுமைகளுக்கிடையே நாம் ஒரே தேசமாக, பலம் வாய்ந்த ஒரே தேசமாக ஐக்கியமடைவோம். இந்த வேறுபாடுகளைக் கட்டாயப்படுத்தி ஒழித்துக் கட்டிவிட நான் விரும்பவில்லை. ஆனல் அவைகளுக்காக நாம் ஏமாந்து சிறுசச்சரவுகளில் ஈடுபட்டுவிடக்கூடாது என்றே விரும்புகிறேன். நாம் விரும்பாத நிலையில் கூட, மற்ருெருவருடைய கருத்தைப் பலமுறை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டியதிருக்கலாம்; அதுதான் ஜனநாயக வழி. நாற்பதாண்டுகளாகக் காங்கிரஸ் இயக்கத்தில் நாம் இவ்வாறுதான் பணியாற்றி வந்தோம்.

**மனப்பூர்வமான இணைப்பு**

காந்திஜி ஒரு எதேச்சாதிகார வாதியல்ல. அவர் தன்னுடைய கருத்தைப் பிறர்மீது புகுத்தி யிருக்கலாம். ஆனல் இவ்வாறு அவர் புகுத்தியபோதெல்லாம் அவருடைய அன்பு அபிமானத்தின் மூலமும், அவர்மீதும் அவருடைய விவேகத்தின் மீதும் நாம் வைத்துள்ள மதிப்பு மரியாதையைக் கொண்டும் அவ்வாறு செய்திருப்பார். பல சமயம் அவரிடம் நாங்கள் எங்களுடைய கருத்தை எடுத்துக்கூறி வாக்குவாதம் செய்திருக்கிருேம்; போராடியிருக்கிருேம். சில சமயங்களில், எங்களுடைய கருத்து சரியானது என்பதை அவருக்கு உணர்த்தியும் இருக்கிருேம். வியப்பளிக்கக் கூடிய பல நல்ல குணம்சங்கள்

அவரிடம் இருந்தன. பிறரிடம் உள்ள நல்லதை ஏற்றுக் கொள்ளும் தன்மை இவைகளில் ஒன்று. ஒருவன் எவ்வளவோ தீய குணங்கள் உள்ளவனாய் இருக்கலாம். ஆனால் அவனிடம் உள்ள நல்ல குணத்தைக் கண்டுபிடித்து, அந்த நல்ல குணத்தையே காந்திஜி வலியுறுத்தி வருவார். இதன் பலன் என்ன வென்றால், பாவம், அந்த மனிதன் அதற்கு மேல் நல்ல மனிதனாக இருக்கவே முயற்சி செய்வான். அவனால் அதைத் தவிர்க்க முடியாது. அவன் ஏதாவது தவறு செய்துவிட்டால் அதற்காக அவன் சற்று வெட்கமும் அடைவான்.

**யாரிடமும் நல்லதைக் கண்டார்**

மற்றவர்களிடம் தீமைகளையே நாடிச் செல்பவர்கள் அதையே காண்கிறார்கள். தனிப்பட்டவர்களுடைய வாழ்க்கையைப் போல தேசங்கள் விஷயத்திலும் இது உண்மையே. நீங்கள் ஏதாவதொரு வெளிநாட்டுக்குச் சென்றீர்களானால், நீங்கள் விரும்பாத பல விஷயங்களை அங்கு காணக் கூடும். ஆகவே மற்ற நாடுகளில் உள்ள தீயனவற்றைக் கண்டு பிடிப்பதில் நீங்கள் உங்கள் காலத்தைச் செலவிடுவீர்களா? அல்லது அவைகளில் உள்ள நல்லனவற்றைக் கண்டுபிடித்து உங்களுடைய தொடர்பினால் நீங்களும் அந்நாட்டினரும் நன்மையடைய உதவுவீர்களா?

**மனிதரைப் போலவே தேசங்களும்**

பல நூற்றாண்டுகளாக இந்தியா சகிப்புத் தன்மையையும் நல்லுறவையும் கடைப்பிடித்தும் பரப்பியும் வந்திருக்கிறது. அதன் மூலம் மனிதவர்க்கத்தின் சிந்தனை, கலை, இலக்கியம், தத்துவம், மதம் ஆகியவற்றை வளர்த்திருக்கிறது. தரை, கடல் பயணத்தின் அபாயங்களைத் தைரிய

மாக ஏற்று இந்தியத் தாயின் புதல்வர்கள் நீண்டதூரம் பயணம் செய்திருக்கிறார்கள். பிறநாடுகளை வெற்றி கொள்ள வேண்டும் என்பதற்காகவோ ஆக்கிரமிக்க வேண்டும் என்பதற்காகவோ அவர்கள் அவ்வாறு செய்ய வில்லை. சமாதானத்தின் தூதுவர்கள் என்ற முறையில் அவர்கள் சென்றிருக்கிறார்கள். இந்தியாவின் கொள்கைகளைப் பிறநாடுகளில் பரப்புவதற்காகவோ இந்தியாவின் அழகிய பொருள்களை வாணிகம் செய்வதற்காகவோ அவர்கள் வெளிநாடுகளுக்குச் சென்றிருக்கிறார்கள். இந்த ஆயிரக்கணக்கான ஆண்டு வரலாற்றில், நன்மை, தீமை ஆகிய இரண்டையுமே இந்தியா அனுபவித்திருக்கிறது. ஆயினும் இவ்வித ஏற்றத் தாழ்வு நிறைந்த அந்தக் காலத்திலும், அமைதி, சகிப்புத் தன்மை ஆகிய செய்திகளை அது மறந்துவிட வில்லை. நம்முடைய காலத்தில், நம்முடைய மாபெருந் தலைவரும் ஆசானுமாகிய மகாத்மா காந்தி இச்செய்திகளைப் பறைசாற்றினார். பொதுமக்கள் அளவிலே ஒரு சமாதானமான, ஆனால் வெற்றிகரமான இயக்கத்தை நடத்தி சுதந்திரத்துக்கு அவர் வழி வகுத்தார்.

**சகிப்புத் தன்மை, நல்லுறவு**

பல்வேறு வகைகளில் காந்திஜியைப் பற்றிய சிந்தனைகள் என் மனதில் நிறைந்துள்ளன. சில சமயம் அவை என் மனதைக் குழப்பவும் காரணமாய் உள்ளன. காந்திஜியைப் பற்றிய எண்ணம் என் மனதைக் குழப்புகிறது என்று கூறமுடியாது. எனினும், சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் அவர் எவ்வாறு நடந்து கொண்டிருப்பார் என்பதைக் கண்டுபிடிக்க நான் முயலும்போது, அவர் அவ்வித ஆலோசனை கூறியிருப்பார் என்பதை நினைத்துப் பார்க்க முயலும்போது, அவ்வித ஆலோசனையிலிருந்து நாம் எவ்வளவு கீழே போய்விட்டோம் என்பதை எண்ணும்போது நான் மனக்குழப்பமடைகிறேன். இவ்வித

சிந்தனை மற்றவர்களுக்கும் மனத்துயர் அளிக்கலாம். அவர் விரும்பிய உயர்ந்த நிலையில் அவர் வகுத்துக்கொடுத்த உயர்ந்த பாதையில் என்னால் நடக்க முடியும் என்று நான் கற்பனை செய்ய முடியவில்லை.

**மனக் குழப்பம் தரும் சிந்தனை**

எனினும் எனக்கு அடிக்கடி ஒரு சிந்தனை ஏற்படுகிறது. தற்போதைய சகாப்தத்தைச் சேர்ந்த நாம் அவர் எதிர்பார்த்த தரத்திற்கு நடக்கிறோமா? காந்திஜியைப் பற்றி வானளாவப் புகழும் அளவுக்கு அவருக்கு உண்மையாக நடந்துகொள்கிறோமா? அல்லது மனப்பூர்வமாக அல்லாமல் வெறும் வார்த்தை அலங்காரமாகப் பேசிவிட்டு, அதன்படி நடக்காமல் இருந்து விடுகிறோமா? இது மிகவும் கடினமான கேள்வி; கடினமான பிரச்னையுங்கூட. நானே என் விஷயத்தில் தீர்க்க முடியாத அளவு இது கடினமானதாக இருப்பதால், அதைப் பற்றி மற்றவர்களுக்கு நான் என்ன கூறுவதென்று எனக்குத் தெரியவில்லை.

நாம் எல்லோரும் எதிர்பார்த்ததைக் காட்டிலும் காந்திஜி நிச்சயமாக மிகப் பெரியவராக இருந்தார். அவரைப் பின்பற்றியவர்களெல்லாம் தங்களுடைய பிரச்னைகளைத் தாங்களே சிந்தித்துப் பார்த்து தங்களுடைய சொந்த முடிவுக்கு வரவும், தங்களுக்குத் தெரியும் ஒளி எவ்வளவு மங்கலானதாக இருந்தாலும் அது காட்டும் வழியில் செல்லவும் அவர் அனுமதித்தார் என்பது எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. சில சமயம் அவர் இதை ஊக்குவித்தார்; இதில் அவர்களுக்கு வழி காட்டவும் செய்தார். இந்தப் பெருந்தன்மை அவரிடம் இருந்தது. தமது முடிவை யார்மீதும் திணிக்க அவர் விரும்பவில்லை. மக்களுடைய மனதையும் இதயத்தையும் தமது வழியில் திருப்ப அவர் விரும்பினார் என்பது உண்மையே; ஆனால் இதற்காகப் பிறர் மீது தமது முடிவைத் திணிக்

கும் வழியை அவர் கையாளவில்லை. மக்கள் தங்களுடைய கருத்துக்களை அமுக்கி மறைத்து வைத்துக் கொண்டு, தான் சொல்வதையோ செய்வதையோ அப்படியே குருட்டுத்தனமாகப் பின்பற்ற வேண்டுமென்று அவர் எண்ணவில்லை. அவ்வாறு பின்பற்றக் கூடியவர்களை அவர் விரும்பவுமில்லை. ஆயினும் அவ்வளவு பெரிய மனிதர் முன்னால், வேறு தனிப்பட்ட முறையில் மக்கள் சிந்தித்து நடப்பதென்பது கடினமாக இருந்தது. அப்படிப்பட்ட மனிதர் ஒருவருடன் உங்களுக்குத் தொடர்பு ஏற்பட்டால், அவ்வாறுதான் நடக்க முடியும். ஆயினும் அவர் அதை ஊக்குவிக்கவில்லை. ஆகவே ஏதாவது பிரச்னைகள் ஏற்பட்டால், அவைகளைப் பற்றி நாமே சொந்தமான முடிவுக்கு வர வேண்டியது நமது கடமையாகிறது என்று நான் எண்ணுகிறேன். அவரிடம் நாம் கற்றுக்கொண்ட பாடத்தை மனதிற் கொண்டு சிந்தித்தே நாம் இவ்வித முடிவுக்கு வர வேண்டும் என்பது உண்மையே. ஆனால் அதே சமயம் நாமே சொந்தமாகச் சிந்தித்து எம் முடிவுக்கும் வரவேண்டும்; வேறு சந்தர்ப்பத்திலோ வேறுவிதமான சூழ்நிலைகளிலோ அவர் சொன்னவற்றைப் புகலிடமாகக் கொண்டு தப்பிக்க முயலக்கூடாது.

**சொந்தமாகச் சிந்திக்கவேண்டும்**

காந்திஜி ஒரு உயிரோட்ட முள்ள செயல் வீரர் ஆகையால் வேறு வகைப்பட்ட சூழ்நிலைகளில் அவர் என்ன செய்திருப்பார் அல்லது கூறியிருப்பார் என்பதைக் கூறுவது கடினம். பல்வேறு வகைப்பட்ட சூழ்நிலைகளிலும் ஒன்றையே குருட்டுப்பாடமாகக் கூறிக் கொண்டிருக்கக் கூடியவரல்ல அவர். சில குறிப்பிட்ட கொள்கைகளை உறுதியாகக் கடைப்பிடித்துக் கொண்டு, அரு முயற்சி செய்து, தாம் தமக்காக வகுத்துக் கொண்ட

யாத்திரையில் பூரண வெற்றி கண்டவர் அவர். ஏதாவது ஒன்று அவருக்குத் தெளிவாகப் பட்டுவிட்டால் அதிலி ருந்து அவரை யாரும் மாற்ற முடியாது. ஆனால் வாழ்க்கை யின் சிறு அம்சங்களை, மாற்ற முடியாத அடிப்படையான சத்தியம் என அவர் கருதவில்லை. வாழ்க்கை என்பது மாறுதலடையக் கூடியது, வளர்ச்சி யடையக் கூடியது என்பதையும் ஆகவே அதை வளர்ச்சி யடையக் கூடிய ஆக்க உணர்வுள்ள வழிகளின் மூலமே அணுக வேண்டுமென்பதையும் அவர் உணர்ந்தார். இந்தியாவுக் கும் மனித வர்க்கத்துக்கும் அவர் சேவை செய்த அரை நூற்றாண்டுக்கும் மேற்பட்ட காலத்தில், அவர் தாமும் வளர்ச்சியடைந்தார். பல புது பிரச்னைகளை அறிந்து புது வழியில், சிறிது மாறுபட்ட வழியில் அவர் தீர்த்திருக்கிறார். நிலைமையின் மாறுதலையறிந்து அதற்கு ஏற்ற முறையில் பிரச்னைகளை அணுகவும் அதே சமயம் தமது அடிப்படையான கொள்கைகளை விட்டுக் கொடுக்காமல் இருக்கவும் கூடிய தன்மை அவ ரிடம் இருந்தது. ஆகவே நம்மைப் போன்றவர்கள் அவரைப்பற்றி எப்படிப் பேச முடியும், அவருடைய கொள்கைப்படி வாழ்வதாக எப்படிக் கற்பனைசெய்ய முடியும்? இதுதான் எனது மனதிற்குத் தொல்லை தரும் கேள்வியாக இருக்கிறது.

**சூழ்நிலைக்கேற்ற வழி**

அவரைப் பற்றிப் பேச ஒருவர் இயற்கையாகவே ஆசைப்படலாம் என்பது உண்மையே. ஏனெனில், அவ ரைப் பற்றிப் பேசுவதே ஒருவகையில் மன நிம்மதி அளிக்கும். மகத்தான ஒன்றை நினைவுக்குக் கொண்டுவரும். அது நம் முடைய நிலையிலிருந்து நம்மை உயர்த்தி, அற்பமான சச்சரவுகளுக்கும் வேற்றுமைஉணர்வுகளுக்கும் இடமில்லாத ஒரு உயர்ந்த நிலைக்குக் கொண்டுசெல்லும்.

**நினைப்பதே இன்பம்**

**ஏதாவது முடிவுக்கு வரவேண்டியதே**

அவரைப் பற்றிச் சிந்திப்பதே நமக்கு நன்மை பயக்கும். நம்மைப்பற்றி நாமே விசாரணை செய்துகொள்ளச் செய்யும். ஆகையால் அவரைப்பற்றிச் சிந்திப்பது நல்லது. நாம் அவரைக் கண்டபோது அதுவே நமக்கு ஒரு இன்பமாக இருந்தது. அதே சமயம் இப்போது "நாம் அடிக்கடி யார் பெயரைக் கூறுகிறோமோ அவர் கூறியபடி நடந்துகொண்டோமா?" என்பதை நினைக்கும் போது, அது நமக்குச் சிறிது மனத்துயரையும் ஐயத்தையும் தருகிறது. ஆகவே ஒரு புறம் அவர் அருகில் இருப்பது நமது மனதிற்கு இன்பமளித்தது என்றாலும் மற்றொரு புறத்தில் நிரந்தரமாக மற்றொரு கேள்வி நம்மை வாட்டியது. "நாம் அவருக்குத் தகுந்த தொண்டர்கள்தானா? நாம் உண்மையற்ற முறையில் பேசி, நடித்து வருகிறோமா?" என்ற கேள்வி நம்மை வாட்டியது. அவர் உயிருடன் இருந்த போதே அவ்வளவு வாதனை இருந்திருக்குமானால், அவர் இல்லாதபோது அந்த வாதனை எத்தனை மடங்கு அதிகமாக இருக்கும் என்பதை எண்ணிப்பாருங்கள். ஆகவே அவருடைய நினைவு, இந்த நிரந்தரமான கேள்வியைக் கிளப்பிவிட்டுவிடுகிறது. அதேசமயம், வீணான கேள்விகளில் மனதைக் குழப்பிக்கொண்டிருந்தால் நமது வாழ்க்கையை நாம் சரியாக வாழமுடியாது என்பது உண்மையே. நிகழ்காலத்தில் நாம் ஏதாவதொரு முடிவுக்கு வந்தாக வேண்டும், வாழ்ந்தாக வேண்டும். நம்முடைய சொந்தப் பகுத்தறிவுக்கு ஏற்றமுறையில் இறுதியில் செயலாற்ற வேண்டியதுதான்.

இதில் மற்றொரு அம்சமும் இருக்கிறது: நம்முடைய அறிவுக்குப்பட்ட முறையில்கூடச் சரிவரச் செயலாற்றாமல் இருக்கிறோமே அதைத்தான் கூறுகிறேன். இந்த இடத்தில் தான் மற்றொரு பெருங்கஷ்டம் நமக்கு ஏற்படுகிறது.

காந்திஜி ஒரு தீர்க்கதரிசி, ஒரு பெரிய தலைவர்; ஆனால் சாதாரணமாக நாம் பார்க்கும் மற்ற அரசியல் தலைவர்களி லிருந்து - அவர்கள் எவ்வளவு பெரிய தலைவர்களாய் இருந்தாலும் சரி - அவர் மாறுபட்டவர். என்ன விளைவுகள் ஏற்பட்டாலும் அவருடைய வழியில் செல்வது என்று நாம் உறுதி பூண்டு விட்டோம். ஆகையால் அந்த விளைவுகளுக்கு ஆளாவோமே தவிர, நாம் சரியென்று கருதும் ஒன்றை விட்டுக் கொடுத்துவிட மாட்டோம். ஆனால் அரசியல் தலைவர்கள் என்று கூறப்படுபவர்கள்—"அரசியல்" என்பதை இங்கு கெட்ட பொருள் எதிலும் நான் பயன்படுத்தவில்லை; நல்ல தலைவர்களையே நான் குறிப்பிடுகிறேன். அவர்களை நீங்கள் இராஜதந்திரிகள் என்று அழைத்தாலும் சரி, அரசியல் வாதிகள் அல்லது மக்களின் தலைவர்கள் என்று அழைத்தாலும் சரி – அவர்கள் யாருக்குத் தலைமை தாங்குகிறார்கள் என்று கருதப்படுகிறார்களோ அவர்களுடனேயே செயல் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டியவர்களாய் இருக்கிறார்கள்.

**பிற தலைவர்களிலிருந்து வேறுபட்டவர்**

மக்கள் செல்லும் அளவிற்குத்தான், அத்தலைவர்கள் வழி நடத்திச் செல்லமுடியும். தலைவர் சத்தியத்தை - இங்கே சத்தியம் என்பதைக் குறுகிய பொருளில்தான் நான் பயன்படுத்துகிறேன் - உணரலாம்; ஆனால் அவர் யாருக்குத் தலைமை தாங்குகிறாரோ அவர்கள் சத்தியத்தை உணராவிட்டால், அவர் என்ன செய்யமுடியும்? அவரால் அவர்களை அதிகம் வழி நடத்திச் செல்லமுடியாது, அவர் மட்டும் முன்னேறிச்சென்றால் அது தவறாகும். அவர்களை அனுசரித்து அவர் செல்ல வேண்டுமென்றால், அந்தச் சத்தியத்தையோ அல்லது அதன் நிமித்தமாக எழுந்த செயலையோ அவர் ஒரு எல்லை வரையறைக்குள் நிறுத்திவைக்க வேண்டும். ஆகவே, எதைச் செய்யவேண்டும் என்பதற்

கும், ஒரு குறுகிய எல்லை வரையறையுள்ள சூழ்நிலைகளில் என்ன செய்யமுடியும் என்று நாம் உணருகிறோமோ அதற்கும் இடையே, ஒரு சமரசம் காணும் பிரச்னை தலைவருக்கு ஓயாது தொல்லை அளித்துவரும்.

காந்திஜி உயர்ந்த கொள்கைகள் உள்ள மனிதர், சத்தியத்தின் பக்தர் என்பது மட்டுமல்லாமல், ஒரு வகையில் மக்களின் நாடியை நன்கு அறிந்தவருமாவார். அவர் மக்களைப் பூரணமாக அறிந்திருந்தார். அவர்களில் ஒருவராக அவர் வாழ்ந்தார். அவர் கூறிய அதிசயங்களை, அவர்களால் நடத்திக்காட்டமுடியும் என்று நம்பினார். அவர்களும் அவைகளை நடத்திக் காண்பித்தார்கள். முற்றிலும் சாதிக்க முடியாத ஒன்றைச் செய்யுமாறு அவர்களை அவர் கேட்டுக் கொள்ளவில்லை என்று நான் எண்ணுகிறேன். யாராவது ஒரு தனிப்பட்ட மனிதரைக் கடினமான கட்டுப்பாட்டின்படி நடந்து கொள்ளுமாறு அவர் கூறியிருக்கலாம். ஆனால் மொத்தமாக மக்களை அவர் அவ்வாறு கேட்டுக்கொள்ளவில்லை.

**விட்டுக்கொடுக்குந் தன்மை**

அதே சமயம், அவர் தவறு என்று எதைக் கருதினாரோ அதனுடன் இணங்கிப்போவது என்பது அவரிடம் ஒருபோதும் இல்லை. ஆயினும், இப்பரந்த உலகில், அன்றாடப் பிரச்னைகளில் விட்டுக் கொடுத்துப் போகாத அரசியல் தலைவர் யாருமே இல்லை-அவர் எவ்வளவு பெரியவராக இருந்தாலும் சரி-என்பதை மறுக்க முடியாது. சிறு பிரச்னைகளில் வேண்டுமானால் இவ்வாறு விட்டுக் கொடுத்துப் போகலாம். ஆனால் சிறு பிரச்னைகளில் விட்டுக்கொடுத்துப் போகும் பழக்கம் உங்களுக்கு ஏற்பட்டால், பெரிய விஷயங்களிலும் நீங்கள் சில சமயம் இவ்வாறு செய்ய நேரிடலாம். இது கொஞ்சங் கொஞ்சமாக வழுக்கிவிட்டுவிடும். ஒரு ஜனநாயக சமுதாயத்தில் விட்டுக்கொடுத்துப் போகவேண்டியது அதிக அவசியமான

தாய் இன்றியமையாத அம்சமாய் இருக்கிறது என்பது விந்தையே. ஒரு ஜனநாயக அமைப்பில் தலைவராய் இருப்பவர், அவர் மக்களை வழி நடத்திச் செல்கிருர் என்பது மட்டுமல்லாமல், மக்களால் அவரும் வழிநடத்திச் செல்லப்படுகிருர் என்பதே இதற்குக் காரணம். நம்மில் பலர் எதிர்த்துச் சமாளிக்க வேண்டிய போராட்டமாய் இருப்பதால் நான் இதை உங்களுக்குக் குறிப்பிட்டுச் சொல்கிறேன்.

உலகப் பிரச்னைகளையோ அல்லது நம்முடைய நாட்டுப் பிரச்னைகளையோ எதிர்த்துச் சமாளிப்பதில் நிறையக் கஷ்டம் இருக்கிறது. திகிலடையச் செய்யக்கூடிய அளவு கடினமான பிரச்னைகளாக இன்று அவை இருக்கின்றன. நம்மிடம் உள்ள ஆண்மைக்கு அவை ஒரு சவாலாக இருக்கின்றன. அவைகளால் விளையக்கூடிய கஷ்டம் ஒரு புறம் இருக்க, வேறு ஒரு சூழ்நிலையில் காந்திஜி சொன்ன அல்லது செய்தவற்றுக்கு இது பொருந்துமா என்று அவைகளை ஒப்பிட்டுப் பார்க்கும் மற்ருெரு கஷ்டமும் இருக்கிறது.

**நிலையான முக்கியம் உள்ள ஒன்று**

காந்திஜியின் வாழ்க்கை கலை அம்சம் நிறைந்தது; அதில் அபஸ்வரம் என்பதில்லை. அவர் சொன்னவை அந்தந்த இடத்துக்குப் பூரணத்துவம் வாய்ந்தவையாகவே விளங்கின. ஆயினும் இந்தச் சூழ்நிலையிலோ அல்லது வேறு சூழ்நிலையிலோ அவர் சொன்ன நூற்றுக்கணக்கான விஷயங்களை நான் இங்கு குறிப்பிடவில்லை. ஒரு குறிப்பிட்ட காலத்தில் அக்காலத்திலிருந்த ஒரு குறிப்பிட்ட பிரச்னையைத் தீர்த்து வைத்த பெருந்தலைவர் அவர். பிற்காலத்தில் அப்பிரச்னைக்கு அதிகமான முக்கியத்துவம் இல்லாது போகலாம். ஆனல் அவருடைய வாழ்க்கையில் நிரந்தர சத்தியத்தைப் போன்று நிலையான முக்கியத்துவம் ஒன்று இருந்தது.

காந்திஜி சொன்ன விஷயங்களில் அல்லது செய்த காரியங்களில் ஒரு சிலவற்றின்மீது மட்டும் நம்மில் சிலர் சில சமயம் பற்றுதல் வைத்திருக்கிறோம். இவைகள் முக்கியமானவையாக இருக்கலாம்; அவர் சொன்ன மற்ற சில விஷயங்களைப் போல இவை முக்கியம் இல்லாதவை யாகவும் இருக்கலாம், ஆனால் எப்போதுமே, ஆசான் கற்பித்த முக்கிய விஷயங்களை மறந்து விட்டு, சிறு சிறு விஷயங்களில் ஒருவர் ஈடுபாடு கொள்ளும் அபாயம் இருந்து கொண்டுதான் இருக்கிறது. சீடருடைய அறிவுத் திறனுக்கு ஒரு எல்லையிருப்பதால் இது தவிர்க்கமுடியாததுங்கூட. அத்துடன் ஆசானின் பெருமையால் கவரப்பட்டு அவர் கூறிய பல சிறு விஷயங்களில் மூழ்கிவிட்டபின் வெளிக் கிளம்பி வந்து பெரிய விஷயங்களைக் காண முடியாதவராகிறார்.

**சிறிதில் மூழ்கிப் பெரிதை மறைத்தல்**

உண்மை என்ன? கடவுள் தன்மை பொருந்திய மனிதர் ஒருவர் இந்திய மண்ணில் நடந்து திரிந்தார். அவருடைய பாதம் பட்டதால் இம்மண் புண்ணியம் பெற்றது. இந்திய மண்ணை மட்டும் அவர் புனிதப்படுத்தவில்லை; நம்முடைய மக்களின் மனதையும் உள்ளத்தையும் மாற்றினார்; தங்களை மிகவும் கெட்டிக்காரர்கள் என்று நினைத்துக் கொண்டிருந்தவர்களைக் காட்டிலும் தாழ்ந்த நிலையிலும் ஆதரவின்றியும் ஏழைகளாகவும் இருந்த மக்களை அதிகம் மாற்றினார். ஆகையால் அவர் வரைந்த சித்திரமே சரியான சித்திரம். இந்தியாவில் தாழ்ந்த நிலையில் உள்ள மக்களைப் பொறுத்த அளவில், தங்களைப் பற்றிச் சிந்தித்து தங்களுக்காகப் பணியாற்றி, தங்கள் வாழ்க்கையில் சிறிது நம்பிக்கையையும் மகிழ்ச்சியையும் ஏற்படுத்திய ஒரு மாபெரும் மனிதர் வரைந்த சித்திரம் அது.

**இந்திய மண் புனிதமடைந்தது**

மற்றவைகளுக்கெல்லாம் மேலாக இந்தச் சித்திரத்தையும், அவருடைய அடிப்படையான கொள்கைகளையும் நாம் மனதிற் கொள்வது நல்லதாகும். "இலட்சியத்தைக் காட்டிலும் மார்க்கமே அதிக முக்கியமானது", "தவறான வழி மூலமாகவும் தவறான சாதனங்கள் மூலமாகவும் நாம் அடைய முயலும் எந்த இலட்சியமும் சரியானதாக இருக்க முடியாது", என்றெல்லாம் அவர் சொன்னார். குருட்டுப் பாடம் செய்ததுபோல் ஏதோ ஒன்றை இப்போது நான் ஒப்பித்துக் கொண்டிருக்கிறேன்.

**வாழ்க்கையில் தர்ம சங்கடநிலை**

ஆயினும் நம்முடைய வாழ்க்கையில் ஏற்படும் பல சிறு விஷயங்களில் இவைகளைக் கடைப் பிடிப்பது மிக மிகக் கடினமாக இருக்கிறது. வெள்ளை எது, கறுப்பு எது என்று தெளிவாகப் பார்த்துத் தேர்ந்தெடுக்கக் கூடிய சந்தர்ப்பங்கள் வாழ்க்கையில் மிக மிக அபூர்வமாகத்தான் ஏற்படுகின்றன. இவைகளுக்கு இடைப்பட்ட பல்வேறுவிதமான பழுப்பு நிறங்கள் தான் அடிக்கடி தென்படுகின்றன. எனினும், கொள்கையை மனதிற் கொள்வது நல்லது. வழுக்கிக் கீழே விழுந்து விடாமல் அது நம்மைப் பாதுகாக்கும்.

# முடிவுரை

சுதந்திரம் அடைந்ததன் மூலம், நம்முடைய நீண்ட யாத்திரையின் ஒரு பகுதியை நாம் முடித்துவிட்டோம். ஆனால் இன்னும் நாம் இந்த யாத்திரையின் இறுதியை அடையவில்லை. இப்போது நாம் மேற்கொண்டிருக்கும்

**காந்திஜியை நினைவுகூர்வோம்**

யாத்திரை இத்தேசத்தை நிர்மாணிக்கும் யாத்திரையாகும். ஆகவே இந்த நாளன்று* நாம் ஆரம்பத்தில் வகுத்துக் கொண்டிருந்த குறிக்கோள்களை மீண்டும் ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, நம்முடைய பலத்தின் உற்பத்தி ஸ்தானமாகவும் ஜீவ ஊற்றாகவும் விளங்கிய காந்திஜியை நினைவுகூரவேண்டும்.

எந்தத் தேசத்திற்கும் முதற் கடமை தன்னுடைய சுதந்திரத்தைப் பலப்படுத்துவதும் பாதுகாப்பதும்தான். சுதந்திரத்திற்கு இரண்டாம் இடம் அளித்து விட்டு, மற்ற விஷயங்களுக்கு முதல் முக்கியத்துவம் அளித்தால், நாம் எல்லாவற்றையும் இழந்துவிடுவோம். நம்முடைய முதற் கடமை இந்தியாவின் ஐக்கியத்தைப் பாதுகாப்பதும் நம் நாட்டைச் சுபிட்சமடையச் செய்வதுமாகும். இந்த அளவுகோலைக் கொண்டுதான் எதையும் நாம் அளக்க வேண்டும். நம்மில் யாராவது ஒருவர் இதை மறந்து மற்றவைகளுக்கு அளவுக்கு மீறிய முக்கியத்துவம் அளித்துவிட்டால், மொத்தமாக நாட்டின் நலனை மறந்து ஒரு பகுதியின் உரிமையை மட்டும் வலியுறுத்திக் கொண்டிருந்தால், பொழுது போக்கு மாதிரி ஒரு கொள்கையிலிருந்து மற்றொரு கொள்கைக்கு மாறிக் கொண்டிருந்

---

* 1960-ஆம் ஆண்டு சுதந்திர தினம்.

தால், நம்முடைய நாட்டின் நலனைக் காட்டிலும் நமது வகுப்பு அல்லது மொழியின் நலனைப் பிரதானமாகக் கருதினால், நாம் நிச்சயமாக அழிந்து போவோம். இவைகளெல்லாம் அதற்கு உரிய இடங்களில் நல்லவை தான் என்பதில் ஐயமில்லை. நம்முடைய நகரத்தின் மீதோ அல்லது மாநிலத்தின் மீதோ நாம் பற்றுக்கொள்வதில் தவறு எதுவும் இல்லை. ஆனால் நம்முடைய நாட்டின் நலனுக்கு மேலாக நமது குடும்ப, நகர, மொழி, வகுப்பு, மாநில நலனை நாம் கொண்டோமானால், நமது நாடு சீர்கேடு அடையும் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. இத்தவறுகளை மீண்டும் நாம் செய்தோமானால், நம்முடைய நாடு நிச்சயமாக மறுபடியும் வீழ்ச்சியடைந்து விடும்.

**நாட்டின் நலனே பெரிது**

சுதந்திரம் பெறுவதற்காக அரை நூற்றாண்டுக்கு மேல் நாம் செய்த மகத்தான தியாகங்களை நாம் ஞாபகத்திற்கொள்ள வேண்டும். காந்திஜி தலைமையின் கீழ், அமைதியான சத்தியாக்கிரகம் என்ற ஈடு இணையற்ற ஆயுதத்தின் உதவியைக் கொண்டு நமது மக்கள் இந்நாட்டை எவ்வாறு உருவாக்கினார்கள், பலப்படுத்தினார்கள் என்பதையும் நாம் நினைவிற் கொள்ள வேண்டும்.

**தியாகத்தை மறக்க வேண்டாம்**

சுதந்திரம் பெறுவது அவ்வளவு பெரிய வேலையாக இல்லை; எப்படியும் நமக்குச் சுதந்திரம் வந்திருக்கும். நம்முடைய ஐக்கியமும் உறுதியும் கடினமான வேலையும் தான் நமக்குச் சுதந்திரத்தைப் பெற்றுத் தந்தன. நம்முடைய சுதந்திரத்தின் விரோதிகள் நமக்குள்ளே இருக்கிறார்களே யொழிய, வெளியில் இல்லை. நம்முடைய மனதையும் இதயங்களையும் சுத்தமாகவைத்துக்கொண்டு,

ஒன்றுபட்டுப் பணியாற்றினல், எந்த விதமான அபாயமும் வெளியிலிருந்து நம்மை வந்து அணுக முடியாது. கடந்த காலத்தில் வெளிநாடுகளிலிருந்து மக்கள் வந்து நம்மை வெற்றி கொண்டதற்கெல்லாம் காரணம், நம்முடைய உள் பலவீனமும், ஒற்றுமையின்மையும், சிறுமைத்தனமும்தான் என்பதை மறந்துவிடக் கூடாது. அவர்கள் நம்முடைய உள்நாட்டுப் பலவீனத்தால் வெற்றி கொண்டார்களே யொழிய, அவர்களுடைய சொந்த பலத்திஞல் வெற்றி கொள்ளவில்லை. அவர்களை இங்குக் கொண்டு வந்ததே நம்முடைய அறிவீனம்தான்.

**நாம் முன்பு அடிமையானதேன்?**

இதே பலவீனத்தின் அறிகுறிகளை, இதே அறிவீனத்தின் அடையாளங்களை இப்போது நாம் மீண்டும் காண்கிரும். நாடு முழுவதற்கும் நாம் விசுவாசமாய் இருக்க வேண்டுமென்பதை மறந்து, ஒரு மொழி அல்லது மாகாணத்தின் விஷயத்தில் அளவுக்கு மீறிய அக்கறை காட்டுகிரும். ஆகவே ஒவ்வொரு இந்தியனும் தன்னுடைய இதயத்தைத் தானே சோதித்துக் கொள்ளவும், "நான் தேசத்திற்கு ஆதரவாய் இருக்கிறேஞ அல்லது ஒரு குறிப்பிட்ட பிரிவுக்கு ஆதரவாய் இருக்கிறேஞ?" என்ற கேள்வியைத் தனக்குத் தானே கேட்டுக் கொள்ளவும் வேண்டிய காலம் வந்துவிட்டது. இதுதான் நம்முடைய காலத்தின் சவால்; ஒவ்வொரு ஆணும் பெண்ணும் குழந்தையும் எதிர்நோக்க வேண்டிய அறைகூவல்.

**இதய சோதனை அவசியம்**

நம்மைச் சுற்றியுள்ள உலகத்தையும் எல்லாப் பக்கங்களிலிருந்தும் நமக்கு வரக்கூடிய அபாயங்களையும் நாம் மறந்துவிடுகிரும். இப்போதுகூடப் பெரிய

வல்லரசுகள், மொத்த மொத்தமாக மக்களை அழிப்ப தற்கான ஆயுதங்களை உற்பத்தி செய்து போருக்குத் தயாராகிக் கொண்டிருக்கின்றன. இத் தீ எப்போது நம்மையும் கவ்விக்கொள் ளும் என்பதை யாரும் கூறமுடியாது. ஆனால், நம்முடைய ஐக்கியத்திற்கு ஏற் படக் கூடிய இந்த அபாயங்களையெல்லாம் நாம் முற்றி லும் மறந்து, சிறு சிறு சண்டைகளில் ஈடுபட்டுக் கொண் டிருக்கிறோம்.

**அபாயங்களை மறந்தோம்**

எதிர்கால வரலாற்று ஆசிரியர்கள் நம்முடைய காலத்தைப் பற்றி எழுதும்போது, இந்தியாவில் பிறந்த அந்தப் பெரிய தலைவரைப் பற்றி எழுதுவார்கள். அடிமை யாக இருந்த மக்கள் ஒத்துழைப்புடன் பணியாற்றி அவர் களைப் பிரிவினை செய்த வேறுபாடுகளை அகற்றவும், கீழான நிலையில் இருந்த அரிசனங்களை உயர்த்தவும் அவர் எவ்வாறு நாட்டைப் பயிற்றுவித்தார் என்பதைப் பற்றி எழுதுவார்கள். இமயத்திலிருந்து கன்னியாகுமரி வரை வாழ்ந்த மக்கள் எவ்வாறு நீண்ட தூக்கத்திலிருந்து விழித்தெழுந்து தலை நிமிர்ந்து நடந்தார்கள், காந்திஜி தலைமையின் கீழ் அவர்கள் எவ்வாறு தாம் சுதந்திரம் அடைந்ததுடன் பிறநாடுகளின் சுதந்திரத்துக்கும் உதவினார்கள், நூற்றுக் கணக்கான ஆண்டுகளுக்குப் பின்பு எவ் வாறு இந்தியா தனது ஒளிக் கிரணங்களைப் பரப்பியது, தன்னுடைய புராதனக் குரலுடன் பேசியது, எப்படி உலகமெல்லாம் அதன் குரலைக் கேட்டுப் பாராட் டியது என்பதைப் பற்றியெல்லாம் எழுதுவார் கள். இம் மகத்தான புராதன பாரம்பரியத்தை உதறித் தள்ளிவிட்டு, கீழ்த்தரமாகப் போய், நமக் குள்ளேயே மதத்தின் பெயராலும் சாதி, வகுப்பு, மாகாணம் ஆகியவற்றின் பெயராலும் நாம் சண்டையிட்

**வரலாற்றுப் பெருமை**

டுக் கொண்டால், உலகம் நம்மைப்பற்றி என்ன நினைக்கும்? இந்தியாவின் பெருமையை நாம் தவருகக் கணக்குப்போட்டுவிட்டோம் என்றல்லவோ எண்ணும்?

இந்த உலகத்தில் அநேக தீமைகளும் பலவீனங்களும் இருக்கின்றன. ஆனால் இவைகளிலெல்லாம் மிகப் பெரிய பலவீனம், மிகப்பெரிய தீமை அச்சம்தான். மற்ற தீமைகளுக் கெல்லாம் மூலகாரணமாக இருப்பது அச்சமே. அச்சத்தினல் பாதிக்கப்பட்டுள்ள தனிப்பட்ட மனிதர் அல்லது தேசத்துக்குப் பல தடங்கல்கள், முட்டுக் கட்டைகள் இருக்கும். அதற்கு இடமளித்தால் ஒரு போதும் தலை நிமிர்ந்து நிற்கமுடியாது.

**ஏன் அச்சம்?** காந்திஜியிடமிருந்து நாம் பலம் பெற்ருேம். நம் மனதிலிருந்த அச்சத்தையெல்லாம் நீக்கி, ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை எதிர்த்து ஐக்கியமாகவும் அச்சமில்லாமலும் போராடுவதற்குக் கற்பித்தவர் அவரே. ஏன் நம்முடைய மக்கள்—அவர்கள் வங்கத்தில் இருந்தாலும் சரி, அசாமில் இருந்தாலும் சரி—ஒருவருக்கொருவர் அச்சங் கொள்ளவேண்டும்? வங்கத்தையோ அசாமையோ காட்டிலும் இந்தியா பெரியது என்பதை ஏன் அவர்கள் மறக்கிருர்கள்?

எழுத்தறிவில்லாதவர்களும் சிறுபுத்தி படைத்தவர்களும்தான் ஒரு இந்திய மொழியை மற்ருெரு இந்திய மொழிக்கு எதிராக வைத்துப் பேசுவார்கள். ஒரு மொழி மற்ருெரு மொழியைக் காட்டிலும் உயர்ந்தது என்று கூறுவார்கள். புத்திசாலித்

**மொழிச் சண்டை விவேக மற்றது** தனம் உள்ளவர்கள், மொழிச் சண்டைக்கு இடம் அளிக்காமல் மற்ற மொழிகளைக் கற்க முயலுவார்கள். அந்தோ, எவ்வளவு பெரிய குட்டையில் நாம் விழுந்துவிட்டோம். நம்முடைய நாடு பெரிய நாடு. அதனுடைய நீண்ட வரலாற்றில் நல்ல விஷயங்களும் இருக்கின்றன,

தீய விஷயங்களும் இருக்கின்றன. நாம் இப்போது ஒரு புதிய சகாப்தத்தில் வாழ்கிறோம். நம்முடைய மனம் புத்துணர்ச்சியுடன் விளங்குகிறது; நமது உடம்பில் புதுபலம் இருக்கிறது. ஆயினும் பழைய முரண்பாடு களும் சச்சரவுகளும் மீண்டும் நம் மத்தியில் தோன்றி நம்மை இறுகக் கட்டத் தொடங்கி விட்டன.

நம்மைச் சுற்றியுள்ள உலகத்தை நாம் பார்ப்போம். சர்வதேச நிலைமை அபிவிருத்தி அடைந்து கொண்டு வரு கிறதென்று நாம் எண்ணினோம். ஆனால் அது உண்மை யில் மேலும் மோசமடைந்திருக்கிறது. ஒருவருக்கெதிராக ஒருவர் பட்டாக் கத்தியைச் சுழற்ற ஆரம்பித்திருக்கி றார்கள். இவ்வித நிலைமையில், நம்மிடம் குறுகிய நோக் கம் இருந்தால், ஒற்றுமையின்மை ஏற்பட்டால், நாம் பல வீனமுற்று வீழ்ச்சியடைந்து விடுவோம். நம்முடைய கண் களையோ அல்லது மனதையோ நாம் மூடிவைத்துக் கொள்ளக் கூடாது. இந்தியாவில் இவ் வளவு பெரிய சக்தியை உருவாக் கிய அந்த மனிதரை, நம்மை ஒற்றுமைப்படுத்தி நமக்கு சுதந்திரம் வாங்கித் தந்தாரே அவரைக் குறிப்பாக நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அவருடைய பெயரை நினைவிற் கொள்வதோ அல்லது திருப்பித் திருப் பிச் சொல்வதோ மட்டும் போதாது. அவருடைய போதனைகளை மனதிற்கொண்டு, இந்த நாடு வளமடைய உதவவேண்டும்.

**காந்திஜி போதனைகளை மறக்க வேண்டாம்**

இந்தியா ஒரு சிறிய நாடல்ல. இன்னும் நீண்ட காலத்துக்கு அது சிறு சச்சரவுகளிலோ சிறு பிரச்னைக ளிலோ ஈடுபட்டுக்கொண்டிருக்க முடியாது. அது தலை நிமிர்ந்து முன்னேறிச் செல்லவேண்டும் அல்லது வீழ்ச்சி

யடைய வேண்டும். இந்த இரண்டில் ஒன்றுதான் இந்தியாவின் தலைவிதியாக இருக்கும்.

**முன்னேறுவோம்**

இடைவழி எதுவும் இல்லை. நம்முடைய நாட்டின் வீழ்ச்சிக்குக் காரணமான கீழான வழி முறைகளை நம்மில் யாரும் கடைப்பிடிக்கும் காலம் போய்விட்டது. ஆகவே நம் முன் ஒரே ஒரு வழிதான் இருக்கிறது—அணிவகுத்து, கைகோர்த்து, தலை நிமிர்ந்து முன்னேறுவோம்; வழியில் இருக்கும் முட்டுக்கட்டைகளையும் தடங்கல்களையும் தூள் தூளாக்குவோம்.